# திருப்பாவை

(ஒரு புதிய திறவுகோல்)



★

பி. ஸ்ரீ.

★

விலை 30 காசு

அமுத நிலையம் பிரைவேட் லிமிடெட்
தேனாம்பேட்டை :: சென்னை-18

அமுதம் (மலிவு) வரிசை—32. உரிமை பதிவு
முதற் பதிப்பு: டிசம்பர்-1959; இரண்டாம் பதிப்பு: டிசம்பர்-1960

## பொருளடக்கம்



நேஷனல் ஆர்ட் பிரஸ், 91, மவுண்ட் ரோடு, சென்னை-18






# திருப்பாவை

## பாவை பிறந்த கதை

கொஞ்ச காலமாகத் தமிழ் நாட்டில் திருப்பாவை - திருவெம்பாவை மாநாடுகள் நடைபெற்று வருவதை நாம் நன்கு அறிவோம். இம் மாநாடுகளை ஒட்டி இப்பாவைப் பிரபந்தங்களைக் குறித்த சொற்பொழிவுகளும் நடைபெறுகின்றன. பாவைப் பாடல்களைப் பாடுவோருக்குச் சம்மானம் வழங்கப்படுவதையும் காண்கிறோம்.

குழந்தைகள் நாவில் அருள் சுரக்கும் பாவை நடமிட வேண்டும் என்பதைக் காஞ்சி காமகோடி பீடத்து ஸ்ரீ சங்கராசாரிய சுவாமிகள் வற்புறுத்தி வருகிறார்கள். இவர்களுக்குப் பாவைப் பிரபந்தங்களில் உள்ள ஈடுபாடு ஒருவகை மறுமலர்ச்சியைத் தோற்றுவித்து, நாடெங்கும் பாவை விழாவைப் பக்தி விழாவாகவும் கலை விழாவாகவும் கொண்டாடச் செய்திருக்கிறது என்பது பிரசித்தம். சமய அடிப்படைக் கருத்துக்களை வற்புறுத்தி ஒற்றுமையை வளர்த்துப் பிணக்குகளைத் தீர்த்துக் கொள்வதற்கு, திருப்பாவை – திருவெம்பாவை விழாக்கள் பெரிதும் பயன்படும் என்பது ஆசாரிய சுவாமிகளின் திருவுள்ளம்.

திருப்பாவையும் திருவெம்பாவையும் தமிழர்களுக்குக் கிடைத்திருக்கும் அருமையான பொக்கிஷங்கள்; தமிழ் இலக்கியப் பூங்காவிலே தெய்விக மணம் கமழும் இரண்டு இன்னிசைப் பூங்கொத்துகள். ஒரு காலத்தில் இவற்றின் மணம் சயாம் முதலான வெளிநாடுகளிலும் கமழ்ந்தது என்று தெரிய வருகிறது.

பாவை நோன்பு ஒரு பழமையான நோன்பு; திருப்பாவையும் திருவெம்பாவையும் தோன்றுவதற்கு முன்பே, தமிழர்கள் நெடுங்காலமாக வழி வழியாக அனுஷ்டித்து வந்த நோன்பு. 'தொல்பாவை' என்று நாதமுனிகளுக்குப் பின் தோன்றிய உய்யக்கொண்டார் என்ற ஆசாரியர் குறிப்பிடுகிறார். 'மேலையார் செய்வனகள்' என்று கூறி ஆண்டாளும் இந்த நோன்பை அனுஷ்டித்த தமிழ் முன்னோர்களைப் பெருமையாகக் குறிப்பிடுகிறாள். பாவை நோன்பு நோற்கும் இடத்தைப் பாவைக் களம் என்கிறாள்.

'பாவை' என்ற சொல்லுக்குப் பல பொருள்கள் உண்டு. 'கண்ணின் பாவை' என்கிறோம். பதுமை என்ற பொருளு'

உண்டு. 'பாவை' சித்திரத்தையும் குறிக்கும். சித்திரப் பதுமை போன்ற பெண்ணும் 'பாவை'தான். 'பாவை' நோன்பு என்றும் பொருள்படும். முற்காலத்தில் நாட்டிலே பஞ்சம் வந்தால் கன்னிப் பெண்கள் ஆற்றங் கரையில் அல்லது குளக்கரையில் மணலால் பதுமை அமைத்து நோன்பு நோற்றுத் தொழுவதுண்டு. பனிநீராடித் தொழுவது பாவை நோன்பின் ஒரு முக்கிய அம்சம்.

மழையே! மழையே! வாவா

என்று குழந்தைகள் பாடுகிருர்கள் அல்லவா? இந்த முறையில் குழந்தை உள்ளத்தோடு நோன்பு நோற்கும் கன்னிப் பெண்களும் மழையை அழைப்பார்கள். கூவி அழைப்பார்கள் என்றும், பாடி அழைப்பார்கள் என்றும், 'மழையே! நீ பெய்துதான் ஆகவேணும்!' என நியமிப்பார்கள் என்றும் கருதலாம்.

மணலால் பிடித்த பாவையை ஒரு பெண்தெய்வமாக வழி பட்டார்கள்; தேவியாக வழிபட்டார்கள். தேவியின் அருளால் மழை பெய்து நாடு செழிக்கும் என்பது நம்பிக்கை. நல்ல கணவரை அடைய வேண்டும் என்றும் கன்னிப் பெண்கள் இந்த நோன்பை நோற்பார்கள். இந்தப் பழந்தமிழர் வழக்கம் இன்றும் மலேயாளம் முதலிய பிரதேசங்களில் உருமாறிச் சிதைந்து காணப்படுகிறது. ஏன்; சயாம் நாட்டில்—தமிழகத்திலிருந்து சுமார் இரண்டாயிரம் மைல்களுக்கு அப்பால் உள்ள அந்த வெளிநாட்டிலும்—திருப் பாவை - திருவெம்பாவைப் பாடல்கள் வழங்கி வந்த சின்னத்தை அந்த நாட்டார் கொண்டாடி வரும் (அல்லது கொண்டாடி வந்த) ஒரு தேசிய விழாவில் காண்கிருேம்.

பாவையர் பாவை பிடித்து வைத்துக் கொண்டாடிய பாவை நோன்பை ஒட்டி எழுந்ததுதான் ஆண்டாளின் திருப்பாவைப் பிரபந்தம். பாவை பாடிய பாவை என்று ஆண்டாளைக் குறிப்பிடலாம். இந்தப் பாவைப் பிரபந்தத்திலும் நாடு செழித்தல், நல்ல கணவனை அடைதல் என்ற இரட்டைக் கருத்தைக் காண்கிருேம். கண்ணனையே தலைவனாக அடைய விரும்புகிருர்கள் கோபியர்கள். எனவே 'நல்ல கணவனை நாடுதல்' என்ற லௌகிகக் கருத்தை வைத்துக்கொண்டு ஜீவாத்மாக்கள் பரமாத்மாவை நாடும் மகத்தான சமயப் பேருண்மையை உணர்த்துகிருள் திருப்பாவைச் செல்வியான ஆண்டாள்.

மார்கழி மாதத்துடன் தட்சிணாயனம் முடிந்து, தை மாதப் பிறப் புடன் உத்தராயணம் தொடங்குகிறது. எனவே, பழமை கழிந்து புதுமை தோன்றுவதற்கு மார்கழி முடிவும் தைப் பொங்கலும் ஓர் அறிகுறி எனலாம். எனினும் ஒரு காலத்தில் மார்கழி முதன்மையான மாதமாய்க் கருதப் பெற்றது என்றும் கருதலாம். 'மாதங்கள் அனைத்திலும் நான் மார்கழி மாதம்!' என்று பகவத்கீதையில் கண்ண பிரான் கூறியுள்ளான். 'சிறந்த பொருள்களில் எல்லாம் பரம்

பொருளாகிய நானே சிறந்த பொருள்!' என்று சொல்லி வரும்போது, மாதங்களில் தன்னை மார்கழி என்று கண்ணன் குறிப்பிடுவது கவனிக்கத் தக்கது.

பொழுது விடிவதற்கு முந்திய அதிகாலையைப் பிரமமுகூர்த்தம் என்ற தூய அமைதி வாய்ந்த வேளையாகப் போற்றுகிறோம்; அப்படியே புதிய ஆண்டில் செய்வதற்குரிய நல்ல காரியங்களை—பெருங் காரியங்களை—மனமாரச் சிந்திப்பதற்கு ஏற்ற தூய மாதமாக மார்கழியை நம் முன்னோர் கருதியிருக்கவும் கூடும். இப்போது கருதுவதுபோல் மார்கழியைச் சூனிய மாதம் என்று எப்போதும் கருதினார்கள் எனத் துணிவதற்கு இடமில்லை. இது எப்படி இருந்த போதிலும், மார்கழி நோன்பு என்ற மார்கழித் திருநாள் இந்த மாதத்திற்குரிய சிறப்புக்களில் ஒன்றாகக் கருதப்பட்டது. பாவை நோன்பு தான் மார்கழி நோன்பு. இந்த நோன்பைப் பாடும் ஆண்டாளின் பாடல்களுக்குத் திருப்பாவை என்று பெயர்.

லௌகிக நோன்பு ஒன்றை ஆதாரமாகக்கொண்டு இப் பிரபந்தத்தை ஆண்டாள் சமயப் பேருண்மைகளை வெளியிடும் பிரபந்தமாக இயற்றியிருக்கிறாள். ஆண்டாளுடைய பக்தி அனுபவங்களைப் பெய்து வைத்திருக்கும் தங்கப்பாத்திரம், அமிர்தகலசம், இந்தப் பிரபந்தம். கோதைதமிழ் என்று இது சிறப்பாகப் பேசப்படுகிறது.

பகவானுக்கு ஆளாகி உறவுபூண்டு, ஒவ்வொருவரும் தமக்கு இசைந்த தொண்டு செய்யுமாறு திருவருள் புரியவேண்டுமென்று இறைவனிடம் கைங்கரியப் பிரார்த்தனை செய்து கொள்வது திருப்பாவையின் தேர்ந்த உட்பொருள். இது வைணவ சமய சாரமான தனிப்பெருங் கொள்கை. ஸ்ரீ ராமாநுஜ தரிசனமாகிய ஸ்ரீவைஷ்ணவத்தை உருவாக்கிய மகத்தான சக்திகளில் ஒன்று திருப்பாவை என்று ஊகிப்பது தவறாகாது. இராமாநுஜர் திருப்பாவையில் விசேஷமாக ஈடுபட்டுத் திருப்பாவைஜீயர் என்றும் பேர் பெற்றார்.

ஆண்டாள் கி. பி. 731-இல் திருப்பாவையை இயற்றியதாக ஆராய்ச்சியாளர் கருதுகின்றார். ஆண்டாளின் தந்தை பெரியாழ்வார். இந்த இரண்டு பக்த மணிகளும் வாழ்ந்த காலம் கி. பி. எட்டாம் நூற்றாண்டு என்பது நிச்சயம். தன் காலத்திற்கு முற்பட்ட காலத்திலே தமிழ்ப் பெண்கள் நல்ல நாயகனை அடையவும் நாடு செழிக்கவும் நோற்ற நோன்பு ஓர் அழகிய வழக்கம் என்று தோன்றியது ஆண்டாளுக்கு. ஆய்க்குலச் சிறுமியர் நோன்பு நோற்றுக் கண்ணனை அடைந்த கதையையும் கேள்விப்பட்டிருந்தாள். தானும் அந்தக் கோபியருள் ஒருத்தியாக இருந்தால் அந்த முறையில் தானும் கண்ணனை அடைந்திருக்கலாமே என்று நினைத்தாள். ஆனால் அந்தக் காலம் எங்கே? இவள் எங்கே?

ஒரு நாட்டிலிருந்து மற்றொரு நாட்டுக்கு—எவ்வளவு தூரதேசமாயினும்—ரயில் மூலமாகவோ, வானஊர்தி மூலமாகவோ இன்று

போய்ச் சேர்ந்துவிடுகிறோம். ஆனால் இந்தக் காலத்திலிருந்து பழைய காலத்திற்குப் போய்ச் சேர்வதற்கு எந்த வகை யந்திரத்தையும் இன்றைய விஞ்ஞானம் கண்டுபிடித்து விடவில்லை. ஆண்டாளுக்கு மனோபாவம் (பாவனை) என்ற ஞான விமானம்தான் துணை செய்தது.

கவிஞர்கள் எல்லாம், உண்மைக் கவிஞர்களெல்லாம், 'பாவனை' என்ற ஞான விமானத்தைத் துணையாகக் கொண்டுதான் எந்தக் காலத்திலும் சஞ்சரிக்கிறார்கள்; எந்த லோகத்திலும் சஞ்சரிக்கிறார்கள்; மக்கள் உள்ளங்களிலும் சஞ்சரிக்கிறார்கள். கூடு விட்டுக் கூடு பாய்ந்து அரக்கர் உள்ளங்களிலும் அமரர் உள்ளங்களிலும் புகுந்து பேசுகிறார்கள். ஆண்டாளும் ஒரு நல்ல கவி; உண்மைக் கவி; உத்தமக் கவி. கவிஞரின் பாவனா சக்தி இந்த அம்மையாரின்—இந்தப் பக்த கவியின்—மனோரதத்தை நிறைவேறச் செய்தது. கோபியரை வழிகாட்டிகளாகக் கொண்டு கண்ணனை அடைய விரும்பிய ஆண்டாள் காலத்தை எதிர்த்துச் சென்று, அக்காலத்து ஆய்ப்பாடியில் குடிபுகுந்து கோபியரோடு கோபியாய்க் கலந்து கொள்வதற்கு, இவளுடைய பக்தி நிறைந்த பாவனையின் முதிர்ச்சி அரும்பெருந் துணை ஆயிற்று.

ஆண்டாள் பாவை நோன்பு நோற்றது பாவனையால்தான். செயலைக்கொண்டு அல்ல; பாசுரத்தைக் கொண்டுதான். கோபியர்கள் எப்படி நோற்றார்களோ என்பதை நாம் அறியோம். பண்டைத் தமிழர்களின் பாவை நோன்புக் காட்சிகளையும் தெளிவாக நாம் மனக்கண் முன் கண்டுகொள்ள முடியும் என்று தோன்றவில்லை. ஆண்டாள் கோபியருள் கோபியாகி மானசீகமாக நோற்ற நோன்புக் காட்சிகளோ கண்முன் காண்பதுபோல் நம் அகக்கண் முன்னே திரைப்படக் காட்சிகளாக ஒன்றன்பின் ஒன்றாய் வருவதைக் காண்கிறோம்.

'அந்தோ! அந்த நாளில் நான் பிறந்தேனில்லையே! அந்த ஆயச் சிறுமியருள் ஒருத்தியாக நோன்பு நோற்றேன் இல்லையே! எவ்வளவு தூரத்தில் இருக்கிறது கண்ணன் பிறந்த, கோபியர் வாழ்ந்த கோகுலம்! காலத்தாலோ நெடுந்தொலைவில் இருக்கிறது— ஆம், எட்டாத நெடுந்தொலைவில்! அந்த ஆய்ப்பாடிக்கு எப்படித் தான் செல்ல முடியும்!'—இப்படியெல்லாம் எண்ணமிட்டாள், வருந்தினாள், உளம் கசிந்தாள், உருகினாள். கடைசியாக, அந்த ஆய்ப் பாடிக்கே சென்று விட்டாள் அதிசயமாக! பறந்து சென்று விட்டாள் பாவனா சக்தியால்! அப்படிக் கண்டு நோற்றுப் பேறு பெற்ற கதைதான் ஆண்டாளின் பாவைப் பாட்டு.

இந்த அற்புதம் இருந்த இடத்திலேயே நிகழ்ந்துவிட்டது. திடீரென்று, ஆண்டாள் வாழ்ந்த ஊர் பேர் எல்லாம் மறைந்துவிட்டன! உற்றார் பெற்றார் தோழியர் எல்லாரும் மறைந்துவிட்டனர்! ஸ்ரீவில்லிபுத்தூருக்கே ஓடி வந்துவிட்டது ஆய்ப்பாடி; இவளைத் தேடி வந்து விட்டது! தோழியரும் தானும் ஆய்க் குலப் பெண்கள் ஆகிவிட்

டதை உணர்கிறுள். இப்படியும் நடக்குமா? பெருமாள் கோயில்—ஸ்ரீவில்லிபுத்தூர் வடபத்திர சாயி சந்நிதி—இப்போது எங்கே? அதுவும் மறைந்து போய்விட்டதா? அந்த இடத்தில் இப்போது காணப்படுகிறது ஒரு மாளிகை—நந்தகோபன் மாளிகைதான். மாளிகைக்குள்ளே கண்ணன்—கண்ணுன கண்ணன்! பாவனை மந்திரம் பலித்துவிட்டது. மார்கழித் திங்களில் மதிநிறைந்த நன்ஞளும் வாய்த்துவிட்டது. இப்படிப் பிறந்தது திருப்பாவை.

பாவனை-ஆய்ப்பாடியில் பாவை நோன்பு நோற்கிருள் ஆண்டாள். கண்ணனுடைய கலியாண குணங்கள் ஆகிய தூய நன்னீரில் ஆடி மூழ்கிப் பேறு பெறுவதற்கு, கோபியர் வாழ்ந்த காலம்தான் அவசியமா? அந்தக் களம்தான் அவசியமா? பாவைக் களம் ஆகிவிடலாம் எந்த ஊரும், எந்த ஊர்ப் பகுதியும். எந்தக் காலமும் கண்ணனை அணுகுவதற்கு ஏற்ற காலம்தான். கடுந் தவம் வேண்டாம், யாகம் வேண்டாம், யோகம் வேண்டாம். அவற்றுக் கெல்லாம் விரோதி ஆகிய மோகத்தையே பக்திக் காதல் ஆக்கிக் கொண்டு பரமனை அணுகிவிடலாம். ஆசை விரோதியல்ல; கண்ணனை அடையவேணும் என்ற ஆசை ஒன்றே போதுமானது. என்ன அழகான தத்துவம், என்ன வசீகரமான உண்மை!

'வாருங்கள், வாருங்கள்!' என்று பரபரப்பாக ஒருவரையொருவர் அழைத்துக்கொண்டு நீராடப் புறப்படுவோர் கூட்டம் ஒன்று கட் புலனுகிறது. பகவானுடைய பெயரைப் பாடுகிருர்கள்; அருளைப் பாடு கிருர்கள். ஒருவரையொருவர் எழுப்புகிருர்கள்; ஒருவரையொருவர் பரிகசிக்கிருர்கள். முகங்கள் நீண்டு தொங்கவில்லை; புன்னகை பூத்த பரந்த வதனங்களைக் காண்கிருேம். பாடுகிருர்கள், ஆடுகிருர்கள், பரவசமாகிருர்கள். ஒருவரோடொருவர் உறவு கொண்டாடு கிருர்கள்; கடவுளுடனும் உறவு கொண்டாட ஓடுகிருர்கள்.

தாயின் குரல் கேட்கிறது: மகள் குரல் கேட்கிறது. 'அம்மாமி! அவளை எழுப்பமாட்டீரா?' என்று கெஞ்சுகிருள் ஒருத்தி! 'கிளி மொழியே, எழுந்து வாராயோ?' என்று கொஞ்சுகிறது ஒரு குரல். 'ஆடி வா மயிலே!' என்று பாடுகிறது ஒரு குரல். 'ஓடி வா பேய்ப் பெண்ணே!' என்று கண்டிப்பாய்க் கட்டளையிடுகிறது ஒரு குரல். உள்ளே இருந்து ஒரு குரல் பதில் சொல்ல, வெளியிலிருந்து பல குரல்கள் தாக்குவதும் நம் காதில் விழுகிறது. சிறகு கட்டிய அம்புகள் போலப் பறக்கின்றன விஞவிடைகள். தந்திரப் பேச்சு, மந்திரப்பாட்டு, வசீகர இசை, எல்லாவற்றுக்கும் மேலாகக் குழந்தை உள்ளம், தூய அன்பு, கள்ளங் கவடற்ற நெஞ்சு!

ஆண்டாள் கட்டி நிறுத்திய நோன்பு-மாளிகையில் நாம் காணும் காட்சிகளில் சில இவை. சிறு மாளிகைதான்; ஆனுல் செல்வம் நிறைந்த சிங்கார மாளிகை. கண்ணனுக்காகக் கட்டிய காதல் மாளிகை. இங்கே 'கோபியர் இவர்கள், ஆண்டாள் இவள்!' என்று பிரித்துக் காண இயலாது. சிங்காசனத்திலிருந்து யசோதை—

இளஞ்சிங்கம் கோபியருக்கு அருளுவதுபோல் ஆண்டாளுக்கும் இரங்கி அருளுவதை மட்டுமா காண்கிறோம்? அந்தச் சிங்காதனத்தில் ஆண்டாளின் அன்புச் சொற்களை மாலையாகப் பூண்டு ஒரு புது மகிழ்ச்சியுடன் கண்ணபிரான் வீற்றிருப்பதையும் காண்கிறோம்.

* * *

விளையாட்டும் வேடிக்கையுமாக எவ்வளவு மகத்தான உண்மைகளை வெளியிடுகிறது திருப்பாவை! உயர்ந்த பொருளை ஆண்டாள் வெளியிடும் முறையே அலாதி. கற்றோரும் மற்றோரும் ஒருங்கே வியந்து ஈடுபடும் பாசுரங்கள் இவை. சிறுவர் விளையாட்டின் மூலமாகவே தெய்வ அன்பைப் பெற்றுக்கொள்ள முடியும் என்பதை ஆச்சரியமாக உணர்த்தும் பக்திப் பிரபந்தம் இது.

இந்தப் பிரபந்தம் பிறந்த கதைதான் எவ்வளவு வசீகரமானது பாருங்கள்! பிறந்த கதை மட்டுமா? வளர்ந்த கதையும் வசீகரமானது தான். இராமாநுஜர் வளர்த்துவிட்ட பாவையை வேதாந்த தேசிகர் முதலான ஆசாரியர்களும் வளர்த்து வந்திருக்கிறார்கள். வடமொழிப் பேராசிரியர்களும் தமிழறிஞர்களோடு போட்டி போட்டுத் திருப்பாவையின் அருமை பெருமைகளைப் போற்றி வந்திருக்கிறார்கள். திருப்பாவை வளர்ந்தது என்றால், இதன் பெருமை வளர்ந்துவந்திருக்கிறது என்றுதான் பொருள்.

வடமொழியாளர்கள் மட்டுமா பாவையைப் பேணிப் போற்றியிருக்கிறார்கள்? பிரசித்தி பெற்ற விஜயநகர சக்கரவர்த்தியான ஸ்ரீ கிருஷ்ணதேவ ராஜா 'ஆமுக்த மால்யதா' என்னும் தெலுங்கு நூலில் திருப்பாவைச் செல்வியான சூடிக் கொடுத்த சுடர்க் கொடியைக் குறிப்பிடுவது பிரசித்தம்.

ஆந்திர நாட்டுக்கு வடக்கிலும் ஆண்டாளும் திருப்பாவையும் பிரசித்தம் அடைந்திருந்தனர் என்று ஊகிப்பதில் தவறொன்றுமில்லை. வட நாட்டுப் பக்தமணியான மீராபாய் அம்மையின் சரிதமும் பாடல்களும் ஆண்டாளும் திருப்பாவையும் அந்தப் பிரதேசங்களில் பிரசித்தமாக இருந்ததற்குச் சான்று தருகின்றன.

வட நாட்டிலே ஆண்டாள் பக்தியும் ஆண்டாளின் கொள்கைகளும் பரவியதற்கு ஒரு முக்கியமான காரணம் வேதாந்த தேசிகர் வடமொழியில் 'கோதாஸ்துதி' என்னும் தலைப் பெயருடன் இருபத்தொன்பது சுலோகங்கள் கொண்ட ஒரு தோத்திரப் பாமாலை இயற்றியிருப்பதாகும். தமிழில் உள்ள திருப்பாவை முதலான திவ்யப் பிரபந்தங்களைக் கற்றபின்பே வடமொழி வேத வேதாந்தங்களில் தெளிவு கண்டதாகச் சொல்லுகிறார் வேதாந்த தேசிகர். இவர் தமது பிரபத்தி மார்க்கத்தைத் தெளிவுபடுத்திக்கொள்வதில் திருப்பாவையைப் பெரிதும் பயன்படுத்திக்கொண்டார் என்று கருதலாம்.

'தூய பெருநீர் யமுனைத் துறைவன்' என்று ஆண்டாள் திருப்பாவையில் கண்ணனைக் குறிப்பிடுகிறாள். கண்ணனின் தொடர்

பினுல் யமுனை ஆறு தூய்மையும் பெருமையும் பெற்று இருப்பது போல், கோதையின் வாக்கு வெள்ளமும் அதே தொடர்பினுல் சிறப்புற்று விளங்குகிறது என்று கோதாஸ்துதியின் நாலாவது சுலோகம் தெரிவிக்கிறது. கண்ணனின் தொடர்பினுல் சிறப்புற்று விளங்கும் கோதையின் வாக்கு வெள்ளம் தாமிரபருணி தீரத்திலும் காவேரி தீரத்திலும் பிரசித்தி பெற்றதுபோல், யமுனு தீரத்திலும் நாளடைவில் பிரசித்தி பெறலாயிற்று என்று ஊகிக்கலாம்.

'ஆண்டாளின் உபநிஷத்து' என்று வேதாந்த தேசிகர் தமது மணிப்பிரவாள நூல் ஒன்றில் திருப்பாவையைக் குறிப்பிடுகிருர். இந்த உபநிஷத்தும், ஆண்டாளின் வேறு பாடல்களின் பொருளும் வட நாட்டிலும் வெள்ளமிட்டுத்தான் அங்கே ஒரு மீராபாய் தோன்றுவதற்கு உரிய பக்தி வளத்தை அமைத்துக் கொடுத்தன எனலாம்.

இப்படியெல்லாம் தெற்கிலும் வடக்கிலும் பரவிய திருப்பாவைப் பிரபந்தம் கடல் கடந்து சென்றதும் பொருத்தமானதுதான். இது ஒரு வகுப்பிற்கோ, ஒரு நாட்டுக்கோ உரியதன்று; உலகத்திற்கெல்லாம் உரியதுதான். மணிவண்ணனுக்கு இசைந்த மணிமாலை என்றும் மணமாலை என்றும் சொல்லத்தக்க தனிப் பெரும் புகழ் வாய்ந்த திருப்பாவை உலகத்திற்கெல்லாம் உரியதாகப் பொது நோக்குடன் அமைந்திருக்கிறது என்பதில் - ஐயமில்லை. ஆண்டாள் தன் மணிவண்ணனை 'உலகினில் தோற்றமாய் நின்ற சுடரே!' என்று அழைப்பது கவனிக்கத்தக்கது.

உலக மகாகவியான கம்பன் கவிதையிலும் பாவையின் சுவடு பதிந்திருக்கக் காண்கிருேம் என்ருல், திருப்பாவை வளர்ந்த கதை அதிசயமானதுதானே? கண்ணன் பிறந்து வளர்ந்த கதைபோல் திருப்பாவை பிறந்து வளர்ந்த கதையும் அற்புதமானதே.

## தனியன்

### உய்யக்கொண்டார் அருளியவை

அன்ன வயற்புதுவை ஆண்டாள் அரங்கர்க்குப்
பன்னு திருப்பாவைப் பல்பதியம்—இன்னிசையால்
பாடிக் கொடுத்தாள் நற் பாமாலை, பூமாலை
சூடிக் கொடுத்தாளைச் சொல்லு.

சூடிக் கொடுத்த சுடர்க்கொடியே! தொல்பாவை
பாடி யருளவல்ல பல்வளையாய்!—நாடி நீ
வேங்கடவற்கு 'என்னை விதி'யென்ற இம்மாற்றம்
நாம்கடவா வண்ணமே நல்கு.

### அரும்பதவுரை

அன்னவயல் புதுவை: அன்னங்கள் சஞ்சரிக்கிற வயல்களை யுடைய ஸ்ரீவில்லிபுத்தூர். பன்னு: ஆராய்ந்து பாராட்டும். பல்பதியம்: பல பாசுரங்கள்.

தொல்பாவை: பழமையான பாவைப் பாட்டு. பல்வளையாய்: பல வளைகளை அணிந்தவளே. வேங்கடவற்கு: திருவேங்கடம் உடையானுக்கு; (இங்கே) பெருமாளுக்கு. என்னை விதி: என்னை வாழ்க்கைப்படுத்துவாய். என்ற இம்மாற்றம்: என்று மன்மதனை நோக்கி ஏற்கெனவே சொல்லியிருந்த இந்தச் சொல்லை. 'இம்மாற்றம்' என்பது இங்கே இந்தச் சொல்லின் உட்பொருளைக் குறிக்கும். நாம் கடவா வண்ணமே: நாங்கள் கடந்துபோகாதபடி. நல்கு: கருணை செய்வாய்.

### விளக்கம்

முதல் பாட்டு நெஞ்சை நோக்கிக் கூறுவது. இரண்டாம் பாட்டு ஆண்டாளை நோக்கிப் பிரார்த்திப்பது. ஆண்டாள் கண்ணனைக் காதலித்தாள் என்பது பிரசித்தம். உய்யக்கொண்டார் கண்ணனை முதல் பாட்டில் அரங்கன் என்றும், இரண்டாம் பாட்டில் வேங்கடவன் என்றும் குறிப்பிடுகிறார்.

கண்ணனிடம் ஆண்டாளுக்கு உள்ள அன்பு மிகவும் பிரசித்தமானது. அத்தகைய அன்பை அன்னையாகிய ஆண்டாள் அடியவர்கள்மீதும் கொண்டு கருணைபுரிய வேண்டும் என்று பிரார்த்திக்கிறார் உய்யக்கொண்டார்.

திருப்பாவை பழமையான பாவைப் பாட்டு வகையைச் சேர்ந்தது. பழமையான பாவை நோன்பை வியாஜமாகக் கொண்டு கண்ணனைப் பாடுவது என்ற கருத்தைத் 'தொல் பாவை' என்ற வாக்கில் காண்கிறோம்.

# 1. விருப்பம் உள்ளவர் அனைவரும் நீராட வரலாம்

ஆய்ப்பாடி ஆகிறது ஸ்ரீவில்லிபுத்தூர், ஆண்டாளுடைய மனோபாவத்தால். கால வெள்ளத்தில் எதிர்த்துச் செல்லும் ஓர் இன்பப் படகுபோல் சென்றது ஆண்டாளின் உள்ளம். கண்ணன் வாழ்ந்த அந்தக் காலத்திற்கே போய்ச் சேர்ந்து விட்டாள் கோதை என்ற ஆண்டாள். ஆய்க்குலச் சிறுமியருடன் அபேதமாய்க் கலந்து கொண்டாள். கண்ணனைத் தலைவனாக அடைய வேண்டு மென்று ஆசைப்பட்டு நோன்பு நோற்றுக் கொண்டிருக்கும் கோபிய ரோடு தானும் ஒரு கோபியாகச் சேர்ந்து விட்டாள்!

வடபெருங்கோயில்—அதாவது ஸ்ரீவில்லிபுத்தூரில் வடபத்ர சாயி என்ற பெருமாளுடைய சந்நிதி—நந்தகோபர் மாளிகை ஆகி விட்டது. கோயிலில் உள்ள பெருமான் கண்ணனாகக் காட்சி வழங் கினான். கோபியர்கள் பாவை நோன்பு நோற்றுக் கண்ணனை அடைய வேண்டும் என்று தீர்மானித்து, 'மார்கழி நீராட்டத்திற்கு வாருங்கள்' என்று, உறங்கிக் கொண்டிருந்தவர்களையும் கூவி அழைத்துக் கொண்டு, இறைவனது திருவடிகளையும் பெயர்களையும் பாடிக்கொண்டே வீதி வழியாகப் போகிறார்கள். ஆண்டாளும் இந்தக் கூட்டத்தில் 'இடைநடையும் இடைமுடியும் இடைப்பேச் சும் முடைநாற்றமுமாய்'க் கலந்துகொண்டு கிருஷ்ணானுபவம் செய் வதைக் காண்கிறோம்.

* * *

மார்கழி மாதம். 'வரப் போகுது, வரப் போகுது' என்று எதிர் பார்த்திருந்த சுக்கிலபட்ச பௌர்ணமியும் வந்து விட்டது. காலத் தைக் கொண்டாடுகிறார்கள். ஆம், 'மார்கழித் திங்கள்' என்று மாதத்தைக் கொண்டாடுகிறார்கள்; 'மதி நிறைந்த நன்னாள்' என்று பௌர்ணமி தினத்தையும் கொண்டாடுகிறார்கள். 'மார்கழி நீராட் டம்' என்ற பனி நீராட்டத்தில் விருப்பம் உள்ள பெண்களை யெல்லாம், 'வாருங்கள், வந்து சேருங்கள், களி கூர்ந்து அன்பையும் அருளையும் பெற்று வாழுங்கள்' என்று பொருள்பட அழைக்கிறார்கள்.

ஒருவரை ஒருவர் முகம் கண்டு மகிழ்வதற்கும் இந்த முழு மதி நாள் பொருத்தமானது; எல்லாரும் கூடிக் கண்ணனைத் துயி லெழுப்பி அந்த அழகனைக் கண்ணாரக் காண்பதற்கும் பொருத்த மான நன்னாள்தான் இது. எனவே இருளை வெறுத்து நிலவைக் கொண்டாடுகிறார்கள். 'நீராட வாருங்கள்' என்ற அழைப்பின் உட்பொருள் 'கண்ணனைக் கண்டு அன்பு நன்னீராடி ஆறுதலும் ஆனந்தமும் பெறுவீர்!' என்பதுதான்.

'வருகிறவர்கள் எல்லாரும் வரலாம்' என்று முழக்கிக் கொண்டு சிலர் புறப்படுகிருர்கள். இவர்கள் ஆபரணங்கள் அணிந்திருக்கிருர்கள். ஆபரணங்களுக்கும் ஆபரணமாகிய அழகன் கண்ணன்; அவனைக் காணலாம் என்ற உவப்பே மேனி யெல்லாம் ஆபரணம் பூண்டதுபோன்ற அழகை இவர்களுக்கு அளித்து விடுகிறதாம்.

ஆய்ப்பாடியின் செல்வச் சிறுமியர்கள் இவர்கள். ஆய்ப்பாடியோ 'சீர்மல்கும் ஆய்ப்பாடி'—அதாவது, பால்வளம் முதலான செல்வங்கள் நிறைந்திருக்கும் கோகுலம். இந்த ஆய்ப்பாடியில் செல்வத்துள் செல்வமாக வளர்கிருர்கள் இந்தச் சிறுமியர்கள். கிருஷ்ணபக்தி இவர்கள் போற்றும் செல்வம்.

நந்தகோபன் குமரனும் யசோதை இளஞ் சிங்கமுமாகிய கண்ணனை அகக்கண்ணுல் பார்த்தாலும் இவர்களுக்கு அழகு பொங்குகிறது. கண்ணனைப் பார்த்துப் பார்த்துத்தான் யசோதையும் கண்ணழகு வாய்ந்தவளாளுள் என்பது இவர்கள் கருத்து. எனவே.

ஏர்ஆர்ந்த கண்ணி
யசோதை இளஞ்சிங்கம்

என்று சொல்லுகிருர்கள்.

கண்ணனது மேனியைக் காணும்போது, மழை முகம் கண்ட பயிர்போல் தழைக்கிறது இவர்கள் முகம். நினைத்தாலும் தாபம் போகிறது—கார்முகிலைக் கண்ட பயிர் பச்சை போல. கண்ணன் திருமேனியையும் திருமுகத்தையும் நினைத்து நினைத்து,

கார்மேனிச் செங்கண்
கதிர்மதியம் போல்முகத்தான்

என்று அந்த அழகில் ஈடுட்டுப் பேசுகிருர்கள். ஒளிக்குக் கதிரவன், குளிர்ச்சிக்கு முழுமதி என்கிருர்கள்.

பாவை நோன்பிற்கு ஓர் உறுப்பாகிய பறை என்ற வாத்தியத்தைக் கண்ணனிடம் பெற்றுக் கொண்டு நோன்பு நோற்போம் என்று புறப்பட்டிருக்கிருர்கள். 'பறை, பறை' என்று சொல்லிக் கொண்டு இப்படிப் போவது வியாஜம்தான். உள்ளுக்குள்ளே கிருஷ்ண பக்தியும் கைங்கரிய விருப்பமும்தான்.

நோன்பு நோற்ருல் மழை பெய்யும், நாடு செழிக்கும் என்பது ஆய்ப்பாடித் தலைவர்களின் நம்பிக்கை. 'ஆ! பெண்கள் நோற்று மழை பெய்தது!' என்று அவர்கள் புகழ்வார்கள். அப்படி அவர்கள் புகழும்போது, உலகமெல்லாம் புகழுவதாக இவர்கள் மகிழ்ந்து போவார்களாம். எனவே, 'பாரோர் புகழப் படிந்து' (நோன்பிலே ஊன்றி) நீராடுவோம் என்கிருர்கள்.

திருக்கோஷ்டியூர் அஷ்டாங்க விமானம்

 நின்றான் இருந்தான் கிடந்தான்

உலகத்தின் ஒரு சிறு பகுதியாகிய ஆய்ப்பாடிதான் இவர்கள் உலகம்! ஆனால் உலகத்தை எல்லாம் தனக்குள் அடக்கிக் கொண்டிருக்கும் கண்ணபிரானின் தோழமை அல்லவா இவர்கள் குறிக்கோள்?

நாரா யணனே
நமக்கே பறைதருவான்
பாரோர் புகழப்
படிந்தேலோர் எம்பாவாய்

என்று பாடிக்கொண்டே போகிறார்கள்.

## வாருங்கள், தாபம் தீர அன்பு நீராடுவோம்!

மார்கழித் திங்கள்
மதிநிறைந்த நன்னாளால்;
நீர்ஆடப் போதுவீர்!
போதுமினோ, நேர்இழையீர்!
சீர்மல்கும் ஆய்ப்பாடிச்
செல்வச் சிறுமீர்காள்!
கூர்வேல் கொடுந்தொழிலன்
நந்தகோ பன்குமரன்,
ஏர்ஆர்ந்த கண்ணி
யசோதை இளஞ்சிங்கம்,
கார்மேனிச் செங்கண்
கதிர்மதியம் போல்முகத்தான்,
நாரா யணனே
நமக்கே பறைதருவான்;
பாரோர் புகழப்
படிந்தேலோர் எம்பாவாய். (1)

### அரும்பதவுரை

மதிநிறைந்த நன்னாளால்: முழுமதி தோன்றும் பௌர்ணமி என்னும் நல்ல நாளாக வாய்த்திருக்கிறது. போதுவீர்: வரவேணும் என்ற விருப்பம் உள்ளவர்களே. போதுமினோ: வாருங்கள். நேர் இழையீர்: அழகிய அணிகளை அணிந்திருக்கும் பெண்களே. சீர்மல்கும்: சிறப்பு நிறைந்திருக்கும். சிறுமீர்காள்: சிறுமியர்களே. ஏர்ஆர்ந்த கண்ணி: அழகு நிறைந்த கண்களை உடையவள்.

கார்மேனி: மேகம் ஒத்த உடம்பு. கதிர்மதியம்: சூரியனும் சந்திரனும். பறை: நோன்பிற்கு வேண்டிய ஒருவகை வாத்தியம். பாரோர்: உலகத்தில் உள்ளவர்கள். படிந்து: நோன்பில் இறங்கி.

விளக்கம்

'ஆய்ப்பாடிச் சிறுமியர்களே! நாராயணனாகிய கண்ணனே நமது நோன்பிற்கு வேண்டியவற்றைத் தந்து நமது விருப்பத்தை நிறைவேற்றச் சித்தமாய் இருக்கிறான். மார்கழித் திங்களில் மதி நிறைந்த இந்நாள் நன்னாள். விருப்பம் உள்ளவர்கள் எல்லாரும் நீராட வந்து சேரலாம்' என்று ஆய்ப்பாடிக் கன்னியர்களில் சிலர் மற்றைக் கன்னிமார்களை அழைக்கிறார்கள். ஒருவரை ஒருவர் முகம் கண்டு களிக்கவும், எல்லாரும் சேர்ந்து போய்க் கண்ணனைத் துயில் எழுப்பிக் கண்டு களிக்கவும், இம் முழு மதி நிறைநாள் நன்னாளாக வாய்த்திருக்கிறது.

'நீராட வாருங்கள்' என்ற அழைப்பிலே, கண்ணனைப் பிரிந்திருந்த தாபம் தீர அவனுடைய அன்பையும் அருளையும் பெற்று மகிழ்வோம் என்ற குறிப்பையும் காண்கிறோம்.

'பார்' உலகத்தின் ஒரு சிறு பகுதியாகிய ஆய்ப்பாடியைக் குறிக்கும்.

# 2. விரதமும் விருந்தே!

எடுத்த காரியத்தைத் தொடுத்து முடிக்கும்போது, 'இவைகளை நான் செய்யமாட்டேன்; இவைகளைச் செய்வேன்' என்று சில நியமங்களை மேற்கொள்கிறோமல்லவா? காரியசித்திக்காகச் சில பழக்கங்களை விடுகிறோம்; சில பழக்கங்களைப் பற்றிக் கொள்ளுகிறோம். இதைக் காரியசித்திக்கு உரிய நோன்பு என்று சொல்லலாம். ஆய்க்குலச் சிறுமிகளும் இத்தகைய சில விதிகளையும் விலக்குகளையும் பாவை நோன்பை முன்னிட்டு அனுஷ்டிப்பதாகத் தீர்மானிக்கிறார்கள்.

'பாற்கடலுள் பையத்துயின்ற பரமன் அடிபாடு'வோம் என்பதை அதிமுக்கிய விதியாகக் கொள்கிறார்கள். 'நாட்காலே நீராடி' என்பது இரண்டாவது விதி. அடிபாடி அன்பு நீராடி அகத்தைத் தூய்மை செய்துகொண்டு, புறத்தூய்மைக்காக நாட்காலே நீராடுகிறார்கள். இவர்கள் மூன்றாவது விதியாக,

ஐயமும் பிச்சையும்
ஆந்தனையும் கைகாட்டி

என்பதைக் கொண்டிருக்கிறார்கள். இந்த விதிகளை 'உய்யுமாறு எண்ணி உகந்து' மேற்கொள்கிறார்கள்.

விதிகளுடன் விலக்குகளும் வேண்டுமல்லவா? 'நெய்யுண் ணோம், பாலுண்ணோம்' என்கிறார்கள்.

மையிட்டு எழுதோம்;
மலர்இட்டு நாம்முடியோம்

என்கிறார்கள். நோன்பு முடியும் வரை நெய்யும் பாலும் உண்பதில்லை என்று விரதம் பூண்டவர்கள், கண்ணுக்கு மை எழுதியும் கூந்தலுக்குப் பூச்சூட்டியும் அலங்கரித்துக் கொள்வதில்லை என்றும் தீர்மானிக்கிறார்கள். ஆபரணங்களாலும் அழகு செய்துகொள்வதில்லை என்ற விலக்கு நியமத்தை நாம் உய்த்துணர வைக்கிறது இந்தச் செய்யுட் பகுதி.

அலங்காரம் செய்து கொள்ளாதது மட்டுமா?—அகத்தின் அழகை அலங்கோலமாக்கிக் கெடுத்துக் கொள்வதில்லை என்றும் தீர்மானிக்கிறார்கள்.

செய்யாதன செய்யோம்

—அதாவது, பெரியோர்கள் செய்யாதவற்றைச் செய்யமாட்டோம்— என்கிறார்கள்.

தீக்குறளை சென்று ஓதோம்

—அதாவது, தீமை விளைக்கும் கோட்சொற்களைச் சென்று சொல்ல மாட்டோம்—என்கிறார்கள். இவையெல்லாம் விலக்கும் நியமங்கள்.

அலங்காரம் செய்துகொள்ள மாட்டோம் என்பது தாற்காலிக விலக்கு. 'செய்யாதன செய்யோம்' என்பதும், 'கோள் சொல்ல மாட்டோம்' என்பதும் எப்போதும் விலக்கத்தக்க நியமங்களாகவே இவர்களால் மேற்கொள்ளப் பட்டன என்று ஊகிக்கலாம்.

இப்படியெல்லாம் தாங்கள் கொண்டாடும் பாவை நோன்பிற்குச் சில நியமங்களை ஏற்படுத்திக் கொள்கிறார்கள் இந்தப் பெண்கள். இவற்றைக் 'கிரிசைகள்' (கிரியைகள்) என்கிறார்கள். இவை இவர்களுடைய நோன்பிற்குரிய கிரியைகள். இவற்றைச் 'செய்யும் கிரிசைகள்' என்று சொல்லுகிறார்கள். 'செய்யும் கிரிசை'களில், மேற்கொள்ளும் கிரியைகளுடன் விடும் கிரியைகளையும் சேர்த்துப் பேசுகிறார்கள். விடும் கிரியைகள் மட்டுமா?—ஒரே அடியாக விட்டு விடவேண்டிய கிரியைகளும் (செய்யாதன செய்யாமல் இருப்பதும், கோள் சொல்லாமலிருப்பதும்) 'செய்யும் கிரிசை'களில் சேர்த்துப் பேசப்படுவதைக் காண்கிறோம்.

வாழ்வதற்கு மேற்கொள்ளும் நோன்பு இது. நல்ல கணவனை அடையவேண்டும் என்பதும், நாடு செழிக்க மழை பெய்யவேண்டும் என்பதும் இந்த நோன்பின் இரட்டை நோக்கம். குடும்பம் நடத்துவதற்கு இல்லாளுக்கு இசைந்த நல்ல கணவன் வேண்டுமல்லவா? நாடு ஒரு விரிந்த குடும்பம்தான். நாட்டில் செழிப்பு இல்லாவிட்டால்

வீட்டிலும் செழிப்பு இல்லை. நாடும் வீடும் ஒருங்கே நலம் பெறுவதற்கு நோற்கப்படும் இந்த நோன்பில் கலந்துகொள்ள விரும்புகிறவர்களை,

வையத்து வாழ்வீர்காள்!

என்று இப்பெண்கள் அழைக்கிறார்கள்.

வாழும் முறை தெரிந்து உலகத்தில் வாழவேண்டும். அப்படி வாழ்கிறவன் மண்ணுலகை விண்ணுலகாக்கிக் கொள்வான் என்றும், வானுறையும் தெய்வம் போல் வாழ்க்கை நடத்துவான் என்றும் திருவள்ளுவர் சொல்லுகிறார். இந்தப் பாவை நோன்பில் கலந்து கொள்ளும் ஆய்க்குலச் சிறுமியர் கண்ணன் தோழமையால் ஆய்ப்பாடியைச் சொர்க்கம் ஆக்குகிறார்கள்—ஆண்டாள் தன் பாவனையின் முதிர்ச்சியால் ஸ்ரீவில்லிபுத்தூரை ஆய்ப்பாடி ஆக்கிக் கொண்டதுபோல!

இந்தப் பெண்களுக்கு விதிவிலக்குகளோடு கூடிய இந்த நோன்பில் சிரமம் ஒன்றும் ஏற்படவில்லை. 'நெய் உண்ணோம், பால் உண்ணோம்' என்கிறார்களே, இத்தகைய உண்ணாவிரதமும் இன்பம் தானா?—என்று கேட்கலாம். உண்ணும் சோறும் பருகும் நீரும் இவர்களுக்குக் கண்ணனாக இருப்பதால், உண்டவர்கள் 'உண்ணாமை விரதம் பூண்டோம்!' என்று கூறுவது போன்றதுதான் இவர் நிலையும் எனலாம். உண்டார்க்கு உண்ண வேண்டுமா?

உண்மை என்னவென்றால், இவர்கள் இந்த நோன்பையும், இதற்குரிய விதிவிலக்குகளையும் அனுபவிக்கத்தான் செய்கிறார்கள்: துறவும் போகம்தான் இவர்களுக்கு! 'அடிபாடி......நெய்யுண்ணோம்!' என்ற போக்கில்தான் இவர்கள் பேச்சு அமைந்திருக்கிறது. பரமன் அடி பாடியதும் 'எல்லாம் கண்ணன்!' என்ற மனநிலை வாய்த்து விடுகிறது. எனவே, நெய்யுண்ணாமலிருப்பதும் பால் பருகாமலிருப்பதும் இவர்களுக்குத் துறவும் அல்ல, தியாகமும் அல்ல! கண்ணன் அடிமலரே தலைக்கு அணி என்று கருதுகிறவர்களுக்கு மலர் சூடுவதும் ஆபரணம் அணிவதும் அலங்காரமாவதுதான் எப்படி? இனி இப்பாட்டை நோக்குவோம்.

## வாழப் பிறந்தவர்களே! நோன்பு நோற்போம்

வையத்து வாழ்வீர்காள்!
நாமும்நம் பாவைக்கு
செய்யும் கிரிசைகள்
கேளீரோ: பாற்கடலுள்
பையத் துயின்ற
பரமன் அடிபாடி,

நெய்உண்ணோம்; பால்உண்ணோம்;
நாட்காலை நீர்ஆடி,
மையிட்டு எழுதோம்;
மலர்இட்டு நாம்முடியோம்;
செய்யா தனசெய்யோம்;
தீக்குறளை சென்றுஓதோம்;
ஐயமும் பிச்சையும்
ஆம்தனையும் கைகாட்டி,
உய்யுமாறு எண்ணி
உகந்தேலோர் எம்பாவாய். (2)

அரும்பதவுரை

வையத்து: உலகத்திலே. பாவைக்கு: பாவை நோன்பிற்கு. கிரிசைகள்: கிரியைகள். நாள்காலை: விடியற்காலத்திலேயே. தீக்குறளை: பிறருக்குத் தீமை உண்டாகும்படி ஒருவர் சொல்லும் கோள். ஐயம்: தகுதியுள்ள பெரியோர்களுக்கு உரிய காலத்தில் தேவை அறிந்து கொடுப்பது. பிச்சை: 'தேஹி' என்று வருகிற பிட்சுக்களுக்குக் கொடுப்பது. ஆம்தனையும்: இயன்ற வரையில். கைகாட்டி: கை எவ்வளவு கொடுத்தாலும் 'நாம் என்ன கொடுத்து விட்டோம்!' என்று நெஞ்சு நினைக்கும்படி ஒரு சிறிதும் செருக்கு இல்லாமல் கொடுத்து. உய்யும் ஆறு: உய்ந்து போகும் வழியை; பிழைக்கும் வழியை. உகந்து: உவப்புக் கொண்டு; மகிழ்ந்து.

விளக்கம்

இந்தப் பாட்டில், பாவை நோன்பு நோற்பதற்குஉரிய நியமங்கள் தெரிவிக்கப்படுகின்றன. எந்தப் பெருங் காரியத்தில் ஈடுபடுவோரும் அந்தக் காரியம் கைகூடும் வரையில் சில நியமங்களை மேற்கொள்வது பிரசித்தம். இந்த நியமங்களில், பற்றிக் கொள்வன சில; விட வேண்டியவை சில. இந்தப் பெண்களும் அத்தகைய சில நியமங்களைச் சங்கற்பித்துக் கொள்கிறார்கள்—அதாவது, பற்றும் கிரியைகளையும் விடும் கிரியைகளையும்.

இவர்கள் பற்றிக் கொள்வன: (1) பரமன் அடி பாடுதல், (2) காலை நீராடுதல், (3) ஐயமும் பிச்சையும் கைகாட்டுதல், (4) உய்யும் வழியை எண்ணி உகந்திருத்தல். இவர்கள் விட்டுவிடுவன: (1) நெய், பால் உண்ணாதது, (2) மையாலும் மலராலும் அலங்கரித்துக் கொள்ளாதது, (3) செய்யத் தகாத காரியங்களைச் செய்யாமல் இருப்பது, (4) கோள் சொல்லாமல் இருப்பது. இவற்றுள் முதல் இரண்டும் தாற்காலிகமானவை.

# 3. வளம் சுரக்கும், நலம் பெருகும்

முதல் முதல் 'நாராயணனே நமக்கே பறைதருவான்' என்று பாடி வந்தவர்கள் பிறகு 'பாற்கடலுள் பையத்துயின்ற பரமன் அடி பாடி'னார்கள். 'ஆதிப் பரம்பொருள் நாரணன் தெளிவாகிய பாற் கடல் மீதினில், நல்ல ஜோதிப்பணாமுடி ஆயிரம் கொண்ட தொல் அறிவு என்னும் ஓர் பாம்பின்மேல் ஒரு போதத்துயில்' கொண்டிருக் கிறான் என்றும், அந்தப் பரம்பொருளே உலகத்தில் அவதரிக்கிறான் என்றும், புதுமைக் கவியாகிய பாரதியாரும் பாடியிருக்கிறார். இப்படி அவதரித்த அவதாரங்களில் வாமனாவதாரத்தைக் குறித்து இப் போது பாடுகிறார்கள் கோபியர்கள்.

குள்ளனைக் குள்ளனாகப் பாடவில்லை; 'ஓங்கி உலகளந்த உத்த மன்' என்று பாடுகிறார்கள். திருநெடுமால் எப்படி வாமனன் என்ற விசித்திரக் குள்ளன் ஆகிவிட்டான் தெரியுமா? நூற்றுக்கணக்கான மக்களுக்கோ பிராணிகளுக்கோ தங்க நிழலும் இடமும் தரக்கூடிய பிரம்மாண்டமான ஆலமரம் அதன் விதைக்குள் அடங்கித் தானே கிடந்தது? அப்படி அடங்கிக் கிடந்தாலும் வாமன வடிவத்தில் 'ஓங்கி உலகளந்த உத்தமன்.'

இந்த 'உத்தமன் பேர் பாடி' நாம் நம் பாவை நோன்பிற்கு அங்கம் என்று சொல்லிப் பனி நீராடுவோம் என்கிறார்கள். இப்படி நீராடி நோன்பு நோற்றால், அதன் பயனாக,

*தீங்கின்றி நாடெல்லாம்*
*திங்கள்மும் மாரிபெய்து*

செழிப்படையும் என்கிறார்கள்.

நெற்பயிர் வளர்ந்தோங்கும் என்கிறார்கள். 'ஓங்கி உலகளந்த உத்தமன்' கிருபையால் 'ஓங்கு பெருஞ் செந்நெல்' செழித்து வளரும் என்கிறார்கள். வயல் வளமும் நீர் வளமும் பாடுகிறார்கள்.

*ஓங்கு பெருஞ்செந்நெல்*
*ஊடு கயல்உகள*

என்று அந்தப் பயிர்களினூடே கயல் மீன்கள் துள்ளுவதையும் குறிப் பிடுகிறார்கள்.

வளத்துடன் அந்த வனப்பையும் குறிப்பிடுகிறார்கள். வயல் களில் களை என்று பறித்து எறியப்படும் குவளை மலர்களின் அழகை வருணிக்கிறார்கள். 'பூங்குவளைப் போது' என்கிறார்கள். வரப்புகளில் காணப்படும் இந்தப் பூங்குவளை மலர்களில் வண்டுகள் தேனுண்டு மயங்கி உறங்குகின்றனவாம்.

பூங்குவளைப் போதில்
பொறிவண்டு கண்படுப்ப

என்று தேனூறும் தமிழில் அந்த அழகை வருணிக்கிறார்கள். 'பொறி வண்டு' என்று அந்த வண்டுகளின்மேல் உள்ள புள்ளிகளையும் சுட்டிக் காட்டுகிறார்கள்.

இங்கே இயற்கை நாடகம் ஒன்று நடக்கிறது. குவளைப் பூவில் வண்டு மதுபானம் பண்ண வந்து படிந்த நிலையிலே, கயல் மீன்கள் ஊடே சஞ்சரிக்கின்றனவாம். துள்ளுகின்றனவாம். அதனால் செந் நெலும் குவளையும் ஒக்க அசைகின்றன. வண்டுக்குத் தன் பூம் படுக்கை இப்போது தூங்கு மஞ்சம் போல் அசைந்தாடுகிறது. தூங்கு மஞ்சத்தில் மதுவுண்டு அரசிளங் குமரர் உறங்குவது போல் வண்டுகள் உறங்குகின்றனவாம். இந்த நாடகத்தைச் சொல்லியும் சொல்லாமலும் நமக்குக் காட்டிவிடுகிறார்கள் இப்பெண்மணிகள்.

இப்போது வேறொரு காட்சி நமது கண்ணைக் கவர்கின்றது. பசுமாடு கறக்கும் சாதாரண நிகழ்ச்சிதான். ஆனால் என்ன மாடு! எவ்வளவு பால்! கறப்பவர்கள் தாம் எவ்வளவு ஜாக்கிரதையாக இருக்கிறார்கள்! ஒரு நிலையாக இருந்து சலியாமல், ஏங்காமல் பசுக் களின் பருத்த மடிகளைப் பற்றி இழுக்கிறார்கள். பால் பெருகுகிறதா, அல்லது வெள்ளம்தான் பெருகி வருகிறதா? குடம் நிறைந்து விடுகிறது. ஒரு குடமா? குடங்கள் நிறைந்து விடுகின்றன பால் வெள்ளத்தால்! இந்தப் பசுக்களைப் 'பெரும் பசுக்கள்' என்று கூறு வதுடன் திருப்தி யடையாமல் 'வள்ளல் - பெரும் பசுக்கள்' என் கிறார்கள். வள்ளல்கள் பாடம் கற்றுக்கொள்ள வேண்டும் இந்தப் பசுக்களிடம்!

இப்படி யெல்லாம் வருணித்து, 'நீங்காத செல்வம் நிறைந்து விடும்' என்கிறார்கள். பகவந் நாம ஸங்கீர்த்தனம் செய்துகொண்டே நீராடி நோன்பு நோற்றால் க்ஷேமம் பெருகும், க்ஷாமம் (வறட்சி) நீங்கிவிடும் என்கிறார்கள். நீர் வளம் நில வளம் நெல் வளம் பால் வளம் ஆகிய எல்லா வளங்களும் நிறைந்து நீங்காத செல்வம் பெருகும் என்கிறார்கள்.

'திங்கள் மும்மாரி' என்றால் மூன்று நாள் அல்லும் பகலுமாக மழை அடித்துச் சொரிந்து வெள்ளக் காடாக்கி விடும் என்பது பொருளல்ல. இருபத்தேழு நாள் வெயில் கொளுத்தி ஹிம்ஸித்த பின் மூன்று நாள் மழையும் ஓயாது ஒழியாது பெய்து ஹிம்ஸிப்பதானால், கஷ்டம் ஏற்படத்தானே செய்யும்? எனவே ஒன்பது நாள் வெயிலும் ஒரு நாள் மழையுமாய்த் தீங்கின்றி மும்மாரி பெய்யும் என்கிறார்கள்.

தீங்கின்றி நாடெல்லாம்
திங்கள்மும் மாரிபெய்து

என்று பாடும்போது, 'தீங்கின்றி' என்பதைச் சற்று அழுத்தி உச்சரிக் கிறார்கள்; எதுகையில் அமைந்திருக்கிறதல்லவா?

வள்ளற் பெரும் பசுக்கள் ஞானத்தை வழங்கும் நல்லாசிரியர்களையும் நினைவூட்டுகின்றன. வள்ளல்களுக்குப் பாடம் கற்பிப்பது போல் ஆசிரியர்களுக்கும்—ஆம், பாடம் சொல்லிக் கொடுக்கும் ஆசிரியர்களுக்கும்—இப் பசுக்கள் ஒரு பாடம்—முக்கியமான பாடம்—கற்பிக்கத்தான் செய்கின்றன.

மடியைக் கறப்பதுபோல ஆசிரியரின் திருவடியைப் பற்றிக் கொண்டு ஞானப் பால் கறக்க முயல்பவன் தானே சீடனும். வள்ளற் பெரும் பசு குடம் நிறைப்பது போல் ஆசிரியனும் ஞானத்தை நிறைய வழங்கிச் சீடனின் உள்ளத்தை நிறைக்கிறான்; நிறைக்க வேண்டும்—இல்லையா?

இனி, இப்பாட்டு முழுமையும் நோக்கி இன்புறுவோம்:

## உள்ளபடி நோற்றால் உலகம் செழிக்கும்

ஓங்கி உலகுஅளந்த
உத்தமன் பேர்பாடி
நாங்கள் நம் பாவைக்குச்
சாற்றிநீர் ஆடினால்,
தீங்குஇன்றி நாடுஎல்லாம்
திங்கள்மும் மாரிபெய்து,
ஓங்கு பெருஞ்செந்நெல்
ஊடு கயல்உகள,
பூங்குவளைப் போதில்
பொறிவண்டு கண்படுப்ப,
தேங்காதே புக்குஇருந்து
சீர்த்த முலைபற்றி,
வாங்கக் குடம்நிறைக்கும்
வள்ளல் - பெரும்பசுக்கள்
நீங்காத செல்வம்
நிறைந்தேலோர் எம்பாவாய். (3)

வாமன் அவதாரம்

### அரும்பதவுரை

பாவைக்குச் சாற்றி: பாவை நோன்பிற்கு உறுப்பு என்று சொல்லி; நோன்பு நோற்பது என்று ஒரு வியாஜம் சொல்லி. செந்நெல் ஊடு: செந்நெற் பயிர்களினூடே. கயல்உகள: கயல்மீன்கள் துள்ள. பூங்குவளைப் போதில்: அழகிய குவளை மலர்களில். பொறி

வண்டு: புள்ளிகளையுடைய வண்டு. கண்படுப்ப: உறங்க. தேங்காதே புக்கு இருந்து: சலியாமல், ஏங்காமல் கறக்கப் புகுந்து ஒரு நிலையாயிருந்து. சீர்த்த: (இங்கே) பருத்த. பற்றி வாங்க: பிடித்து இழுக்க.

### விளக்கம்

உத்தமன் பேர் பாடி நாங்கள் பாவை நோன்பை வியாஜமாகக் கொண்டு நீராடினால், திங்கள் மும்மாரி பெய்து நாடு செழிக்கும்; நீர் வளம் நெல் வளம் பால் வளம் ஆகிய வளங்களெல்லாம் கிடைக்கும் என்கிறார்கள்.

கடவுளை உத்தமன் என்று இங்கே குறிப்பிடுவது கூர்ந்து நோக்கத்தக்கது. தன்னை அழிய மாறியாகிலும் பிறர் வாழவேண்டும் என்று பணிபுரிகிறவனே உத்தமன் என்கிறார் வியாக்கியான சக்கரவர்த்தியான பெரியவாச்சான் பிள்ளை. நெடுமால் தன் வடிவைக் குறுகச் செய்து தேவர்களையும் மனிதர்களையும் வாழ்வித்ததால் 'உத்தமன்' என்று குறிக்கப்படுகிறான்.

பிறரும் வாழவேணும், நாமும் வாழவேணும் என்று இருப்பவனை 'மத்தியமன்' என்கிறார். பிறரை ஹிம்ஸித்துத் தன் வயிற்றை வளர்க்க விரும்புகிறவனை 'அதமன்' என்கிறார்.

'வள்ளல் - பெரும் பசுக்கள்' ஞானத்தை மக்களுக்கு வழங்கும் நல்லாசிரியர்களையும் நினைப்பூட்டுகின்றன.

## 4. மழையே! மழையே! வா, வா

மார்கழி நீராடிப் பாவை நோன்பு நோற்றால், நாட்டுக்கு விளையும் நலங்கள் குறித்து ஆயச் சிறுமியர் ஆலோசித்துக் கொண்டிருக்கும் போதே, மழைக் கடவுளும் 'இவ்வளவு கிருஷ்ண பக்தி யுள்ள இவர்களுக்குக் கொஞ்சம் நம்மால் ஆன பணியும் புரிவோம், புரிந்து பேறு பெறுவோம்' என்று தானும் ஆலோசிக்கத் தொடங்கினான். இப்படி ஆலோசித்து, 'நான் உங்கள் விஷயமாக என்ன பணி செய்ய வேண்டும் என்பதை நீங்கள் தயவு செய்து தெரிவிக்க வேணும்' என்று இவர்களைக் கேட்கிறான். இவர்கள் மழைக் கடவுளைப் பிரார்த்திக்கவில்லை; அவன்தான் இவர்களைப் பிரார்த்தித்துப் பாக்கியம் அடைய விரும்புகிறான். இப்படி யெல்லாம் தோன்றுகிறது இவர்களுக்கு, நீண்ட வானத்திலே கரும் புள்ளிபோல் ஒரு மேகத்தைப் பார்க்கும்போது.

'மழைக் கடவுளே! நீ ஒன்றும் கையிருப்பாக வைத்துக்கொள்ளத் தெரியாத வள்ளல் போல் பொழிய வேணும்' என்று இவர்கள் சொல்லுகிறார்கள். விண்ணப்பம் செய்து கொள்ளவில்லை, கட்டளையிடுவது போல் பேசுகிறார்கள். 'கடலுக்குள் புகுந்து அந்த வெள்

ஸைவணவு



ளத்தை அப்படியே முழுதும் முகந்துகொண்டு நன்னீராக்கிக் கொட்ட வேணும்' என்கிருர்கள். 'கொஞ்சமும் லோபம் செய்யக் கூடாது, தெரியுமா?' என்கிருர்கள்.

மேகத்தினிடையே தோன்றிய அந்த மழைக் கடவுள் தங்களிடம் அடங்கி ஒடுங்கிப் பணி கேட்பதைப் பார்த்து, 'நீ பொழியும்போது இந்த அடக்க ஒடுக்கங்களை விட்டுவிட வேணும்' என்கிருர்கள். கடல் நீரை முகந்துகொண்டதும் பெரு முழக்கத்துடன் கம்பீரமாக வான வீதியில் செல்லவேணும் என்கிருர்கள்.

'உன் அஞ்சன மேனியில் அழகு கறுத்து விளங்க வேண்டும்' என்கிருர்கள்.

ஊழி முதல்வன்
உருவம்போல் மெய்கறுத்து

என்கிருர்கள். கண்ணனுடைய கறுப்பழகு பெற்றுத் திகழ வேண்டு மாம் மழைக் கடவுள்.

கண்ணனை 'ஊழி முதல்வன்' என்கிருர்கள்; 'பத்மநாபன்' என் கிருர்கள். 'வாராய் மழைக் கடவுளே! நீ எங்கள் பெருமானது திரு மேனி போலக் கருமை யழகு பூண்டு, அவனது வலது கையிலுள்ள சக்கராயுதம் போல் பளிச் பளிச்சென்று மின்ன வேண்டும்' என் கிருர்கள். 'பற்பநாபன் கையில் ஆழிபோல் மின்னி' என்பது இவர்கள் வாக்கு. வலிமையும் அழகும் பொருந்திய தோள் என்று அந்தப் பத்மநாபன் தோளையும் வருணிக்கிருர்கள்.

கண்ணனுடைய அழகிலும் இவர்களுக்கு ஆசை; வலிமையிலும் ஆசை. கண்ணனுடைய மேனி நிறத்தை மேகத்தினிடம் காண ஆசை. வலிமைக்கு அறிகுறியாக அவன் கையிலுள்ள சக்கரா யுதத்தை மேகத்தினிடையே மின்னி வரும் மின்னலிடம் காண ஆசை. அப்படியே எம்பெருமானின் இடது கையிலுள்ள வலம்புரிச் சங்கின் முழக்கம் போன்ற இடி முழக்கத்தையும் கேட்க ஆசைப்படு கிருர்கள்.

பாழிஅந் தோள்உடைப்
பற்பநா பன்கையில்
ஆழிபோல் மின்னி
வலம்புரிபோல் நின்று அதிர்ந்து

மழையைக் கொட்டவேணும் மழைக் கடவுள் என்கிருர்கள்.

மழை அடித்துச் சொரியவேணும், அடைத்துப் பெய்யவேணும் என்றும் ஆசைப்படுகிருர்கள். எப்படி? கண்ணபிரானுடைய கையில் சார்ங்கம் என்ற வில் இருக்கிறதல்லவா? அந்த வில் அம்பு களை உதிர்க்கவில்லை; உதைத்துத் தள்ளுகிறது! 'மழைக் கடவுளே! நீயும் மழைத் துளிகளை உதிர்த்தால் போதாது' என்கிருர்கள்.

துஷ்ட நிக்கிரகம் செய்வதற்காக இறைவனது வில் அம்புமழையை உதைத்துத் தள்ளுகிறதல்லவா?-அப்படித்தள்ளவேண்டும் வானத்திலிருந்து மழை வெள்ளத்தை என்கிறார்கள்.

மழை வளத்தை விரும்புகிறவர்கள் கண்ணனுடைய அம்பு மழையைக் குறிப்பிடுவதற்குக் காரணம் என்ன? கண்ணனுக்கு அம்புமழையும் அன்பு மழைதான்! அசுர சுபாவத்தை வேறுவிதமாகத் திருத்த முடியவில்லையென்றால், அழித்துத் தானே திருத்த வேண்டியிருக்கிறது! இதைத்தான் 'மறக் கருணை' என்கிறார்கள். பொறுத்துப் பொறுத்துப் பார்க்கும் இறைவன் முடிவில் பயங்கரமான நாச வழிகளாலும் உலகத்தை வாழ வைக்கிறான் என்பர்.

தென்றலாக வீசுகிறவன் சண்டமாருதமாகவும் சீறியடிக்கிறான். சாதுவுக்குத் தென்றல், அசுரனுக்குப் புயல்—புரட்சி!

தாழாதே சார்ங்கம்
உதைத்த சரமழைபோல்
வாழ உலகினில்
பெய்திடாய்!

என்றுதானே மழைக் கடவுளுக்குக் கட்டளை யிடுகிறார்கள்.

அம்பு மழைபோல் அழியப் பெய்திடாய் என்று சொல்லவில்லை; இறைவனுடைய அன்பு மழை போல் உலகம் வாழப் பெய்திடாய் என்று இவர்கள் கூறுவது கூர்ந்து சிந்திக்கத் தக்கது.

வாழ உலகினில்
பெய்திடாய், நாங்களும்
மார்கழிநீர் ஆட
மகிழ்ந்துஏலோர் எம்பாவாய்

என்றுதான் பாடுகிறார்கள்.

கண்ணனுடைய அருள்போல்—மறக்கருணை போலவும்—மழை இறங்கி வரவேணும் என்று கூறுகிறவர்கள், கண்ணனுடைய அருளும் இத்தகைய மழை போல் இறங்கி வரவேணும் என்று ஆசைப்படுகிறார்கள்.

## வாழ உலகினில் பெய்திடாய்

ஆழி மழைக்கண்ணா!
ஒன்றும்நீ கைகரவேல்;
ஆழியுள் புக்கு,
முகந்துகொடு, ஆர்த்துஏறி,

ஊழி முதல்வன்
உருவம்போல் மெய்கறுத்து,
பாழிஅந் தோள்உடைப்
பற்பநா பன்கையில்
ஆழிபோல் மின்னி,
வலம்புரிபோல் நின்று அதிர்ந்து,
தாழாதே சார்ங்கம்
உதைத்த சரமழைபோல்
வாழ உலகினில்
பெய்திடாய்; நாங்களும்
மார்கழிநீர் ஆட
மகிழ்ந்தேலோர் எம்பாவாய். (4)

### அரும்பதவுரை

ஆழி மழைக்கண்ணா: கடல்போல் கம்பீரமாக இருப்பவனும் மழைக்கு உரியவனுமாக உள்ள தலைவனாகிய தெய்வமே; மழைக் கடவுளே. ஒன்றும் நீ கை கரவேல்: ஒன்றையும் நீ கையிருப்பாக வைத்துக் கொள்ளாதே. முகந்துகொடு: நீரை முகந்துகொண்டு. ஆர்த்து: ஆரவாரம் செய்து. ஊழி முதல்வன்: திருமால்; காலம் முதலிய எல்லாவற்றுக்கும் முதன்மையானவன். பாழிஅம் தோளுடை: வலிமை பொருந்திய அழகிய தோள்களையுடைய. பற்பநாபன்: பத்மநாபன். ஆழிபோல்: சக்கராயுதம் போல். வலம்புரி: வலம்புரிச் சங்கு. தாழாதே: தாமதியாமல். சார்ங்கம் உதைத்த: பெருமான் கையிலுள்ள சார்ங்கம் என்னும் வில் உதைத்துத் தள்ளிய. சரமழை: அம்பு மழை.

### விளக்கம்

மழைக்கு அண்ணலாகிய தேவதையைக் குறித்துச் சிறுமிகள் பாடுகிறார்கள். இவர்கள் மழைக் கடவுளைப் பிரார்த்திக்கவில்லை. அக் கடவுளுக்குக் கட்டளையிடுவது போலப் பேசுகிறார்கள். ஆம்; 'தாழாதே......பெய்திடாய்' என்று கட்டளையிடுகிறார்கள்.

'மழையே! உலகம் வாழவும், நாங்கள் மகிழ்ந்து மார்கழி நீராடவும் பெய்வாயாக!' என்று கட்டளையிடுகிறார்கள். கிருஷ்ண பக்தர்களானதால் கண்ணனுடைய மேனி நிறம், சங்கு சக்கரங்கள், வில், அம்புமழை ஆகியவற்றை நினைவூட்டி, அப்படிப் பெய்ய வேண்டும் என்கிறார்கள். கண்ணனுடைய அம்பு மழைகூட அன்பு மழைதான் என்பது குறிப்பு.

# 5. இடையூற்றுக்கும் இடையூறு உண்டு!

எந்த நல்ல காரியத்திற்கும் இடையூறுகள் குறுக்கிடுவது உண்டு. பெரிய பெரிய காரியங்களுக்குப் பெரிய பெரிய இடையூறுகள் வந்து குறுக்கிடுவதையும் காண்கிறோம். எனவே இக் கன்னியருள் ஒருத்தி இத்தகைய கேள்வி ஒன்றை எழுப்பினாள். 'நாம் நெடுநாளாகச் செய்திருக்கும் பிழைகள் பாவங்கள் எல்லாம் இன்று நாம் செய்யக் கருதும் இந்த நல்ல காரியத்திற்கு இடையூறு விளைக்கலாமே!' என்றாள். அந்த இடையூறுகளை யெல்லாம் அநாயாசமாகத் தொலைத்து எடுத்த காரியத்தைத் தொடுத்து முடிப்பதற்கு ஒரு ராஜ வழி இருக்கிறது என்கிறாள் விசேஷ நம்பிக்கையுள்ள ஒரு பெண்.

சுருங்கச் சொன்னால், நாம ஸங்கீர்த்தனம் பண்ணுவதே அந்த வழி என்கிறாள். பகவந் நாம ஸங்கீர்த்தனமும் பண்ணிக் காட்டுகிறாள். பகவானைக் காட்டிலும் பகவானுடைய திருப்பெயர் நமக்குப் பக்கத்திலிருந்து பெற்ற தாய்போல் உபகரிக்கிறது என்று மட்டும் சொல்லவில்லை; நாம ஸங்கீர்த்தனத்திலிருந்து பிறக்கும் சக்தி சாமானியமல்ல என்கிறாள். அது தீயாகிப் பாவங்களை யெல்லாம் நீருக்கிவிடும் என்கிறாள்.

எத்தகைய பாவத்தையும் எரித்து விடுமா? இது ஒரு கேள்வி. காட்டுத் தீயைப் பற்றிக் கேட்டிருக்கிறீர்களா? அது பச்சை மரங்களையும் பஸ்மம் ஆக்கி விடுகிறதல்லவா? நாம ஸங்கீர்த்தனமும் பாவங்களனைத்தையும் உரு மாய்ந்து ஒழியச் செய்துவிடும் என்கிறாள்.

நாம ஸங்கீர்த்தன வழிக்கு ஒரு முன்மாதிரியாகவும் பேசுகிறாள். 'மாயனை' என்று தொடங்குகிறாள்.

மாயனை, மன்னு
வடமதுரை மைந்தனை

என்று பாடுகிறாள்.

மேலும் நாம ஸங்கீர்த்தனம் செய்கிறாள். யமுனைத் துறைவன் என்கிறாள். ஆயர்குல மணி விளக்கு என்கிறாள். தாமோதரன் என்கிறாள். இவை பொருள் பொதிந்த பெயர்கள் மட்டுமல்ல, பொருள் புதைந்த பெயர்களும்கூட. முதல் முதல் மாயன் என்ற பெயரைத்தான் பாருங்கள்: இறைவனுடைய வழிகளும் செயல்களும் மாயமானவை—அதாவது ஆச்சரியமானவை,

'வடமதுரை மைந்தன்' என்ற திருப்பெயரைப் பாருங்கள்: 'தந்தை காலின் பெருவிலங்கு தாள் அவிழ, நள் இருட்கண் வந்த எந்தை' என்பதை மைந்தன் நினைவூட்டுகிறான். இவன் பிறக்கும் போதே தாய் தந்தையர்களின் கால் விலங்குகள் இற்று முறிந்து போய்விட்டனவாம். இது பிறந்த மிடுக்கு. பிறகு இம் மைந்தன்

பருவம் நிரம்பு முன்னே அசுர மாமனுகிய கம்சனை வதைத்த மிடுக்கையும் காண்கிறோம்.

ஆயர்குல விளக்கு என்று பெயரிட்டு அழைப்பதிலும் புதை பொருள் உண்டு. வேதம் ஓதியும் காணமுடியாத கடவுளை மாடு மேய்த்துக் கண்டுகொண்டார்களாம் ஆயர்கள். மறைக்கு முன்னே சென்று மறைந்தவன் மாட்டுக்குப் பின்னே ஆய்ப்பாடி காண நடந்து சென்ருனும். இத்தகைய எளிமையை உணர்த்துகிறது இப்பெயர்.

'தாமோதரன்' என்ற பெயரின் பொருள் மேலும் விசேஷமானது. 'கயிற்றுத் தழும்பை வயிற்றில் உடையவன்' என்பது இப் பெயரின் பொருள். யசோதை கட்டிய கயிற்றுத் தழும்பை வயிற்றில் உடையவனுக இருந்தான் கண்ணன் என்ருல், பகவானுடைய எளிமைக்கு எத்தகைய நினைவுச் சின்னம் பாருங்கள்! இந்தத் தாமோதரனை,

தாயைக் குடல் விளக்கம்
செய்ததா மோதரனை

என்கிருள் கோபியருள் ஒருத்தி. தன் பிறப்பினுல் பெற்ற வயிற்றுக்குப் பெருமை தந்தான்; தன் வயிற்றுத் தழும்பினுல், தாயை வாழ்வித்தான்; உலகையும் வாழ்வித்தான்.

இனி, இப் பெயர்களைக் கோத்து இவள் நாம ஸங்கீர்த்தனம் செய்து காட்டுவதைப் பார்க்கலாம்:

மாயனை, மன்னு
வடமதுரை மைந்தனை,
தூய பெருநீர்
யமுனைத் துறைவனை,
ஆயர் குலத்தினில்
தோன்றும் அணிவிளக்கை
தாயைக் குடல்விளக்கம்
செய்ததா மோதரனை......

இப்படி நாம ஸங்கீர்த்தனம் செய்யும்போது, மனத்தினுல் சிந்தித்து வாயினுல் பாடும்போது, ஒரு சக்தி பிறக்கிறது நெஞ்சிலே. அது தீயாக ஜொலிக்கிறது; காட்டுத் தீயாகக் கனன்று நிமிர்ந்து பொங்குகிறது. இந்தத் தீக்கு முன் எந்தக் கடினமான பாவமும் நிற்க முடியாது, இவள் இதற்கு முன் செய்த பிழையும் பாவமும் பஞ்சாகித் தீய்ந்து ஒழிந்து போகும் என்கிருள்.

இப்போது செய்ய வேண்டியது, அகத் தூய்மையுடன் நாம ஸங்கீர்த்தனம் செய்ய வேண்டியதுதான். அகத் தூய்மைக்கு அறிகுறியாகத் தூய மலர்களையும் தூவித் தொழுது பேறு பெறக் கூடும் என்கிருள். எல்லாவற்றுக்கும் மேலாக,

வாயினுல் பாடி
மனத்தினுல் சிந்திக்க,

பிழையும் பாவமும் நீருகி விடும் என்கிருள். சாம்பலுமின்றி மாய்ந்து போகும் என்பதையும் குறிப்பாக உணர்த்துகிருள்.

முன்பு செய்த பிழைகள் மட்டுமா?—இனிமேல் நம்மை அறியாமல் நேரிடத்தக்க பாவங்களும் தீய்ந்து போகும் என்கிருள். ஆகையால் திருநாமங்களைச் சொல்லிக்கொண்டு அல்லது பாடிக் கொண்டு நோன்பிலே இறங்கி, இந்த வியாஜத்தாலே இறைவனை இடையூறின்றி அடைய முடியும் என்று கூறி முடிக்கிருள்.

## தீயினில் தூசு!

மாயனை, மன்னு
வட்மதுரை மைந்தனை,
தூய பெருநீர்
யமுனைத் துறைவனை,
ஆயர் குலத்தினில்
தோன்றும் அணிவிளக்கை,
தாயைக் குடல்விளக்கம்
செய்ததா மோதரனை,
தூயோமாய் வந்துநாம்
தூமலர்தூ வித்தொழுது,
வாயினுல் பாடி,
மனத்தினுல் சிந்திக்க,
போய பிழையும்
புகுதருவான் நின்றனவும்
தீயினில் தூசுஆகும்;
செப்பேலோர் எம்பாவாய். (5)

### அரும்பதவுரை

மன்னு வடமதுரை மைந்தன்: நிலைபெற்ற வடமதுரையில் தோன்றியவன்; தன்னுடைய தொடர்பு நிலைபெற்று வட மதுரையில் பொருந்தியிருக்கும்படி அவதரித்தவன். தூயபெருநீர் யமுனைத் துறைவன்: தூய்மையான வெள்ளம் உடைய யமுனைத் துறையில் வசித்தவன். குடல் விளக்கம்: பெற்ற வயிற்றுக்கு மேன்மை. தாமோதரன்: கிருஷ்ணன். தூமலர்: தூய மலர்கள்

போய பிழையும்: ஞானம் பிறப்பதற்கு முன்பு செய்த பிழைகள். புகுதருவான் நின்றனவும்: இனிமேல் நம்மை அறியாமல் நேரிடத் தக்க பிழைகளும். தூசு: பஞ்சு. செப்பு: ஆகையால் அவனுடைய திருப்பெயர்களைச் சொல்.

### விளக்கம்

இவர்கள் நோன்பில் இறங்கிக் கண்ணனை அடைய விரும்புகிறார்கள் அல்லவா? ஆனால் ஏற்கெனவே செய்திருக்கும் பிழைகளின் விளைவு இந்த நற்செயலுக்கு இடையூறு ஆகாதா? இப்படி ஒரு வினா எழக்கூடு மல்லவா? பிழைகளாகிய விரோதிகளைப் போக்கிக் கொண்டு வந்துதான் இத்தகைய நோன்பில் இறங்கவேண்டும் என்பதில்லை. அப்படிக் கூறுவதில் பொருளுமில்லை; பயனுமில்லை. நாம ஸங்கீர்த்தனத்தில் இன்புற்று ஈடுபடவே பிழைகள் எல்லாம் தீயிலிட்ட பஞ்சுபோல் ஆகிவிடுமாம்.

ஏற்கெனவே செய்த பிழைகள் மட்டுமா?—இனிமேல் நேரக் கூடிய பிழைகளும் தீயினில் பஞ்சு படும் பாடு படும் என்கிறாள் ஞானம் உடைய ஒரு சிறுமி.

## 6. பிள்ளாய்! எழுந்திராய்

நோன்பை வியாஜமாகக்கொண்டு கண்ணனை அடையவேண்டுமென்றும், அவனுக்குப் பணிபுரிய வேண்டுமென்றும் தீர்மானித்துக் கொண்ட பெண்கள் 'மார்கழி நீராட்டத்திற்கு வாருங்கள்' என்று விருப்பமுள்ளவர்களை யெல்லாம் கூவி அழைத்ததை முதல் பாசுரத்தில் பார்த்தோம். பனி நீராடலின் உட்பொருளையும் கண்ணனைப் பிரிந்திருந்த தாபம் தீர அன்பு நீராடுதல் என்ற உட்பொருளையும் ஒருவாறு உணர்ந்து கொண்டோம்.

இரண்டாவது பாசுரத்திலே நோன்பிற்குச் செய்யும் கிரியைகள் பிரஸ்தாபிக்கப் படுவதைத் தெரிந்து கொண்டோம். மூன்றாவது பாசுரத்தில் நோன்பின் ஒரு பயனாக நாடு செழிக்க மழை பெய்யும் என்பதை அறிந்து கொண்டோம். நான்காவது பாசுரத்தில் சிறுமியர் மழை பெய்ய வேண்டுமென்று மழைக் கடவுளுக்கு உத்தரவு போடுகிறார்கள்; குழந்தை உள்ளத்துடன் கட்டளையிடும் போதே, கண்ணனுடைய நினைவுதான்! 'மழைக் கண்ணா!' என்று அழைத்து, மேகம், மின்னல், இடி, மழைத் தாரை ஆகிய தோற்றங்களிலெல்லாம் கண்ணனுடைய தொடர்பைக் காண ஆசைப் படுகிறார்கள். ஐந்தாம் பாசுரத்திலே, இடையூற்றுக்கு இடையூறாகக் கண்ணன் திருநாமம் தங்களைக் காப்பாற்றும் என்ற உறுதியான நம்பிக்கை வெளியிடப்படுவதையும் கண்டுகொண்டோம்.

இனி இந்த ஆறும் பாட்டு முதல் பத்துப் பாசுரங்களால்—அதாவது பதினைந்தாம் பாசுரம் வரை—முற்பட எழுந்த பெண்கள் எழுந்திராதவர்களை எழுப்புவதைக் காணப்போகிறோம். இந்தப் பாடல்கள் ஒருவகையில் பள்ளியெழுச்சிப் பாடல்கள். அரசர்கள் முதலானவர்களைப் பாடல்கள் பாடித் துயில் உணர்த்துவதுண்டு. ராஜாதி ராஜனுகிய கடவுளையும் திருப்பள்ளியெழுச்சி பாடித் துயில் உணர்த்துவதுண்டு. தொண்டரடிப்பொடி ஆழ்வார் திருமாலுக்குத் திருப்பள்ளியெழுச்சி பாடியிருக்கிறூர். மாணிக்கவாசக சுவாமிகள் சிவபெருமானுக்குத் திருபள்ளியெழுச்சி பாடியிருக்கிறூர். இங்கே ஏற்கெனவே துயில் உணர்ந்து எழுந்தவர்கள் எழுந்திராதவர்களுக்குப் பள்ளியெழுச்சி பாடுவதுபோல் பாடித் துயில் எழுப்புகிறூர்கள்.

* * *

முற்படத் துயில்உணர்ந்து வீதிவழியே வருகிறவர்களில் ஒருத்தி எழுந்திராத ஒருத்தியை எழுப்பும்போது,

புள்ளும் சிலம்பினகாண்

என்று பள்ளியெழுச்சி பாடத் தொடங்குகிறூள். 'பொழுது விடிவதற்கு முன்னே என்னை எழுப்ப வந்துவிட்டீர்களோ!' என்று இப்புதியவள் கேட்டதாக வைத்துக்கொண்டு, பொழுது விடிந்ததற்கு முதல் சாட்சியாகப் பறவைகள் கூவுதலைச் சுட்டிக் காட்டுகிறூள்.

பிறகு, 'சங்கு ஊதுகிறூர்களே' என்று சொல்லி, 'அந்தப் பேரோசையும் உன் காதில் விழவில்லையா?' என்று கேட்கிறூள்:

வெள்ளை விளிசங்கின்
பேர்அரவம் கேட்டிலையோ?

பறவை கூவுதலாவது சற்றுக் கூர்ந்து கவனித்தால் காதில் விழும். 'அந்த வெள்ளைச் சங்கு போடுகிற கூச்சலோ காதைத் துளைக்கிறதே, உனக்கு மாத்திரம் கேட்கவில்லையா?' என்கிறூள் கூட்டத்தின் பிரதிநிதியாகப் பேசுகிறவள்.

சங்கு 'வாருங்கள், கோவிலுக்கு வாருங்கள்' என்று கூவி அழைக்கிறதாம். எனவே, அழைக்கின்ற சங்கு என்ற பொருளில் 'விளிசங்கு' என்கிறூள். பறவை கூவுதலும் சங்கு கூவி அழைப்பதும் ஆகிய இரண்டு காலை ஒலிகளையும் குறிப்பிட்டபின்,

பிள்ளாய்! எழுந்திராய்

என்கிறூள்.

பிறகு, மூன்ருவது சாட்சியாக, 'ஹரி: ஹரி:' என்று முனிவர்களும் யோகிகளும் (பெரியோர்கள்) சொல்லிக்கொண்டே துயிலுணர்ந்து எழுந்திருக்கும் அந்த ஓசையை அடையாளமாகக் கூறுகிறூள்.

இப்படி மூவகைக் காலை ஒலிகளையும் சான்ருகக் கூட்டத்தின் பிரதிநிதி காட்டியதும், இப் புதியவள் எழுந்துவந்து கூட்டத்தில் கலந்து கொள்ளுகிருள் என்பது குறிப்பு.

* * *

பக்தி அனுபவத்தில் இறங்கும்போது தனிஅனுபவத்தைத்தானே பிரதானமாகக் கொள்ளவேண்டும் என்று சிலர்கேட்கலாம். முற்படத் துயில் உணர்ந்தவர்கள் தாங்களே கிருஷ்ண பக்தியிலும் கிருஷ்ண குணுனுபவத்திலும் ஈடுபட வேண்டியிருக்க, அவர்கள் ஏன் மற்றவரை எழுப்ப வேண்டும்? இது முக்கியமான கேள்விதான். இதற்கு விடை: அமிர்தத்தையும் பிறருடன் பங்கிட்டுக்கொள்வதே நலம்; இந்த விதிக்குப் பக்தி அனுபவமும் விலக்கன்று. ருசி உடையவர்கள் எல்லாரும் சேர்ந்து இறைவன் என்ற அமிர்தத்தை அனுபவிக்க வேண்டியதுதான் என்பது உத்தம பக்தர்களின் உறுதியான மன நிலை.

வேருெரு கேள்வி: இத்தகைய பக்தமணிகளான பெண்களில் சிலர் முன்கூட்டி எழுந்துவர, வேறு சிலர் உறங்கிக் கிடப்பதற்குக் காரணம் என்ன? அவர்கள் தாமே எழுந்துவர, இவர்களை எழுப்ப வேண்டியிருக்கிறதே, ஏன்? இதற்கு விடை: பக்தி சிலரை மயக்கித் தள்ளிவிடுகிறது, சிலரை இருந்த இடத்தில் இருக்க முடியாதபடி துள்ளியெழச் செய்கிறது என்பதுதான்.

நீராடப் போகும்போது பெண்கள் துணை தேடிப் பேசிக் கொண்டு போவது இயல்பு. புதுவெள்ளத்தில் நீந்தி நீராடுவோர் பெரும்பாலும் துணையின்றி அந்தப் பெருவெள்ளத்தில் இறங்கத் துணிவதில்லை. அப்படியே 'கால் ஆழும், நெஞ்சு அழியும், கண் சுழலும்!' என்று வருணிக்கப்படுகிற ஆழ்ந்த பக்தி அனுபவத்திற்கும் துணை அவசியம்தான் என்பர். தெரிந்த வாழ்க்கை இன்பத்திற்கு மேலானதும், என்றும் புதுமையாக உள்ளதுமான பேரின்ப உணர்ச்சி அச்சம் தருவதுதான் தொடக்கத்திலே! எனவே துணை தேடிக்கொண்டு இவர்கள் ஒரு கூட்டமாகப் போகிருர்கள்.

'நான் பெற்ற இன்பம் பெறுக இவ்வையகம்' என்பது உத்தம பக்தரின் உண்மை மன நிலை.

## காலையின் மூவகை ஒலிகள்

புள்ளும் சிலம்பினகாண்;
புள்அரையன் கோயில்
வெள்ளை விளிசங்கின்
பேர்அரவம் கேட்டிலையோ?

பிள்ளாய்! எழுந்திராய்
பேய்முலை நஞ்சுஉண்டு,
கள்ளச் சகடம்
கலக்குஅழியக் கால்ஓச்சி,
வெள்ளத்து அரவில்
துயில் அமர்ந்த வித்தினை,
உள்ளத்துக் கொண்டு
முனிவர்களும் யோகிகளும்
மெள்ள எழுந்து
அரிஎன்ற பேர்அரவம்
உள்ளம் புகுந்து
குளிர்ந்தேலோர் எம்பாவாய். (6)

### அரும்பதவுரை

புள்ளும்: பறவைகளும். சிலம்பின: கூவத் தொடங்கின. புள் அரையன்: (இங்கே) கருடனுக்குத் தலைவனான திருமால். விளிசங்கு: கூவி அழைக்கிற சங்கு. பிள்ளாய்: (இங்கே) சிறு பெண்ணே. பேய்: (இங்கே) பூதனை. கள்ளச் சகடம்: கள்ளத்தனமாக அசுர ஆவேசம் பெற்று வந்த வண்டி; சகடாசுரனால் திருட்டுத்தனமாக ஆவேசிக்கப்பட்டுக் கண்ணனைக் கொல்ல வந்த வண்டி. கலக்கு அழிய: கட்டு அழியும்படி. கால் ஓச்சி: காலால் ஓங்கி உதைத்து. வெள்ளத்து: பாற்கடல் வெள்ளத்திலே. அரவில்: சர்ப்ப சயனத்தில்; ஆதிசேஷன் என்ற பாம்பாகிய படுக்கையில். வித்தினை: விதையாகிய பெருமானை. அரி என்ற பேர் அரவம்: 'ஹரி: ஹரி:' என்று சொல்லுகிற பேர் ஒலி.

### விளக்கம்

பொழுது விடிந்துவிட்டது என்பதற்கு மூன்று சான்றுகள் காட்டுகிறார்கள் துயில் எழுப்பும் சிறுமியர். அதிகாலையில் கூவத் தொடங்கும் பறவைகளும், கோயிலில் காலை வேளையில் ஊதும் சங்குகளும், ஹரிநாமத்தைச் சொல்லிக்கொண்டே மெள்ள எழுந்திருக்கும் பெரியோர்களும் ஆகிய மூன்று சாட்சிகளைக் குறிப்பிட்டு 'இனியாவது எழுந்திரு' என்று ஒருத்தியைத் துயில் எழுப்புகிறார்கள்.

திருப்பாவையின் முதலாவது பள்ளியெழுச்சிப் பாட்டு இது. 'ஹரி: ஹரி:' என்று மனனசீலர்களான முனிவர்களும், கைங்கரிய நிஷ்டர்களான யோகிகளும் செய்கிற முழக்கம் உள்ளத்திலே புகுந்து குளிர்விக்க, எழுந்து வா பிள்ளாய்!' என்கிறார்கள்.

# 7. தாலாட்டு அல்ல, பள்ளியெழுச்சி!

கிருஷ்ண பக்தியின் மயக்கத்தினுல் ஒருத்தி மெய்ம்மறந்து கிடக்கிருள். பொழுது விடிந்தது என்று தெரியவில்லை. இவளும் 'விடிந்ததற்கு அடையாளம் என்ன?' என்று உள்ளே இருந்து ஒரு கேள்வி போடுகிருள். அதற்குக் கூட்டத்தின் பிரதிநிதியாக ஒரு பெண், 'அந்த அடையாளத்தைத்தான் கீச்சாங்குருவி கீச்சுக் கீச்சு என்று பேசிக்கொண் டிருக்கிறதே!' என்று பதில் சொல்லுகிருள். கீச்சாங்குருவி பேடையுடன் சேர்ந்து பேசும் கீச்சுப் பேச்சைக் கேட்டும் கேளாதவள்போல் பதில் சொல்லாமல் கிடக்கிருள் உள்ளே இருப்பவள்.

'விழித்திருந்தும் பதில் சொல்லாமல் இருக்கிருளே!' என்று கோபம் வருகிறது வெளியே இருப்பவர்களுக்கு. இந்தக் கோபத்தைக் காட்ட விரும்பி, 'பேய்ப் பெண்ணே!' என்று கூப்பிடுகிருள் கூட்டத்தில் ஒருத்தி.

*வாச நறுங்குழல்*
*ஆய்ச்சியர் மத்திஞல்*
*ஓசை படுத்த*
*தயிர்அரவம் கேட்டிலையோ?*

என்று கேட்கிருள்.

அந்தக் காலை வேளையின் மோனத்தைக் கடைந்துகொண்டு எழுகிறதாம் தயிர் கடையும் ஓசை. 'மலையிட்டுக் கடலைக் கலக்கினுற் போல'க் காதில் விழுகிறதே, உனக்குக் கேட்கவில்லையா என்று கேட்கிருர்கள். 'செல்வச் செருக்கே இந்தச் செவிட்டுத்தனத்திற்குக் காரணமா யிருக்கலாமே?' என்று நினைக்கிருர்கள்.

'பேய்ப் பெண்ணே!' என்று அழைத்தவர்கள் இப்போது 'நாயகப் பெண்பிள்ளாய்!' என்று கூப்பிடுகிருர்கள்.

*நாயகப் பெண்பிள்ளாய்*
*நாரா யணன்மூர்த்தி*
*கேசவனைப் பாடவும்நீ*
*கேட்டே கிடத்தியோ?*

என்கிருள் கூட்டத்தின் பிரதிநிதியாகப் பேசும் ஒருத்தி.

எப்படியாவது இவளை எழுப்பிக்கொண்டுதானே போக வேண்டும்? இவளுடைய பக்தி பரவசத்தை அறியாதவர்களா இவர்கள்? இவள் தங்கள் கூட்டத்தில் இல்லாததால், பொழுது

விடிந்தும் 'இன்னும் இருண்டு கிடக்கிறதே!' என்றுதான் சொல்லத் தோன்றுகிறதாம் இவர்களுக்கு. 'எங்கள் இருள்தீர நீ வந்து கதவைத் திற' என்று கடைசியாகக் கொஞ்சுகிறார்கள்.

'தேசம் உடையாய்' என்று கடைசியாக அழைக்கிறார்கள். 'தேஜஸ் அல்லது ஒளி உள்ளவளே!' என்பது பொருள். இவள் வந்து சேர்ந்தால் இருட்டுக்கிடையே ஒரு மங்கள தீபம் நடையாடி வருவதுபோலத் தோன்றுமாம். 'அப்படி வந்து சேரவேணும் அம்மா! எங்களுக்கிடையே' என்று கொஞ்சுகிறார்கள், கெஞ்சுகிறார்கள்.

'தேசம் உடையாய்!
திற'ஏலோர் எம்பாவாய்

என்று முடிகிறது இப்பள்ளியெழுச்சிப் பாட்டு.

* * *

இந்தப் பாட்டிலும் மூவகைக் காலை ஒலிகள் பிரஸ்தாபிக்கப்படுகின்றன. புள்ளின் சிலம்பல், பெருமாள் கோயிற் சங்கின் பேரரவம், 'ஹரி: ஹரி:' என்று பெரியோர் துயில் எழும்போது உச்சரிக்கும் ஓசை—ஆகிய மூன்று ஒலிகளை முந்திய பாட்டில் கேட்டோம். இப்பாட்டிலோ, கீச்சாங்குருவியின் கீச்சொலி, ஆய்ச்சியர் காசுமாலையும் ஆமைத் தாலியும் கலகலக்கத் தயிர் கடையும் ஓசை, எல்லாவற்றுக்கும் மேலாகக் கண்ணனை இவர்கள் பாடிவரும் இசை ஒலி ஆகிய மூவகை ஒலிகளையும் கேட்கிறோம்.

இந்த வீட்டுக்காரியை இவர்கள் மூன்று வகையாக அழைப்பதையும் கேட்கிறோம்.

பேய்ப்பெண்ணே!

என்று முதல் முதல் சினந்து கூப்பிட்டார்கள். 'உனக்குத்தான் என்ன செருக்கு? பெண்ணே!' என்ற குறிப்புடன்,

நாயகப் பெண்பிள்ளாய்!

என்று அடுத்தபடியாகக் கூப்பிட்டார்கள்.

கோபம் தணிகிறது. 'இவள் செருக்கு உடையவள் இல்லை' என்பதும் அமைதியுற்ற உள்ளத்தில் புலனாகிறது. இவளுடைய அருமை பெருமைகள் நினைவிற்கு வருகின்றன. 'உள்ளும் புறமும் ஒளி வீசுமே இவள் வரும்போது!' என்ற அன்புடன் நினைத்துப் பார்க்கிறார்கள்.

தேசம் உடையாய்!

என்று நேசமாய் அழைக்கிறார்கள்.

முதலாவது அழைப்பு சினக் குறிப்பை வெளியிட்டது. இரண்டாவது அழைப்பு இகழ்ச்சிக் குறிப்பைப் புலப்படுத்தியது. மூன்றுவது அழைப்பு உண்மையான புகழ்ச்சிக் குறிப்பு—அன்பு சூட்டும் பட்டம்.

நெடுநாளாகக் கிருஷ்ண பக்தியில் ஆழ்ந்திருக்கும் இவளை மற்றைப் பெண்கள் நன்ருக அறிவார்கள். இவளுடைய மனப்பான்மையையும் ஈடுபாட்டையும் நன்கு அறிவார்கள். எனினும் 'இன்று புதிதாக அறிந்துகொண்டோம்!' என்று உணர்கிருர்கள். உண்மையான நட்பும் காதலும்—உண்மையான அறிவும்கூட—என்றும் புதுமை வாய்ந்தவை!

அறிவாளி அறிய அறிய முற்பட்ட அறிவை எல்லாம் அறியாமையாகத்தானே உணர்ந்துகொள்கிருன்? அப்படியேதான் இந்தத் தோழிமார்களும் இந்தப் பெண்மணியை 'இதுவரை இப்படி அறிந்துகொண்டோமில்லையே!' என்ற உணர்ச்சியுடன், இவளைப் புதுமையாகவே கண்டுபிடித்துவிட்டதுபோல், இன்புற்று இவளுடன் அப்பால் போகிருர்கள்.

## மூவகை ஒலி, மூவகை அழைப்பு

'கீசுகீசு' என்று எங்கும்
　　ஆனைச்சாத் தங்கலந்து

பேசின பேச்சுஅரவம்
　　கேட்டிலையோ? பேய்ப்பெண்ணே!

காசும் பிறப்பும்
　　கலகலப்பக் கைபேர்த்து,

வாச நறுங்குழல்
　　ஆய்ச்சியர், மத்திஞல்

ஓசை படுத்த
　　தயிர் அரவம் கேட்டிலையோ?

நாயகப் பெண்பிள்ளாய்!
　　நாரா யணன்மூர்த்தி,

கேசவனைப் பாடவும்நீ
　　கேட்டே கிடத்தியோ?

தேசம் உடையாய்!
　　திறவேலோர் எம்பாவாய். (7)

### அரும்பதவுரை

கீசுகீசு: கீச்சுக் கீச்சு. ஆனைச் சாத்தம்: கீச்சாங் குருவிகள். கலந்து பேசின பேச்சரவம்: பேடையுடன் சேர்ந்து கத்துகிற குரல் ஒலி. காசும் பிறப்பும்: காசுமாலை என்ற அச்சுத் தாலியும், ஆமைத் தாலியும். கலகலப்ப: கலகலவென்று ஒலி செய்யும்படி. கை பேர்த்து: கைகளை முன்பின்னாக மாறி மாறி அசைத்து. வாசநறுங் குழல்: நறுமணம் கமழும் கூந்தல். நாயகப் பெண்பிள்ளாய்: பெண் களுக்கு நாயகமாக இருப்பவளே. தேசம்: (இங்கே) தேஜஸ் அல்லது மிக்க ஒளி. திற: கதவைத் திற.

### விளக்கம்

பெண்களின் நாயகமணி என்று பேர் பெற்றிருக்கும் ஒருத் தியை எழுப்புகிறார்கள். பெரொளி வாய்ந்த நாயகமணி இவள். நீண்ட நாளாகக் கண்ணனிடம் பக்தி கொண்டிருப்பவள். எனினும் மறந்து கிடப்பதுபோல் மெய்ம்மறந்து கிடக்கிறாள். சிறிது ஆத்திர மாக மற்றைப் பெண்கள் இவளைப் 'பேய்ப் பெண்ணே!' என்று அழைக்கிறார்கள். இந்த அழைப்பில் அன்பும் தொனிக்கத்தான் செய்கிறது.

இந்தப் பாட்டிலும் காலையின் சிறப்பொலிகளாக மூவகை ஒலிகள் குறிக்கப்படுகின்றன. முதலாவது கீச்சாங் குருவிகளின் 'கீச்சுக் கீச்சு' ஒலி; இரண்டாவது ஆய்ச்சியர் தயிர் கடையும் ஓசை. 'இந்த இரண்டு ஒலிகளையும் கேட்டு விழித்துக் கொள்ளாவிட் டாலும், எங்கள் பாட்டொலியைக் கேட்டாவது எழுந்து வரவேண் டுமே; எங்கள் பக்திப் பாட்டைக் கேட்டும் உறங்குகிறாயோ?' என்கிறார்கள். உண்மையில் இப்பெண், பக்தியில் ஈடுபட்டு மெய்ம் மறந்து கிடப்பவள்தான்.

# 8. கிழக்கு வெளுத்தது, உன் உள்ளம் போல!

அருணோதய காலத்தில் கிழக்குத் திசை வெளுத்து ஜோதிமய மாகக் காண்பதுபோல் உள்ளத்திலே தூய ஒளி பெற்றுக் கண்ண னுடைய அபிமானத்திற்கு விசேஷ உரிமை வாய்ந்தவளாக இருக் கும் ஒரு பெண்ணின் வீட்டு வாசலில் வந்து நிற்கிறது பெண்களின் கூட்டம். இவள் ஏன் இன்னும் எழுந்திருக்கவில்லை? இவளுக்குப் பொழுது விடிந்தது தெரியவில்லையா?

'பொழுது விடிந்ததம்மா! எங்களுக்கு மட்டுமா? உனக்குந் தான்!' என்கிறார்கள்.

கீழ்வானம் வெள்ளென்று

என்று தொடங்குகிறாள் ஒருத்தி. 'ஆகாயத்திலே கிழக்குப் பக்கம் வெள்ளென்று வெளுத்திருக்கிறதே!' என்று ஒருத்தி பேசியதும், உள்ளே இருப்பவள் ஒன்றும் பதில் பேசாமல் சும்மா இருக்கிறாள்.

'அதற்குள்ளே இராக்காலம் கழிந்துவிட்டதா என்ன? கீழ் வானம் வெளுத்துவிட்டதா? ஏன் அப்படி?'என்று கருதியவள்போல் சும்மா இருக்கிறாள். 'இது உங்களுடைய விபரீத ஞானம்! "திங்கள் திருமுகத்துச் சேயிழையார்" ஆகிய நீங்கள் நீண்ட பொழுதாகக் கீழ்த் திசையை நோக்கிக்கொண் டிருந்தீர்கள். அதனால் உங்களுடைய முக சந்திரிகை கிழக்கே போய்த் தட்டிப் பிரதிபிம்பித்து ஒளி தோன்றவும் கூடும். ஆகவே கிழக்கு வெளுத்ததாக நீங்கள் பிரமிக்கவும் கூடும்! வேறு அடையாளம் உண்டா?' என்று உள்ளே இருப்பவள் தன் மோகன வாக்கினால் கேட்பதுபோலத் தோன்றுகிறதாம் வெளியே இருப்பவர்களுக்கு.

எனவே, வேறொரு அடையாளம் சொல்லுகிறாள் ஒருத்தி. எருமைகள்பனிப்புல் மேய்வதற்காகக் கிழக்கு வெளுக்கையில் கறப்பதற்கு முன்னே விடப்படும் பழக்கம் ஒன்று உண்டு. பால் மிகுதியாகக் கறக்கும் என்று இப்படிப் பனிப்புல் மேய விடுகிறார்களாம் ஆயர்கள். கறந்த பின்பு எருமைகளைப் பகலெல்லாம் மேய வெளியே விடுவதால், முதலில் பனிப்புல் மேய விடுவதைச் 'சிறு வீடு' என்று சொல்லுகிறார்கள். இதை அடையாளமாகக் குறிப்பிடுகிறாள்.

எருமை சிறுவீடு மேய்வான் பரந்தனகாண்!

என்று அடையாளம் சொல்லுவதும் உள்ளே இருப்பவள் காதில் விழத்தான் செய்கிறது. மந்தைக் காட்டில் மேய்வதற்கு முன்னே அவரவர் சொந்தமாக அமைத்த நல்ல பசும்புல் நிறைந்த சிறு தோட்டங்களில் எருமைகளை மேய்கைக்கு விடுவதைக் குறிப்பிட்டதன் நோக்கம், இவள் வீட்டைச் சார்ந்த சிறு தோட்டத்தில் எருமைகள் மேய்வதைப் பார்த்தாவது இவள் தெரிந்துகொள்ளட்டும் என்பதுதான்.

ஆனால் இவள் எழுந்து பார்த்தால்தானே? இவளோ கற்பனை உலகத்தில் அல்லவா சஞ்சரிக்கிறாள்? 'தோழிமார்களே! உங்கள்முக ஒளிக்கு முன் சிதறிப்போகிற இருட்டின் கூறுகள் அல்லவா உங்களுக்கு எருமைகளாகத் தோன்றுகின்றன? இதுவும் உங்கள் விபரீத ஞானம்தான்!' என்று கற்பனைச் செல்வி ஒரு கவி பாடக்கூடுமே!

இந்த நிலையில் இப்பெண்கள் 'தோழி! பொழுது விடியவில்லை என்பதற்கு அடையாளம் ஏதாவது இருந்தால் நீதான் சொல்லு, பார்க்கலாமே!' என்று கூறுவதாக வைத்துக் கொள்ளலாம். அதற்குக் கற்பனை அரசி என்ன பதில் சொல்லக்கூடும் என்றும்

பார்க்கலாம். 'பெண்கள் பெருங் கூட்டமாய்த் துயிலுணர்ந்து வந்துவிட்டதாகத் தெரியவில்லையே; என்னைப் போல் வேறு சிலர் துயில் உணர்ந்து எழுந்து வராமலிருப்பதுகூட விடியாமலிருப்பதற்கு ஒரு சான்றுதான்!' என்று உள்ளே இருப்பவள் வாதஞ் செய்வதாகக் கருதுவோம்.

இதற்கு வெளியே இருப்பவர்கள் பதில் சொல்லுவதுபோல் அமைந்திருக்கிறது இச் செய்யுட் பகுதி:

மேய்வான் பரந்தனகாண்
மிக்குள்ள பிள்ளைகளும்
போவான்போ கின்றாரைப்
போகாமல் காத்து,உன்னைக்
கூவுவான் வந்து நின்றோம்.

'பெண்கள் பெரும்பாலும் நோன்பிற்கு நீராடப் போகும் பொருட்டுப் புறப்பட்டுவிட்டார்கள். அவர்களை நோக்கி நாங்கள் 'உன்னை விட்டுவிட்டுப் போவது உரியதன்று' என்று சொல்லிப் போக வொட்டாமல் தடுத்து நிறுத்தினோம். பிறகு உன்னை அழைப்பதற்காக வந்து தலைவாசலில் காத்து நிற்கிறோம்' என்று சொல்லுகிறார்கள். ஏன் அப்படிச் செய்கிறார்கள் என்பதற்கும் காரணம் சொல்லுகிறார்கள்.

கோது கலம்உடைய பாவாய்!

என்ற அழைப்பிலேயே காரணத்தைக் கண்டு கொள்ளுகிறோம். கண்ணனால் கொண்டாடப் பெற்றவள் இவள். எனவே, 'கோதுகலமுடைய பாவாய்! எழுந்திராய்' என்று பள்ளியெழுச்சி பாடுகிறார்கள்.

'அப்பால், பாடிப் பறைகொண்டு......தேவாதி தேவனைச் சென்று நாம் சேவித்தால்' அந்தப் பெருமான் தங்கள் விருப்பத்தைப் பூர்த்தி செய்வது திண்ணம். 'கோதுகலமுடைய' பாவை தங்கள் கூட்டத்தி லிருக்கும்போது கண்ணன் அருள் புரிவதில் ஐயமும் உண்டோ என்பது குறிப்பு.

'ஆதலால், பெண்ணே! ''ஆ ஆ'' என்று நீ அலறிக்கொண்டு விரைந்து புறப்பட வேண்டுமல்லவா?' என்று கூறி முடிக்கிறார்கள். 'நாங்கள் சொல்லுவதை நீ குருட்டுத்தனமாக ஏற்றுக்கொள்ள வேண்டும் என்ற கட்டாயம் ஒன்றும் இல்லை' என்பதையும் தெளிவு படுத்துகிறார்கள்.

'ஆ ஆ' என்று ஆராய்ந்து
அருள்ஏலோர் எம்பாவாய்

என்ற முடிவுரை கூர்ந்து சிந்திக்கத் தக்கது. இவர்கள் சொல்லுவதை

இவள் ஆராய்ந்து பார்த்து ஒப்புக்கொள்ள வேண்டும் என்றுதான் சொல்லுகிறார்கள். எனினும், கண்ணனால் கொண்டாடப்பெறும் கற்பனைச் செல்வி ஆராய்ச்சியின் பெயராலும் பொழுது போக்கி விடாமல் விரைந்து புறப்பட வேண்டும் என்பதையும் வற்புறுத்து கிறார்கள்.

## அருள் பெற்றவளே! எழுந்து எங்களுக்கு அருள்வாய்

கீழ்வானம் 'வெள்'என்று
எருமை சிறுவீடு
மேய்வான் பரந்தனகாண்;
மிக்குள்ள பிள்ளைகளும்
போவான்போ கின்றாரைப்
போகாமல் காத்து,உன்னை
கூவுவான் வந்து நின்றோம்;
கோது கலம்உடைய
பாவாய்! எழுந்திராய்;
பாடிப் பறைகொண்டு,
மாவாய் பிளந்தானை,
மல்லரை மாட்டிய
தேவாதி தேவனைச்
சென்றுநாம் சேவித்தால்,
'ஆவா'என்று ஆராய்ந்து-
அருளேலோர் எம்பாவாய். (8)

### அரும்பதவுரை

'வெள்' என்று: வெளுத்திருக்க. சிறு வீடு: சிறிது நேரம் மேய விடும்போது. மேய்வான்: மேய்வதற் காக. பரந்தனகாண்: பரவிச் சென்றன. மிக்குள்ள பிள்ளைகளும்: மிகுதியாக உள்ள பெண்பிள்ளைகளையும். போவான் போகின்றார்: நீராடப் போவ தற்குப் புறப்பட்டவர்களை. காத்து: தடுத்து. கூவுவான்: கூப் பிடும் பொருட்டு. கோதுகலம் உடைய: கொண்டாடப் பெறும்; (இங்கே) கண்ணனது அபிமானத்தை உடைய. பாவாய்: பதுமை போன்ற அழகிய பெண்ணே. பாடிப் பறை கொண்டு: கண்ண னைப் பாடி நோன்பிற்காக அவனிடம் பறையை வேண்டிக் கொண்டு. மாவாய் பிளந்தானை: குதிரை வடிவமான அசுரனை

வாயைப் பிளந்து கொன்றவனை. மல்லரை மாட்டிய: கம்ச னுடைய மல்லர்களையும், துரியோதனன் நிலவறையில் வைத்திருந்த மல்லர்களையும் மாளச் செய்த. ஆவா என்று ஆராய்ந்து: 'ஆ ஆ!' என்று விரைந்து நாங்கள் கூறுவதை ஆராய்ந்து.

விளக்கம்

கண்ணனுடைய அருளுக்கு மிகவும் தகுதி வாய்ந்தவள் என்று மதிக்கப்பெற்றவளை எழுப்பும் பாட்டு இது. இவளை முன்னிட்டுக் கொண்டு சென்றால் கண்ணனுடைய அருள் எளிதாக எல்லாருக்கும் கிடைக்கும் என்ற நோக்கத்துடன் திரண்டு வந்து அழைக்கிறார்கள் எனக் கருதலாம்.

'கோதுகலம்' என்பது 'கௌதூஹலம்' என்ற வடசொல்லின் விகாரம். 'ஆசை' என்று பொருள்.

# 9. வசீகரமான சூழலில் வசீகரமான நித்திரை

சாளரத்தின் வழியாகப் பார்க்கும்போது, உள்ளே விளக்குகள் எரிவது தெரிகிறது. சுத்தமான இரத்தினங்கள் அழுத்திச் செய்த வீடு. இதை ஒரு மாளிகை என்றே சொல்லலாம். இந்த மணி மாடத்தில் படுக்கை அறையில் நாற்புறமும் படுக்கையைச் சுற்றி விளக்குகள் தகதக என்று எரிந்துகொண்டிருப்பதை வெளியே இருப்பவர்கள் பார்த்து விடுகிறார்கள். அகில் முதலியவற்றின் புகை கமகமவென்று வாசனை வீசுவதையும் உணர்ந்து கொள்கிறார்கள். ஜம்மென்று மென்மையான படுக்கைமீது படுத்துச் சுகமாகக் கண் வளரும் பெண்ணையும் பார்த்து விடுகிறார்கள்.

இந்தப் பெண்ணுடன் எல்லாரும் உறவு கொண்டாடி உரை யாடுவது வழக்கம். 'மாமன் மகளே!' என்று கூப்பிட்டுப் பேசு வார்கள். இப்போது,

*மாமான் மகளே!*

என்று நீட்டி முழக்கி அழைக்கிறார்கள். இவளுடைய செல்வச் செழிப்பைச் சுட்டிக் காட்டி,

*மாமான் மகளே!*
*மணிக்கதவம் தாள்திறவாய்*

என்று வேண்டிக் கொள்கிறார்கள்.

இவளுடைய போக வாழ்க்கையையும் சுட்டிக் காட்டித்தான் இவளை அழைக்கிறார்கள், கதவு திறக்கும்படி வேண்டிக் கொள்

கிருர்கள். 'மணி மாடத்தில் வசிப்பவளே! உன் மணிக் கதவைத் திறந்துகொண்டு வெளியே வா' என்கிருர்கள்.

தூமணி மாடத்துச்
சுற்றும் விளக்கெரிய,
தூபம் கமழ,
துயில்அணைமேல் கண்வளரும்
மாமான் மகளே!
மணிக்கதவம் தாள்திறவாய்

என்று அழைப்பது எவ்வளவு வசீகரமாய் இருக்கிறது!

இந்தப் பெண்ணே கண்ணன் வருகிறபோது வரட்டும் என்று ஆறி இருக்கிருளாம். போகமயமான சூழ்நிலையில் படுத்திருப்பவளுக்கு, பனியில் நனைந்து வெளியே நிற்பவர்கள் குரல் காட்டி அழைப்பது எப்படி வசீகரமாகத் தோன்றக்கூடும்? மறுமொழி ஒன்றும் கூருதவளாய்க் கிடக்கிருள்.

இந்த நிலையில் இவள் தாய், 'இத்தனை பெண்பிள்ளைகள் தலைவாசலில் தலையில் பனி விழ வருந்தி நின்றுகொண்டு உன்னைக் கூவி அழைக்கிருர்களே; நீ ஒரு பேச்சும் பேசாமல் உறங்கிக் கொண்டிருப்பது நியாயமா?' என்கிருள். இப்படித் தாய் பேசுவது வெளியே நிற்பவர்கள் காதில் விழுகிறது. சாளரத்தின் வழியாக உள்ளே எரிந்துகொண்டிருக்கும் விளக்குகளின் ஒளியில் இந்தத் தாயின் முகத்தையும் பார்த்து விடுகிருர்கள்.

தங்களுக்காக அவள் நெஞ்சிலே கொண்ட இரக்கம் முகத்திலே பிரதிபலிப்பதையும் கண்டு கொள்கிருர்கள்.

மாமீர்! அவளை
எழுப்பீரோ!

என்று கேட்கிருர்கள்.

'எங்கள் கூட்டத்திலே அவள் ஒருத்தி இல்லாததால் நாங்கள் படுகிற பாட்டை நீர் உணர்ந்து கொண்டிரே; மாமீர்! உம்முடைய மகளை எப்படியாவது எழுப்பலாகாதா?' என்கிருர்கள். மாமி எழுப்பியும் மகள் எழுந்தபாடில்லை; பதிலும் சொல்லவில்லை. கொஞ்சம் ஆத்திரத்துடன் பெண்கள் 'உம் மகள்தான் ஊமையோ? அன்றிச் செவிடோ?' என்று கேட்கிருர்கள். 'அவ்வளவு சோர்வா அவளுக்கு?' என்றும் கேட்கிருர்கள்.

ஊமையோ? அன்றிச்
செவிடோ? அனந்தலோ?

என்றெல்லாம் கேட்ட பின்பும் ஆத்திரம் அடங்கவில்லை.

'ஒரே வசீகரமான சூழ்நிலையில் ஏதோ ஒரு வகை வசிய நித்திரைக்கு உட்பட்டுக் கிடக்கிறாளோ அவள்?' என்றும் தோன்று கிறது, தலையில் பனி விழ வாசலில் நின்றுகொண் டிருப்பவர் களுக்கு.

ஏமப் பெருந்துயில்
மந்திரப் பட்டாளோ?

என்று மமியைக் கேட்கிறார்கள்.

'எழுந்திருக்க முடியாதபடி காவலைச் செய்கின்ற பெருந் துயிலில் சிக்கிக் கொண்டாளோ? எப்படிச் சிக்கிக் கொண்டாள்?' என்று அதிசயிக்கிறார்கள். 'மந்திரத்தில்கட்டுப்பட்டாளா?' என்று சந்தேகப் படுகிறார்கள். இப்படித் துயில் மந்திரம் போட்டவர் யார்? பெருந் துயில் மந்திரமாக இருக்கிறதே! இவர்கள் உரக்கப் பேசுவதும், தாய் அருகிலிருந்து கூப்பிடுவதும் காதில் விழாதபடி காவலைச் செய்கின்ற மந்திரம் சாதாரண மந்திரமாக இருக்க முடியுமா? என்ன வசீகர மந்திரமோ?

இப்படி யெல்லாம் இவர்கள் கூறுவதைக் கேட்ட தாய், 'நீங்கள் அப்படி ஒன்றும் கவலைப்பட வேண்டாம்; இவள் உகக்கும் பகவந் நாமங்களைப் பாடத் தொடங்கினீர்களானால் இவள்தானே உணர்ந்து எழுந்து வருவாள்!' என்று சொல்லுகிறாள். உடனே பெண்களும் அவளைத் தடை செய்திருக்கும் மந்திரத்திற்கு எதிர் மந்திரம் போடுவது போல்,

மாமாயன், மாதவன்:
வைகுந்தன் என்றுஎன்று

நாமம் பலவும் சொல்லத் தொடங்குகிறார்கள்; தங்கள் இசைக் குர லில் பகவானின் நாமங்களை இசைத்துப் பாடத் தொடங்குகிறார்கள்.

'இப்படிச் செய்தும் இன்னும் எழுந்திருக்கவில்லையே! என் செய் வோம்?' என்று எய்த்துப் பேசும்போதே, எழுந்து வருகிறாள் தோழி.

## துயில் மந்திரப் பட்டாளோ!

தூமணி மாடத்துச்
சுற்றும் விளக்கெரிய,
தூபம் கமழ,
துயில்அணைமேல் கண்வளரும்
மாமான் மகளே!
மணிக்கதவம் தாள்திறவாய்.

மாமீர்! அவளை
    எழுப்பீரோ; உம்மகள் தான்
ஊமையோ? அன்றிச்
    செவிடோ? அனந்தலோ?
ஏமப் பெருந்துயில்
    மந்திரப் பட்டாளோ?
'மாமாயன், மாதவன்,
    வைகுந்தன்' என்றுஎன்று
நாமம் பலவும்
    நவின்றேலோர் எம்பாவாய். (9)

அரும்பதவுரை

தூமணி மாடம்: குற்றம் இல்லாத இரத்தினங்கள் இழைத்துச் செய்த மாளிகை. தூபம்: அகில் முதலியவற்றின் புகை. துயில் அணை: தூங்குவதற்குரிய படுக்கை. மாமான்: மாமன். மணிக்கதவம்: மணிகளால் ஆகிய கதவு. அனந்தலோ: சோர்வோ. ஏமப் பெருந்துயில்: (எழுந்திராதபடி) காவலைச் செய்கின்ற பெருந் தூக்கம். மந்திரப்பட்டாளோ: மந்திரத்தில் கட்டுப்பட்டாளோ? மாமாயன்: மிகவும் ஆச்சரியமான குணங்களையும் செயல்களையும் உடையவன். மாதவன்: மகாலட்சுமியின் நாயகன். வைகுந்தன்: வைகுண்டவாசி. நவின்று: சொல்லி.

விளக்கம்

கண்ணன் வருகிறபோது வரட்டும் என்று சிறிதும் ஆத்திரம் இல்லாமல் ஆறியிருக்கும் ஒரு பெண்ணை எழுப்பும் பாசுரம் இது. 'மாமான் மகளே!' என்று உறவு கொண்டாடி அழைப்பவர்கள் மறுமொழி ஒன்றும் முதல் முதல் பெற்றுக் கொள்ளாததால், இந்தப் பெண்ணின் தாயாரை அழைத்து எழுப்பச் சொல்லுகிறார்கள். மாமி எழுப்பியும் எழுந்திருக்கவில்லையே என்ற ஆத்திரத்தால் 'ஊமையா? செவிடா?' என்றெல்லாம் கேட்கிறார்கள். 'எழுந்திருக்க முடியாதபடி யாராவது இவளை மந்திரவாதத்துக்கு உட்படுத்தியிருக்கிறார்களா?' என்றும் கேட்கிறார்கள்.

'ஏமப் பெருந்துயில் மந்திரம்' என்று கூறுவது இக்காலத்து ஹிப்னடிஸ - மெஸ்மரிஸ வசிய நித்திரையை நமக்கு நினைப்பூட்டுவதாகும். இத்தகைய ஒரு துயில் மந்திரத்தை அனுமனும் உபயோகப்படுத்தி, சீதையைக் காவல் செய்துகொண்டிருந்த அரக்கிமாரை உறங்கச் செய்ததாகக் கம்பனும் பாடுகிறான். துர்மந்திரத்திற்கு எதிர் மந்திரமாகப் பகவானுடைய திருநாமங்களை இப் பாசுரம் குறிப்பிடுகிறது என்று கருதலாம்.

# 10. கும்பகர்ணனை வென்றவள்!

இவள் சாதாரண உறக்கத்திற்கு உட்பட்டிருக்கவில்லை; கிருஷ்ண பக்தியில் மூழ்கி அந்தப் பரவசம் என்ற உறக்கத்தைத் தான் சொர்க்க போகமாய் அனுபவித்துக் கொண்டிருக்கிருள். இதைப் பெண்கள் அறிவார்கள். 'இப்படி இவள் தன்னலம் பாராட்டு வது தகாது' என்ற குறிப்புடன், இவளை எழுப்பித் தங்களுடன் கலந்து கிருஷ்ணநுபவம் செய்யுமாறு வேண்டிக் கொள்ளத்தான் வந்திருக்கிருர்கள்.

'நீ தவம் செய்தவள்; அந்தத் தவத்தின் பயனுக தவத்தின் இப்போது பக்திக் காதல் என்ற சொர்க்கத்தை அனுபவித்துக் கொண்டிருக் கிருய். இது எங்களுக்குத் தெரியும். ஆனுல் நாங்கள் தலைவியாக மதித்திருக்கும் நீயே இப்படித் தன்னலம் கொண்டிருக்கலாமா? வெளியே வந்து எங்களுடன் கலந்துகொண்டு எங்களுக்குத் தலைமை வகித்து, பக்திச் செல்வத்தை எங்களுடன் பகிர்ந்துகொள்ள வேண்டாமா?' என்ற குறிப்புடன்,

*நோற்றுச் சுவர்க்கம்*
*புகுகின்ற அம்மனுய்!*

என்று முதல் முதல் கூப்பிடுகிருர்கள். பதில் இல்லை.

வாசலைத்தான் திறக்கவில்லை; வாயைத் திறக்கவும் இல்லையே! இத்தகைய பரவசத்தால், 'எங்கள் கதிதான் என்ன?' என்பதை ஆலோசித்துப் பார்ப்பதற்கும் முடியாதே என்கிருர்கள்.

*மாற்றமும் தாராரோ*
*வாசல் திறவாதார்?*

என்று கேட்கிருர்கள்.

'இப்போது கதவைத் திறக்க அவகாசமில்லை' என்று ஒரு பேச்சு வாயைத் திறந்துகொண்டு வந்தாலும் போதுமே என்கிருர்கள். அப்படியானுல் தங்களைப் பற்றிய நினைவு அவளுக்கு இருக்கத்தான் செய்கிறது என்ருவது தெரிந்து கொள்ளலாமே!

'இது பரவச நித்திரை அல்ல, சாதாரண நித்திரைதான்; அப்படி யானுல் இவ்வளவு ஆழ்ந்த தூக்கம் இவளுக்கு எப்படித்தான் வந்தது?' என்றும் எண்ணமிடுகிருர்கள். 'இது என்ன, கும்பகர்ண நித்திரையாக இருக்கிறதே!' என்று அதிசயப்படுகிருர்கள்.

'வாலியும் போனுன், வாலும் போச்சு!' என்று அனுமன் கூறினுன். 'கும்பகர்ணன் போனுன், அந்தக் கும்பகர்ண நித்திரை யும் போச்சு!' என்று இவர்கள் எண்ணியிருந்தார்கள். பகவான் கும்பகர்ண வதம் செய்த அந்த இராமாயணக் கதையைக் கண்முன்

நிகழ்ந்ததுபோல இவர்கள் தெரிந்து கொண்டிருக்கிறார்களே. அதைச் சொல்லிப் பார்க்கிறார்கள் இப்பொழுது:

நாற்றத் துழாய்முடி
நாரா யணன், நம்மால்
போற்றப் பறைதரும்
புண்ணியனால் பண்டொருநாள்
கூற்றத்தின் வாய்வீழ்ந்த
கும்ப கரணனும்...

கும்பகர்ணன் ராமனுக்குத் தோற்றான் என்பது இராமாயணப் பிரசித்தமான நிகழ்ச்சி. ஆனால் அவன் இராம பாணத்திற்குத்தான் தோற்றான்; உறக்கப் போட்டியில் இராமன் முதலான எத்தனை பேர்களையும் வென்றுவிடக் கூடியவன் தானே! போரில் இராமனுக்குத் தோற்ற கும்பகர்ணன் உறக்கத்தில் இவளுக்குத் தோற்றுப் போனான் என்கிறார்கள். தோற்றவர் பொருளை வென்றவர் கைப்பற்றிக் கொள்வதுண்டு. கும்பகர்ணனையும் இராவணனையும் வென்ற இராமன் இலங்கா ராஜ்யத்தைக் கைப்பற்றிக்கொண்டு விபீஷணனுக்குக் கொடுத்தான் என்பது பிரசித்தம். இவளோ உறக்கப் போட்டியில் தோற்றுப்போன கும்பகர்ணனது உறக்கத்தைக் கைப்பற்றிக் கொண்டு வேறொருவருக்கும் கொடுத்துவிடாமல், தனக்கே ஏக போக உரிமை ஆக்கிக் கொண்டிருக்கிறாளாம்.

இராமனுக்குத் தோற்ற கும்பகர்ணன் மனசோடு ஒன்றையும் இராமனுக்குக் கொடுக்கவில்லை. இவளுக்குத் தோற்றதும், தன் பெருந் துயிலை அப்படியே கொடுத்து விட்டானும், ஏற்கெனவே கும்பகர்ணனை வென்ற துயிலுடன், அந்தப் பெருந் துயிலும் சேர்ந்து கொண்டது! வாய்ச் சொல்லாகக் கொடுத்ததில்லை; மரண சாசனம் பண்ணிக் கொடுத்துவிட்டது போல் சாட்சி சொல்லுகிறார்கள் இப் பெண்கள்:

கூற்றத்தின் வாய்வீழ்ந்த
கும்ப கரணனும்
தோற்றும் உனக்கே
பெருந்துயில்தான் தந்தானோ?

என்று கேட்ட போதிலும், அவன் கொடுத்துவிட்டது போலவே துணிகிறார்கள் இவர்கள்.

'மிகவும் சோம்பலை உடையவள்' என்றும் இவளை மதிப்பிடுகிறார்கள் கடைசியாக. அதே சமயத்தில் தங்களுக்கெல்லாம் ஆபரணமாக விளங்கும் தகுதி உடைய பக்தமணி இவள் என்பதையும் மறந்துவிட முடியவில்லை.

ஆற்ற அனந்தல்
உடையாய்! அருங்கலமே!

என்று முரண்பட்ட இருவகை உணர்ச்சிகளுடன் இவர்கள் இவளை அழைப்பதைத்தான் பாருங்கள்.

'தேற்றமாய் வந்து திற' என்பது முடிவுரை. 'உறக்க மயக்கம் தெளிந்து, சோம்பல் தெளிந்து, கதவைத் திற' என்கிறார்கள். கிருஷ்ணுநுபவத்தில் மூழ்கிப் பரவசத்தில் தங்களை மறந்திருந்தாலும் அந்த நிலையும் தெளிந்து கதவைத் திறக்கச் சொல்லுகிறார்கள்.

## எது சொர்க்கம்?—உறக்கமா, காதலா?




நோற்றுச் சுவர்க்கம்
புகுகின்ற அம்மனாய்!
மாற்றமும் தாராரோ,
வாசல் திறவாதார்?
நாற்றத் துழாய்முடி
நாரா யணன், நம்மால்
போற்றப் பறைதரும்
புண்ணியனால், பண்டொருநாள்
கூற்றத்தின் வாய்வீழ்ந்த
கும்ப கரணனும்
தோற்றும் உனக்கே
பெருந்துயில்தான் தந்தானோ?
ஆற்ற அனந்தல்
உடையாய்! அருங்கலமே!
தேற்றமாய் வந்து
திறவேலோர் எம்பாவாய். (10)

### அரும்பதவுரை

நோற்று: கிருஷ்ண பக்தி என்ற நோன்பு நோற்று. சுவர்க்கம்: (இங்கே) காதல் என்ற அந்தச் சொர்க்கம். அம்மனாய்: தலைவியே; நாயகப் பெண்ணே. மாற்றமும்: ஒரு மறுமொழியும். நாற்றத் துழாய்: நறுமணமுள்ள துளசி. 'நாற்றம்' இந்நாளில் துர்நாற்றத்தைக் குறிப்பிடுகிறது. கூற்றத்தின் வாய்: யமன் வாயில். தோற்றும் உனக்கே: உனக்குத் தோற்றுப்போய். ஆற்ற அனந்தல்

உடையாய்: மிகவும் உறக்க மயக்கமாகிய சோம்பலை உடைய வளே. அருங்கலமே: பெண்களுக்குக் கிடைத்தற்கு அரிய அணி யாக வாய்த்திருப்பவளே. தேற்றம்: தெளிவு.

### விளக்கம்

இந்தப் பெண் கிருஷ்ண பக்தி என்ற சொர்க்கத்தில் ஆழ்ந்து மூழ்கிக் கிடக்க, 'இவள் உறக்கத்தில் மூழ்கிக் கிடக்கிறாளே!' என்று கருதிப் பரிகசித்து மற்றைப் பெண்கள் இவளை எழுப்ப முயல் கிறார்கள். இவளும் எழுந்து வருகிறாள். உறக்கத்திலிருந்து அல்ல, கிருஷ்ண பக்தி என்ற அந்தக் காதலிலிருந்து! தனியாகக் கிருஷ்ணானு பவம் செய்துகொண்டிருந்தவள் கூட்டத்தில் வந்து கலந்து கொண்டு கிருஷ்ணானுபவம் செய்யப் புறப்படுகிறாள். பக்தியிலும் தனியாகச் சுகம் அனுபவிப்பதைக் காட்டிலும் பிறருடன் கலந்து கொண்டு சுகத்தைப் பங்கு கொள்வதே பாகவதப் பெருநெறி என்பது இப்பாட்டின் திரண்ட பொருள்.

இப்பாட்டிலே நகைச்சுவை பொங்கி வழிகிறது. கும்பகர்ணனும் உறக்கப் போட்டியில் இவளிடம் தோற்றுப் போவானாம். இராம னுடைய அம்பிற்குக் கும்பகர்ணன் தோற்றான் என்பது இராமா யணக் கதை. உறக்கப் போட்டியில் தோல்வியுற்றான் என்பது இப் பெண்கள் சொல்லும் புதுமை-இராமாயணம். தோற்றவர் பொருளை வென்றவர் கைப்பற்றிக் கொள்ளும் அந்தப் பழைய சட்டத்திற்கு இணங்க, இவளும் கும்பகர்ண நித்திரையை மேற்கொண்டிருக் கிறாளாம்.

## 11. ஊருக்கு ஒரு உத்தமி

ஆய்ப்பாடியில் கண்ணன் 'நந்தகோபன் குமரன்' என்ற நிலையில் மட்டும் வளரவில்லை; 'ஊருக்கு ஒரு பிள்ளை' என்ற நிலையில் நாளொரு மேனியும் பொழுதொரு வண்ணமுமாய் வளர்ந்து வந்தான் அல்லவா? ஆனால் கண்ணன் உத்தமன் என்று பெயர் எடுக்கவில்லை. இவளோ உத்தமி என்றும் பெயர் பெற்று அந்தப் புருஷோத்தமனுக்கு இசைந்த பக்த மணியாக வளர்ந்து வருகிறாள். 'பக்தி வளர்ச்சியில் பாங்கான பருவம் உடையவள்' என்றும் கொண் டாடப் பெறுகின்றாள். இவளை இப்பெண்கள்,

குற்றமொன்று இல்லாத
கோவலர்தம் பொற்கொடியே!

என்று கொண்டாடிக் கூப்பிடுகிறார்கள்.

இவளோ, 'கடவுளை நம்மால் தேடிப் போக முடியுமா? அவனல்லவா நம்மை நாடி நாம் இருக்கும் இடத்திற்கு இறங்கி வர வேணும்?' என்று இறுமாந்திருக்கும் பத்தமணிபோல், 'அவனை அடைவதற்கு நானோ நோற்பேன்? வேணுமானால் அவனே நோற்று வரட்டும்!' என்று இறுமாந்து படுக்கையில் படுத்த வண்ணம் ஆனந்தக் கனவு கண்டுகொண் டிருக்கிறாளாம்.

'அந்தக் கனவுலகத்தில்தான் இருக்கிறாளா? அல்லது அந்தக் கனவையும் விட்டுப் பேருறக்கத்தில் ஆழ்ந்திருக்கிறாளா?' என்று அறிய முடியாத ஒருவகை நிலையில் இப் பெண் இருக்கும்போது, உறவினர் தோழிமார் ஆகியவர்களில் ஒருவர் தப்பாமல் அனைவரும் திரண்டு இவள் வீட்டை முற்றுகை இட வந்தவர்கள்போல் வாசலில் வந்து சேர்ந்திருக்கிறார்கள்.

கண்ணனுடைய திருநாமங்களைப் பாடிக்கொண்டே நிற்கிறார்கள். உள்ளே இருப்பவளோ உடம்பிலும் அசைவில்லாமல், வாயிலும் அசைவில்லாமல் படுத்த படுக்கையாய் இருக்கிறாள். பெண்கள் பாடுகிறார்கள்:

*கற்றுக் கறவைக்*
*கணங்கள் பலகறந்து,*
*செற்றார் திறல்அழியச்*
*சென்று செருச்செய்யும்,*
*குற்றம்ஒன்று இல்லாத*
*கோவலர்தம் பொற்கொடியே!*

கன்றுகளோடு கூடின பசுக் கூட்டங்களைக் கறக்கத் தெரியும் இக்கோவலர்களுக்கு, சத்துருக்களிடம் சண்டை போடவும் தெரியுமாம். மற்றைப்படி, குற்றம் ஒன்றும் அறியாதவர்கள்! இத்தகைய சாதுக்களுக்கும் பகைவர்கள் உண்டோ என்றால், கண்ணனுடைய மேன்மையைப் பொறாதவர்களை யெல்லாம் இவர்கள் பகைவராகவே கருதுகிறார்கள் என்பது குறிப்பு. வலுச்சண்டைக்குப் போகாமல், வந்த சண்டையை விடாத சாதுக்களும் உண்டு; அத்தகைய சாதுக்களுமல்லர் இக்கோவலர்கள்! கண்ணனுக்குத் தீங்கு இழைப்பவர் மீது படையெடுத்தும் போவார்களாம். இத்தகைய 'கோவலர் தம் பொற்கொடியே!' என்று இவளை அழைக்கிறார்கள் இவர்கள்.

ஜனக குலத்தை ஜானகி விளக்கம் செய்ததுபோல் கோவலர் குடியை இவள் விளக்கம் செய்கிறாளாம். இவளைப் 'பொற்கொடி' என்று குறிப்பிடுவதன் உட்பொருள், கோல் தேடிப் படரும் கொடி போல் இவள் உள்ளமும் கண்ணனைத் தேடிப் படரவேண்டும் என்பது. இவர்கள் குறிப்பு இது. ஆனால் இவள் மனநிலையோ இந்தக் குறிப்பிற்கு இசைவாக இல்லை இப்போது.

'பொற்கொடியே!' என்று இவளை அழைத்தவர்கள் 'புனமயிலே!' என்றும் கூவி அழைக்கிறார்கள். 'நாங்கள் மேகத்தைச் பாடுகிறோம்; மயில் ஆடிக்கொண்டு வரவேண்டாமா?' என்று ஆதுரத்துடன் எதிர்பார்க்கிறார்கள்.

புனமயிலே! போதராய்.

—அதாவது, காட்டில் இஷ்டப்படி திரிகிற மயில் போன்றவளே! எழுந்து வருவாயாக—என்கிறார்கள்.

'புனமயிலே!' என்று கூறுவது மயிலின் தோகைபோன்ற கூந்தல் அழகை உடையவள் இவள் என்பதையும் குறிப்பிடுகிறது. இந்தக் கூந்தல்-அழகியின் சமுதாய அழகையும் ஒளியையும் சுட்டிக் காட்டு கிறது 'பொற்கொடி' என்ற பதம். தினைப்புனத்தை மயில் அழகு செய்வதுபோல் தங்கள் கூட்டத்தை இப்பெண் அழகு செய்ய வேண்டும், அழகு செய்யக்கூடியவள் என்ற கருத்தும் புலப்பட, இவளை அழைக்கிறார்கள் இவர்கள்.

'செல்வப் பெண்டாட்டி!' என்றும் இவளை அழைக்கிறார்கள். பெண்மையைச் செல்வமாகக் கொண்டிருப்பவள் இவள் என்பது பொருள். 'கிருஷ்ண பக்திச் செல்வத்தை எங்களோடு சேர்ந்து அநுபவிக்க நீயும் எங்களுடன் வந்து கலந்துகொள்ள வேண்டும்' என்கிறார்கள்.

'சுற்றத்தாரும் தோழிமாரும், உறவு முறை உள்ள தோழிமாரும் எல்லாரும் வந்து காத்திருக்கிறார்களே, மேக வண்ணனாகிய கண்ணனது திருப்பெயரைப் பாடுகிறார்களே; நீ மட்டும் உடம்பையும் வாயையும் அசைத்துக் கொள்ளாமல் இப்படி உறங்கிக்கொண்டிருக் கலாமா? தகுமா? தருமந்தானா? எந்தப் பயனை எண்ணி இப்படி அசைவற்றுக் கிடக்கிறாய், நிர்விகல்ப சமாதியில் இருப்பவ ரைப்போல?' என்றெல்லாம் பொருள்படப் பேசி முடிக்கிறார்கள்.

'பெண்மையை ஆளும் இந்தச் செல்வி பெண்மைக்கும் செல் வம்தான், எங்களுக்கும் செல்வம்தான், கண்ணனுக்கும் செல்வம் தான்!' என்ற குறிப்புடன் இவர்கள் அழைக்க, கடைசியாக இவளும் களித்துக் கூத்தாடும் மயில்போல் வெகு உற்சாகமாக வந்து இந்தக் கூட்டத்தில் கலந்துகொள்கிறாள் என்று கருதலாம். இந்தப் பொற் கொடியும் முடிவில் இசைந்த கோல் தேடிப் படர்கின்றது பிற கொடிகளுடன்.

## மயிலே! வா; உன் மேகத்தைப் பாடுகிறோம்

*கற்றுக் கறவைக்*
*கணங்கள் பலகறந்து,*
*செற்றார் திறல்அழியச்*
*சென்று செருச்செய்யும்,*

குற்றம்ஒன்று இல்லாத,
கோவலர்தம் பொற்கொடியே!
புற்றுஅரவு அல்குல்
புனமயிலே! போதராய்.
சுற்றத்துத் தோழிமார்
எல்லாரும் வந்து, நின்
முற்றம் புகுந்து,
முகில்வண்ணன் பேர்பாட,
சிற்றாதே பேசாதே
செல்வப்பெண் டாட்டி, நீ
எற்றுக்கு உறங்கும்
பொருளேலோர் எம்பாவாய். (11)

அரும்பதவுரை

கற்றுக் கறவைக் கணங்கள் பல கறந்து: கன்றுகளோடு கூடிய பல கறவைப் பசுக்களின் கூட்டங்களைக் கறந்து. செற்றார் திறல்: பகைவர்களின் திறமை. செருச் செய்யும்: போரைச் செய்கின்ற. கோவலர்: கோபாலர்கள்; ஆயர்கள். புற்று அரவு: புற்றில் உள்ள பாம்பு. புனமயில்: காட்டில் வாழும் மயில். போதராய்: எழுந்து வருவாய். முற்றம்: (இங்கே) முன்வாசல். முகில்வண்ணன்: மேகம்போல் வடிவழகும் வண்மையும் உள்ள பெருமான். சிற்றாதே: உடம்பு அசையாமலே. செல்வப் பெண்டாட்டி: பெண்மை என்ற செல்வத்தை ஆண்டு கொண்டிருக்கும் பெண்ணே; 'பெண்டாட்டி' என்பதற்கு இக்காலத்தில் பொருள் வேறு. எற்றுக்கு: எதற்காக; எந்தப் பயனைக் கருதி. உறங்கும் பொருள்: உறங்குகின்ற இந்தக் காரியம்.

விளக்கம்

எழுப்ப வந்திருப்பவர்களில் உறவினர்களும் தோழிமார்களுமாகிய பலர் காணப்படுகிறார்கள். அவர்கள் எழுப்பவும் இவள் உறங்குவது சரியல்ல என்கிறார்கள். சாளரத்தின் வழியாகப் பார்க்கிறார்கள். பேசாதது மட்டுமா?—உடம்பையும் அசைத்துக் கொடுக்காமலே கிடக்கிறாள். இப்படி உறங்கும் பொருள்தான் என்ன? பொருளும் பயனும் உறக்கம்தானா? கிருஷ்ண பக்தி என்ற அந்த உறக்கம்தானா? எந்த உறக்கமாயினும் அது பொருளல்ல என்கிறார்கள். தங்களுடன் வந்து கலந்துகொண்டு கண்ணனை அடைவதே நலம் என்பதை வற்புறுத்துகிறார்கள்.

பக்தி உலகிலும் சொந்த நலம் பிறர் நலத்துடன் கலந்து இருப்பதுதான். இங்கும் சமுதாய மனப்பான்மை இன்றியமையாதது. இது இப் பாசுரத்தின் உட்பொருள். உத்தம பக்தர்கள் இந்த உண்மையை நன்கு உணர்ந்து ஒழுகுவர் என்ற குறிப்பையும் இப் பாசுரத்தில் காண்கிறேம். பிறரையும் திருத்தி உடன் சேர்த்துக் கொள்ள முடியாமல் ஒருவன் தான் மட்டும் பக்திப் பேரின்ப நெறியில் செல்ல முடியும் என்பது வீண் கனவு.

## 12. நற்செல்வன் தங்காய், ஈதென்ன பேருறக்கம்?

இவள் தமையன் கண்ணனை விட்டுப் பிரிவதில்லை. எருமைகளைச் செல்வமாக உடைய இவன் கிருஷ்ண பக்திச் செல்வமும் பெற்று இருப்பதால் 'நற்செல்வன்' என்று கொண்டாடப் பெறுகின்றான். நாட்டிலும் காட்டிலும் இராமனைப் பின்தொடர்ந்து திரிந்த லட்சுமணன் போல், கண்ணபிரானை அன்றி வேறொருவரையும் அறியாதவனாய் அவனையே பின்தொடர்ந்து அவனிடத்திலேயே அன்பு பூண்டு திரிகின்றான் இவன்.

அப்பேர்ப்பட்ட நற்செல்வன் தங்கையைக் கூவி அழைக்கிறார்கள் இவர்கள் :

*கனைத்துஇளங் கற்றெருமை*
*கன்றுக்கு இரங்கி,*
*நினைத்து முலைவழியே*
*நின்றுபால் சோர*
*நனைத்து,இல்லம் சேறுஆக்கும்*
*நற்செல்வன் தங்காய்!*

பாலைக் கறவாததால் இளங்கன்றையுடைய எருமைகள் கனைத்துக் கதறிக்கொண்டு, கன்றை நினைத்துப் பால் சோர நிற்கின்றனவாம். அதனால் இல்லம் நனைந்து சேறுவதாகக் கற்பனை செய்து இந்த வீட்டின் பால் வளத்தைச் சிறப்பித்துப் பேசுகிறார்கள் பெண்கள். 'இத்தகைய உன் வீட்டு வாசலில் நாங்கள் வந்து நிற்கும்போது, பனியும் வெள்ளம்போல் எங்கள் தலைமீது விழுகிறதே!' என்கிறார்கள்.

*பனித்தலை விழ, நின்*
*வாசல்கடை பற்றி*

என்று குறிப்பிடுகிறார்கள்.

எனினும் இந்தப் பனியையும் லட்சியம் செய்யாமல் 'மனத்துக்கு இனியானை' (இராமபிரானை)ப் பாடிக் கொண்டிருக்கிறார்களாம். விரைவில் இவளை அழைத்துக்கொண்டு போகவேண்டும் என்பது நோக்கம். இவளோ வாய் திறக்கவில்லை.

பெண்களோ 'நாங்கள் இராமனைப் பாடியும் நீ வாய் திறக்க வில்லையே!' என்கிறார்கள். இராமனை மனத்துக்கு இனியான் என்று கூறுகிறவர்கள் இந்தச் சந்தர்ப்பத்தில் கிருஷ்ண பக்தி தங்களைப் படுத்தும் பாட்டை உள்ளத்தில் கொண்டு பேசுவது போலத் தோன்றுகிறது.

மனத்துக்கு இனியானுக்கும் சினம் வருவதுண்டா? இராவணன் சாது ஜனங்களை ஹிம்சித்தபோது இராமனுக்கும் தர்மாவேசமாகிய சினம் பொங்கி விட்டதாம். சீதையைக் கவர்ந்தான் என்பதை வியாஜமாகக் கொண்டு இராவண வதம் செய்து உலகத்திற்கு நலம் விளைத்தான் இராமபிரான். இவர்கள் பாடுகிறார்கள்:

சினத்தினால் தென்இலங்கைக்
　　கோமானைச் செற்ற
மனத்துக்கு இனியானைப்
　　பாடவும்நீ வாய்திறவாய்!

'எங்களுடைய விருப்பத்திற்கு இணங்க நீ எழுந்திராவிட்டாலும், மனத்துக்கு இனியானுடைய பாடல்களைக் கேட்க விருப்பம் கொண்டாவது துயில் உணர்ந்து எழுந்து வரலாமே' என்று பொருள்பட,

இனித்தான் எழுந்திராய்

என்கிறார்கள்.

இப்படிச் சொல்லியும் இந்த 'நற்செல்வன்' தங்கை எழுந்து வரவில்லை என்று அறிந்ததும் ஆத்திரமாக,

ஈதுஎன்ன பேருறக்கம்?

என்று கேட்கிறார்கள்.

எல்லா வீடுகளிலும் உள்ளவர்கள் துயில் உணர்ந்த பின்பும் இவள் இப்படிப் பெருந் தூக்கம் மேற்கொண்டிருப்பது கண்டு அதிசயப்படுகிறார்கள் என்பதையும் 'ஈதென்ன பேருறக்கம்?' என்ற வாக்கில் கண்டு கொள்கிறோம்.

'மேலே, தலைக்கு மேலே, பனி வெள்ளமிடுகிறது; கீழே பால் வெள்ளமிடுகிறது; உள்ளத்திலோ கிருஷ்ண பக்திக் காதல் வெள்ள மிடுகிறது!' என்று மூவகைப் பெரு வெள்ளத்திற்கும் இடையே அகப் பட்டுக் கொண்டவர்களைப் போல் பெண்கள் பேசுகிறார்கள், இந்த வீட்டுக்காரியை நோக்கி. ஒரு சிறிய ஊரில் கிழக்கே யிருந்து ஆற்று

வெள்ளம் பெருகி வந்ததாம்; மேற்கே யிருந்து கால்வாய்க் கரையை உடைத்துக்கொண்டு வெள்ளம் பெருகி வந்ததாம்; தெற்கே குளத்தை உடைத்துக்கொண்டு அந்த வெள்ளமும் ஓடி வந்ததாம். இப்படி மூவகை வெள்ளத்திற்கு இடையே சிக்கிக்கொண்டவர்கள் வடக்கு நோக்கிப் போய் மேடான ஒரு இடத்தில் தப்பி ஓடித் தங்க உத்தேசித்தார்களாம்! அப்படியே இந்தப் பெண்களும் மூவகை வெள்ளத்திற்கும் ஆற்ருது தப்பிக் கண்ணன் இருக்கும் திசையை நோக்கிப் போக விரும்புகிருர்களாம்.

போகும்போது, இந்த நற்செல்வன் தங்கையாகிய அன்புச் செல்வியையும் அழைத்துப் போக விரும்புகிருர்கள். இவளை விட்டுப் போகத் துணியவில்லை. எனவேதான் கண்ணனைப் பாடியவர்கள் இராமனையும் பாடி, 'நாங்கள் இப்போது துஷ்டக் கண்ணனைப் பாடவில்லை அம்மா! சாதுவாகிய இராமனைத்தான் பாடுகிருேம்' என்கிருர்கள். எப்படியாவது இவளுடைய பேருறக்கத்தைக் கலைத்துத் தங்களுடன் அழைத்துப் போகவேண்டும் என்பது இவர்கள் சங்கற்பம்.

நற்செல்வன் தங்கையும் அந்தப் பழக்கத்தாலும் அந்த உறவாலும் கிருஷ்ண பக்திக்கு இசைந்த நற்செல்வியாகத்தானே இருக்க வேண்டும்?

## மூவகை வெள்ளம்

கனைத்து இளங் கற்றெருமை
    கன்றுக்கு இரங்கி,
நினைத்து முலைவழியே
    நின்றுபால் சோர
நனைத்து, இல்லம் சேறுஆக்கும்
    நற்செல்வன் தங்காய்!
பனித்தலை வீழ, நின்
    வாசற்கடை பற்றி,
சினத்தினல் தென்இலங்கைக்
    கோமானைச் செற்ற
மனத்துக்கு இனியானைப்
    பாடவும்நீ வாய்திறவாய்.
இனித்தான் எழுந்திராய்;
    ஈதுஎன்ன பேருறக்கம்?
அனைத்துஇல்லத் தாரும்
    அறிந்தேலோர் எம்பாவாய். (12)

### அரும்பதவுரை

இளங்கற்றெருமை: இளம் கன்றுகளையுடைய எருமைகள். நற்செல்வன்: நல்ல செல்வத்தை உடையவன்; எருமை மாடு களாகிய செல்வத்தை உடையவன். பனித்தலை: எங்கள் தலையில் பனி விழ. பின்வாசல் கடைபற்றி: உன் வீட்டுத் தலைவாசலைப் பற்றிக்கொண்டு. சினத்தினால்: தருமாவேசம் என்ற கோபாவேசத் தினால். தென் இலங்கைக் கோமான்: பிரதாப இலங்கேசுவரனான இராவணன். செற்ற: கொன்றொழித்த. அனைத்து இல்லத் தாரும்: எல்லா வீட்டுக்காரரும். அறிந்து: (இங்கே) துயில் உணர்ந்த பின்பும்.

### விளக்கம்

இந்த வீட்டில் வசிக்கும் பெண்ணின் அண்ணன் கண்ணனை விட்டுப் பிரியாத ஒரு நண்பன். 'அவனுடைய தங்கையாகிய நீயும் இப்படி உறங்கிக் கொண்டிருக்கலாமா?' என்று கேட்கிறார்கள். 'தலைக்கு மேலே பனி விழ நாங்கள் வாசலில் நின்று கொண்டிருக் கிறோமே; எழுந்து வாராய்' என்கிறார்கள். தாங்கள் உய்ந்துபோகும் படி இவள் வந்து கலந்துகொள்ள வேண்டும் என்கிறார்கள்.

எருமைகளைச் செல்வமாக உடையவன் கிருஷ்ண பக்திச் செல்வமும் உடையவனாக இருப்பதால் 'நற்செல்வன்' என்று குறிக் கப்படுகிறான். பணத்தைக் காட்டிலும் எருமைகளைச் செல்வமாக மதிக்கிறவர்கள் கிருஷ்ண பக்தியைத் தங்கள் அடிப்படைச் செல்வ மாகிய தனிப் பெருஞ் செல்வமாக மதிக்கிறார்கள்.

கறவை எருமைகள் கன்றை நினைத்துப் பால் சோர நிற்பதும், அந்தப் பால் நனைத்து இல்லத்தைச் சேறாக்குவதும் செல்வச் செழிப்பை நினைப்பூட்டுகின்றன. இத்தகைய இல்லத்திலே கிருஷ்ண பக்திச் செல்வமும் வழிந்து பொங்கிக் கொண்டிருக்கிறது என்பது குறிப்பு.

# 13. கள்ளம் தவிர்ந்து கலந்து கொள்வாய்

இவளைக் கண்ணழகி என்று ஆய்ப்பாடி முழுவதும் அறிந்திருந் தது. மான்போல் மருண்டு நோக்குவாள்; தாமரைபோல் மலர விழித்தும் பார்ப்பாள். இந்தக் கண்ணழகைக் குறிப்பிட்டுப் பெண்கள்,

போர்து அரிக் கண்ணினாய்!

என்று இவளைக் கூப்பிடுகிறார்கள். பொழுது புலர்ந்தது; 'புள்ளும் சிலம்பினகாண்!' என்கிறார்கள்.

புள்ளும் சிலம்பினகாண்,
போதுஅரிக் கண்ணிஞய்!

என்று இவர்கள் கூவி அழைத்தும் உள்ளே இருப்பவள் வெளியே வந்து சேரவில்லை. 'என் கண்ணழகின் சிறப்பை நினைத்துக் கண்ணனே நான் இருக்கும் இடம் நோக்கி வந்து சேரவேண்டியது தான்!' என்று கருதியவள்போல் சும்மா இருக்கிருள். கண்ணனுடைய குணுதிசயங்களையும் திவ்ய சரித்திரங்களையும் தியானித்த படியே படுத்திருக்கிருள்.

இவர்கள் கண்ணனுடைய வீர சரித்திரம் ஒன்றை முதல் முதல் நினைப்பூட்டுகிருர்கள். பறவையின் உருவம் கொண்டு வந்த அசுரனுடைய வாயைப் பிளந்தவன் கண்ணன் என்பதை நினைப் பூட்டி,

புள்ளின்வாய் கீண்டானை

என்று பாடத் தொடங்குகிருர்கள்.

பொல்லா அரக்கனை அநாயாசமாகக் கிள்ளிக் களைந்த இராம வீரத்தையும் நினைவூட்டிப் பாடுகிருர்கள். இத்தகைய வீர சரித்திரங் களைப் பாடிக்கொண்டு பெண்கள் எல்லாரும் நோன்புக்கு என்று ஏற்பட்டிருக்கும் சங்கேத ஸ்தலமாகிய பாவைக்களம் போய்ச் சேர்ந் தார்கள் என்று செய்தி சொல்லுகிருர்கள்.

'நாங்கள் போய் எழுப்பிக்கொண்டு போகவேண்டிய சிறுமியராக இருப்பவர்களும் தாமே துயில் உணர்ந்து போகும்போது, நீ இப் படிக் கிடந்து உறங்குவது மிகவும் அழகாயிருக்கிறது!' என்ற குறிப் புடன்,

பிள்ளைகள் எல்லாரும்
பாவைக் களம்புக்கார்

என்கிருர்கள்.

இதற்கு உள்ளே இருப்பவள், 'அவர்கள் சிறு பெண்கள் ஆன தால் காலம் அறியாமல் எழுந்து போயிருக்கக் கூடும்' என்று பதில் சொல்லக்கூடுமல்லவா? எனவே இவர்கள்,

வெள்ளி எழுந்து
வியாழம் உறங்கிற்று

என்று உறுதி கூறுகிருர்கள்.

வெள்ளி எழுதல் - அதாவது சுக்கிர உதயம் - பொழுது விடிந்த தற்கு அறிகுறி, 'சுக்கிர உதயம் ஆயிற்று' என்று மட்டும் இவர்கள் சொன்னுல் போதும். ஆனுல் கோதை வாழ்ந்த காலத்தில் வெள்ளி எழுந்ததுடன் வியாழனது அஸ்தமனமும் நிகழ்ந்தது என்றும், அதையும் சேர்த்து இவர்கள் கூறுகிருர்கள்—அதாவது, ஆண்டாள்

இவர்கள் வாயிலாகக் கூறுகிருள்—என்றும் ஆராய்ச்சிக்காரர்கள் அபிப்பிராயப்படுகிருர்கள்.

உள்ளே இருப்பவள் இதற்கும் கற்பனையாக ஒரு சமாதானம் சொல்வதாகக் கருதலாம். 'பொழுது விடிந்ததென்று கருதிக் காலமறியாமலே பாவைக் களம் புகுந்த சிறுமியர் போல் நீங்களும் போக வேணுமென்ற ஆத்திரத்தால் சுக்கிரன் எழுந்ததாகக் கற்பனை செய்து பேசுகிறீர்கள்' என்று உள்ளே இருப்பவள் சொல்லக் கூடுமல்லவா?

அதற்கும் சமாதானமாகப் பேசுகிருர்கள் இப்பெண்கள். இந்த நிலையில்தான், 'புள்ளும் சிலம்பினகாண், போது அரிக் கண்ணினுய்!' என்கிருர்கள். ஏற்கெனவே ஒரு பெண்ணை எழுப்பும்போது சொன்ன அடையாளம்தான் இது. அங்கே கூட்டிலிருந்து புள் சிலம்பியதைக் குறிப்பிட்டதாகவும், இங்கே இரை தேடப்போன இடங்களிலெல்லாம் சிதறி ஒலிப்பதைக் குறிப்பிடுவதாகவும் ஊகித்துக் கொள்ளலாம்.

இவ்வளவு சொல்லியும் கண்ணழகி எழுந்து வந்தபாடில்லை. எனவே இவர்கள் நீராட்டத்தை வருணித்து இவளை வசீகரிக்கப் பார்க்கிருர்கள்.

குள்ளக் குளிரக்
குடைந்துநீர் ஆடாதே
பள்ளிக் கிடத்தியோ,
பாவாய்! நீ?

என்று கூறுவதைக் கேளுங்கள்.

'உடம்பு ஜில் என்று குளிர்ந்து போகும்படி குளத்தில் படிந்து ஆனந்தமாக நீராடுவதை விட்டு இப்படிப் படுக்கையில் கிடந்து வீண்பொழுது போக்குகிருயோ? இது என்ன ஆச்சரியம்!' என்கிருர்கள். 'இது நன்னுள்' என்பதையும் நினைவூட்டுகிருர்கள். இந்த நல்ல நாளில் கண்ணழகி கள்ளம் தவிர்ந்து தங்களுடன் கலந்து கொள்ள வேண்டும் என்கிருர்கள்.

இவள் கள்ளம்தான் என்ன? கிருஷ்ண சரிதத்தை நினைத்துக் கொண்டு 'அவன்தான் என் கண்ணழகிற்கு ஆசைப்பட்டு நான் இருக்கும் இடம் நோக்கி வரட்டும்' என்று தனியே கிடக்கிருளே, அதைத்தான் இவர்கள் கள்ளம் என்று குறிப்பிடுகிருர்கள். தனியே பக்தி யனுபவம் பண்ணித் திருப்தி அடைவதைக் காட்டிலும் பிறருடன் கூடி நெஞ்சு குளிர இறைவனுடைய அன்பு நெறியைப் பற்றி நிற்பதே மேலானது என்பது குறிப்பு.

கண்ணழகியும் கள்ளந் தவிர்ந்து இவர்களுடன் கலந்து கொண்டாள் எனலாம்.

## கண்ணழகியின் கள்ளந்தளம்

புள்ளின்வாய் கீண்டானை,
பொல்லா அரக்கனைக்
கிள்ளிக் களைந்தானை,
கீர்த்திமை பாடிப்போய்,
பிள்ளைகள் எல்லாரும்
பாவைக் களம்புக்கார்;
வெள்ளி எழுந்து
வியாழம் உறங்கிற்று;
புள்ளும் சிலம்பினகாண்;
போதுஅரிக் கண்ணினாய்!
குள்ளக் குளிரக்
குடைந்துநீர் ஆடாதே,
பள்ளிக் கிடத்தியோ,
பாவாய்! நீ, நன்னாள்;
கள்ளம் தவிர்ந்து
கலந்தேலோர் எம்பாவாய். (13)

### அரும்பதவுரை

புள்ளின் வாய் கீண்டானை: பறவையின் உருவத்தைக் கொண்டு வந்த அசுரனது வாயைக் கிழித்துக் கொன்ற கண்ணனை. பொல்லா அரக்கனை: இராவணனை. கிள்ளிக் களைந்தானை: மிகவும் எளிதாகக் களைந்து ஒழித்தவனை. கீர்த்திமை: புகழுக்குரிய சரிதங்கள். பிள்ளைகள்: பெண் பிள்ளைகள்; சிறுமியர். பாவைக் களம்: நோன்பு நோற்பதற்காகக் குறிக்கப்பட்டுள்ள இடம். புக்கார்: புகுந்தார்கள்; சென்று சேர்ந்தார்கள். வெள்ளி எழுந்து: சுக்கிரன் உதயமாகி. வியாழம் உறங்கிற்று: வியாழன் என்றும் பிரகஸ்பதி என்றும் சொல்லப்படும் கிரகம் அஸ்தமனமாகி விட்டது. புள்ளும் சிலம்பினகாண்: பறவைகளும் ஒலிசெய்தன. போது அரிக் கண்ணினாய்: தாமரைப் பூவையும் மானையும் ஒத்த கண்ணழகு வாய்ந்தவளே; தாமரை மலரின் அழகைக் கொள்ளை கொண்டிருக்கும் கண்ணழகு கொண்டவளே. குள்ளக் குளிரக் குடைந்து நீராடாதே: உடம்பு மிகக் குளிர்ந்து போகுமாறு குளத்தில் படிந்து துளைந்து விளையாடி நீராடாமல். பள்ளிக் கிடத்தியோ: படுக்கையில் கிடப்பாயோ. நன்னாள்: நல்ல நாளில். கள்ளம் தவிர்ந்து: கபடத்தை விட்டு.

**விளக்கம்**

கிருஷ்ணனுடைய வீர சரித்திரத்தையும் இராமனுடைய வீரசரித்திரத்தையும் பாடிக்கொண்டு வருகிறவர்கள் ஒப்பற்ற கண்ணழகு வாய்ந்த தங்கள் தோழி ஒருத்தியை எழுப்புகிறார்கள். கள்ளத் தனத்தை விட்டுத் தங்களுடன் கலந்துகொள்ள வேண்டுமென்று சொல்லுகிறார்கள். இவளுடைய கள்ளத்தனம்தான் எது? கண்ணனையும் அவனுடைய கலியாண குணங்களையும் நினைத்துக்கொண்டிருப்பதுதான் இவள் கள்ளம்! ஏன்? எப்படி? பக்தியைப் பொதுவுடைமை ஆக்கிக் கொள்ளாமல் தனியே கிடந்து தியானம் செய்துகொண்டிருப்பதுதான் கள்ளம்.

# 14. நாணாதாய்! எழுந்திராய்

'நான் எல்லாருக்கும் முன்னே எழுந்து வந்து உங்களையெல்லாம் எழுப்புவேன்!' என்று ஏற்கெனவே சொல்லியிருந்தவள், அந்த வார்த்தையை மறந்து உறங்கிக் கொண்டிருக்கிறாள். அவள் வீட்டு வாசலில் வந்து நிற்கிறது பெண்கள் கூட்டம். இப்போது பின்வரும் உரையாடல் நிகழ்வதாகக் கருதலாம்:

'நாங்கள் உன் வீட்டு வாசலில் வந்து நெடும் போதாக நின்றுகொண்டிருக்க, நீ சுகமாக உறங்கிக்கொண் டிருக்கிறாயே!'

'பொழுது விடிய வேண்டாமா?'

'பொழுது விடிந்ததையும் தெரிந்துகொள்ளாமல் தூங்குகிறாயா?'

'அதற்குச் சாட்சி?'

'அம்மா! உன் புழைக்கடைத் தோட்டத்திலேயே சாட்சி இருக்கிறது!'

'என்ன சாட்சியோ?'

பெண்கள் பாடுகிறார்கள்:

உங்கள் புழைக்கடைத்
தோட்டத்து வாவியுள்
செங்கழுநீர் வாய்நெகிழ்ந்து
ஆம்பல்வாய் கூம்பினகாண்,

உள்ளே இருப்பவள் 'உங்கள் மயக்கம்தான் அதற்குக் காரணம்!' என்கிறாள். தன் வீட்டு வாசலில் வந்த குதூகலத்தால் அவர்கள் கண்கள் மலர்ந்தனவாம். அவர்கள் விரும்பியபடி இவள் முகம் காட்டாததாலும், வாதப் போரில் தோற்றுப் போனதாலும் அவர்களில் பலர் வாய்களும் மூடிப்போயிருக்க வேண்டும் என்கிறாள். அதனால்தான் செங்கழுநீர் மலர்ந்ததாகவும், ஆம்பல் கூம்பினதாகவும் அவர்கள் பிரமித்ததாகக் கூறுகிறாள்.

தலைவாசலில் நின்று வீட்டிற்குள்ளே புகுவதற்கும் வழி பெருது தவித்துக் கொண்டிருப்பவர்கள் இவள் வீட்டுப் புழைக்கடையில் செங்கழுநீர் மலர்ந்திருப்பதையும் ஆம்பல் கூம்பியிருப்பதையும் அறிந்து கொண்டதுதான் எப்படி? அதனுல்தான் இவர்களைப் பரிகசித்து உள்ளே இருப்பவள் பதில் சொல்லுவதாக ஊகித்துக் கொள்ள இடம் இருக்கிறது. இவர்களோ பொய் சொல்லவும் இல்லை. மற்றை இடங்களில் உள்ள வாவிகளில் செங்கழுநீர் வாய் நெகிழ்ந்து ஆம்பல் வாய் குவிந்திருப்பதைப் பார்த்துக்கொண்டே வந்திருப்பதால், இவள் வீட்டுப் புழைக்கடைத் தோட்டத்து வாவி யிலும் அப்படித்தான் இருக்க வேண்டுமென்று நிச்சயித்துப் பேசுகிருர்கள்.

'உங்கள் புறங்கடைத் தோட்டத்து வாவி' என்று இவர்கள் தொடர்பை விட்டுப் பேசுவதுபோல் பேசுவதற்குக் காரணம் இவள் இன்னமும் துயில் உணராது உறங்கிக் கொண்டிருக்கிருளே என்பது தான். இப்படித் தோழமைக்கு உரிய அன்பை மறந்து பேசத் தொடங்கிய போதிலும், உள்ளுக்குள்ளே அன்பிற்கு ஒரு குறைவும் இல்லை.

புழைக்கடைத் தோட்டத்து வாவி குறித்து இவர்கள் பேசியதை இவள் நம்பவில்லை என்று தெரிந்து கொண்டதும் வேருெரு அடை யாளம் சொல்லுகிருர்கள்:

செங்கல் பொடிக்கூறை
வெண்பல் தவத்தவர்
தங்கள் திருக்கோயில்
சங்குஇடுவான் போகின்ருர்.

காவியாடை புனைந்து வெண்ணிறமான பற்களையுடைய துறவி கள் தங்களுடைய கோயிலில் சங்கு இடும் பொருட்டுப் போகிருர் களே, அது ஒரு சாட்சி என்கிருர்கள். பண்டாரங்கள் தங்கள் கோயிலில் பூஜைக்குச் சங்கு ஊதப் போவதை இங்கே இவர்கள் குறிப்பிடுவதாகக் கருதலாம். அவர்கள் கோயில்களையும் 'திருக் கோயில்' என்று குறிப்பிடுவது இவர்கள் சமரச உணர்ச்சியைக் காட்டுகிறது. அதாவது, ஆண்டாள் இவர்கள் வாயிலாகத் தன்னுடைய சமரச உணர்ச்சியை வெளியிடுகிருள் எனலாம்.

இங்கே குறிப்பிடும் துறவிகளை வைணவத் துறவிகள் என்று கருதுவோரும் உண்டு. கோவில்-கதவைத் திறக்கும்போது மங்களச் சங்கு ஊதுவதை இங்கே குறிப்பிடுவ்தாகக் கருதலாம். கோவில்-கதவைத் திறவுகோலிட்டுத் திறப்பதையும் சங்கிடுதல் என்று குறிப்பிடுவதுண்டு. இந்த அடையாளமும் உள்ளே இருப்பவளுக்குத் திருப்தி அளிக்கவில்லை என்று கண்டதும், வெளியே இருப்பவர்கள் ஆத்திரம் அடைந்து பேசுகிருர்கள்.

'நங்காய்! நீ எங்களிடம் சொன்னது என்ன? இப்போது செய்வது என்ன? எல்லாருக்கும் முன்பு படுக்கையை விட்டுக் குதித்து எழுந்து ஓடிவந்து எங்களையெல்லாம் எழுப்புவேன் என்ருயே; இப்போது உன்னை எழுப்ப வந்தவர்களையும் எதிர்த்துப் பேசுகிருயே!' என்றெல்லாம் சுடச்சுடப் பொருள் படும்படி பேசுகிருர்கள்.

*எங்களை முன்னம்*
*எழுப்புவான் வாய்பேசும்*
*நங்காய்! எழுந்திராய்,*
*நாணுதாய்! நாவுடையாய்!*

என்று எவ்வளவு ஆத்திரமாய்ப் பேசுகிருர்கள்!

"நீ எழுந்து வராமல் போனுலும் குற்றமில்லை; வாயால் அளந்தபடி ஒன்றும் செய்ய முடியவில்லையே என்று கொஞ்சமும் வெட்கப் படவுமில்லையே, அம்மா!' என்பதை உள்ளடக்கித்தான் சுருக்கமாக 'நாணுதாய்!' என்கிருர்கள். இன்றைய பாஷையில் 'அடி, சொரணை கெட்டவளே!' என்று கூப்பிடுகிருர்கள் எனலாம்.

'நாணுதாய்! நாவுடையாய்!' என்று பரிகசிப்பவர்கள் இவளை இதற்குமேலும் பரிகசிக்க, 'பெண்களில் சிறந்தவள்' என்ற பொருளுடைய 'நங்காய்!' என்ற விளியையும் உபயோகிக்கிருர்கள்.

## முன்னே வந்து எழுப்புகிறவளா நீ?

*உங்கள் புறங்கடைத்*
*தோட்டத்து வாவியுள்*
*செங்கழுநீர் வாய்நெகிழ்ந்து*
*ஆம்பல்வாய் கூம்பினகாண்;*
*செங்கல் பொடிக்கூறை*
*வெண்பல் தவத்தவர்,*
*தங்கள் திருக்கோயில்*
*சங்குஇடுவான் போகின்ருர்;*
*எங்களை முன்னம்*
*எழுப்புவான் வாய்பேசும்*
*நங்காய்! எழுந்திராய்,*
*நாணுதாய்! நாஉடையாய்!*
*சங்கொடு சக்கரம்*
*ஏந்தும் தடக்கையன்*
*பங்கயக் கண்ணனைப்*
*பாடேலோர் எம்பாவாய்.* (14)

**அருப்பதவுரை**

புறங்கடை: வீட்டின் பின்புறம்; இன்றைய தமிழில் புழைக கடை. வாவி: தடாகம். செங்கழுநீர் வாய்நெகிழ்ந்து: செங்கழுநீர் என்ற மலர்கள் மலர்ந்து. ஆம்பல் வாய் கூம்பினகாண்: ஆம்பல் மலர்கள் வாய் குவிந்தன. செங்கல் பொடிக்கூறை: காவிப் பொடியில் தோய்த்த ஆடை; காஷாய வஸ்திரம். சங்கு இடுவான் போகின்ருர்: திறவுகோல் இட்டுத் திறக்கப் போகிருர்கள்; சங்கு என்பது இங்கே திறவுகோலேயும் ஊது சங்கையும் குறிப்பிடுவது பொருத்தம்தான். எழுப்புவான்: எழுப்பும் பொருட்டு. நாஉடை யாய்: இனிய பேச்சைப் பேசும் நாக்கை உடையவளே. தடக் கையன்: பெரிய கைகளையுடைய கண்ணன். பங்கயக் கண்ணன்: தாமரைபோன்ற கண்களையுடைய கண்ணன்.

**விளக்கம்**

பொழுதுவிடிந்ததற்குச் சாட்சியை உங்கள் வீட்டுப் புழைக்கடை யிலேயே பார்த்துக் கொள்ளலாம் என்கிருர்கள். அங்கே தோட்டம் இருக்கிறது; வாவி இருக்கிறது. வாவியுள் செங்கழுநீர்ப் பூக்கள் மலர்ந் திருக்கும் அழகைப் பார் என்கிருர்கள். அந்த அழகே பொழுது விடிந்ததற்குச் சாட்சி என்கிருர்கள். ஒருவன் வாழ, ஒருவன் தாழ்ந் திருப்பதையும் காண்கிறேமல்லவா? அந்த விதமாக, செங்கழுநீர் மலர ஆம்பல் கூம்பி யிருப்பதையும் சாட்சியாகக் காட்டுகிருர்கள். தவத்தவர் சங்கிடுவதைப் புழைக்கடைக்கும் போகாமல் படுத்த படுக்கையிலிருந்தே கேட்கலாம் என்கிருர்கள்.

'நாணுதாய்! நாவுடையாய்!' என்று ஏசியும், 'நங்காய்!' என்று புகழ்ந்தும் பேசுவதில இவர்களுக்கு இடையே உள்ள நட்பு எவ்வளவு இனிமையாகப் புலனுகிறது பாருங்கள்!

# 15. இளங் கிளியே! எழுந்திரு

எல்லாப் பெண்களும் திரண்டு வந்துதான் தன்னை எழுப்ப வேண்டும், அந்தக் கூட்டத்தைத் தான் கண்ணுரக் காண வேண்டும் என்று துணிந்து படுக்கையை விட்டு எழுந்திராமல் கிடக்கிருள் ஒருத்தி. இவள் வீட்டு வாசலில் பெண்கள் திரண்டு வந்து நிற் கிருர்கள்.

முந்திய பாட்டில் 'பங்கயக் கண்ணனைப் பாடு ஏலோர் எம்பாவாய்' என்ற கடைசி அடியை உச்சஸ்வரத்தில் பெண்கள் பாடியது இந்த வீட்டுக்காரியின் காதில் விழுந்தது. அசல் அகத்துப் பெண்ணை எழுப்பிய அந்த வாக்கின் இனிமையில் ஈடுபடுகிருள் இவள். ஈடுபட்டு இவளும்,

பங்கயக் கண்ணனைப்
பாடேலோர் எம்பாவாய்

என்று தனக்குத்தானே பாடத் தொடங்கி விட்டாள். இனிமையாகப் பாடுகிறாள். இந்தக் குரலின் இனிமை வாசலில் நிற்பவர்களை வசீகரிக்கிறது. அதனால் அவர்கள் இவளை 'இளங் கிளியே!' என்று கூப்பிடுகிறார்கள்.

அசல் அகத்துப் பெண்ணை 'நாணாதாய்! நாவுடையாய்!' என்றெல்லாம் பரிகசித்தவர்கள் தன்னை 'இளங்கிளியே!' என்று அழைத்ததைக் கேட்டதும், 'இதற்கு ஒரு காரணம் இருக்க வேண்டும்' என்று எண்ணி இவள் சும்மா இருக்கிறாள்; பதில் ஒன்றும் சொல்லவில்லை. 'இவர்கள் கூறுவதைப் புகழ்ச்சியாக எப்படிக் கருதுவது? அந்த அசலகத்துப் பெண்ணையும் உறக்கத்தில் வென்று விட்டவள் போலல்லவா நான் இன்னும் எழுந்து வெளியே போகாமல் இருக்கிறேன்? அப்படி இருந்தும் என்னை இகழ்வதற்குப் பதில் புகழ்ச்சி தோன்றக் கூப்பிடுகிறார்களே, இந்தப் புகழ்ச்சியின் உட்பொருள் இகழ்ச்சியாகத்தான் இருக்கவேண்டும்! இந்த நிலையில் மௌனமே தக்க பதில்!' என்றெல்லாம் எண்ணமிட்ட வண்ணம் வாய் பேசாமல் கிடக்கிறாள்.

அவர்களோ 'இன்னம் உறங்குதியோ?' என்று கேட்கிறார்கள் ஆச்சரியமாக. 'இப்போதுதானே பாடிக்கொண்டிருந்தாள் இந்தக் கிளி மொழியாள்? 'இளங்கிளியே!' என்று நாங்கள் கூப்பிட்டதும் உறக்கம் வந்து விடுமா, என்ன!' என்பது அதிசயத்திற்குக் காரணம்.

எல்லே! இளங்கிளியே!
இன்னம் உறங்குதியோ?

என்று பெண்கள் கேட்டதும் கிளி மொழியாள் பதில் சொல்லுகிறாள்.

'இதோ எழுந்து வருகிறேன்; அதற்குள்ளே ஏன் சிலு சிலு வென்று கூச்சலிடுகிறீர்கள்?' என்பது இவள் பதில். இதைக் கேட்டதும் இக் கிளி மொழியாள் மீதும் இவர்களுக்கு ஆத்திரம் வந்துவிடுகிறது.

வல்லைஉன் கட்டுரைகள்;
பண்டேஉன் வாய்அறிதும்!

என்கிறார்கள். இவளுடைய கட்டுரைத் திறனை—அதாவது கட்டிச் சொல்லும் பேச்சுத் திறனை—ஏற்கெனவே தாங்கள் மெச்சியதாகவும், இப்போதும் மெச்சுவதாகவும் சொல்லுகிறார்கள். 'உன் வாயை முன்னமும் அறிவோம்; இப்போதும் அறிகிறோம்' என்கிறார்கள்.

இதற்குக் கிளி மொழியாள், 'நீங்களே சாமர்த்தியசாலிகள்!' என்று சுடச் சுடப் பதில் சொல்லத் தொடங்கிவிட்டாள். எனினும்

பளிச்சென்று தன் வாயை அடக்கிக்கொண்டு, 'நானே சாமர்த்திய சாலி என்று நீங்கள் சொன்னபடியேதான் இருக்கட்டும்!' என்று பணிந்து பதில் சொல்லுகிருள்.

வல்லீர்கள் நீங்களே!
நானேதான் ஆயிடுக!

என்ற பதிலில் முரண்பட்ட இருவகை உணர்ச்சிகள் தொனிக்கக் காண்கிரும்.

வெளியே இருப்பவர்கள் இவளது விநய வார்த்தையைக் கேட்டதும் தாங்களும் பணிந்து பேசத் தொடங்கி,

ஒல்லை நீ போதாய்,
உனக்கென்ன வேறுஉடையை?

என்று கேட்கிருர்கள். 'விரைவாக நீ எழுந்து வா; உனக்கு என்று தனியாக என்ன வேறுபாடு இருக்கிறது?' என்று சமாதானமாகவே பேசுவதைக் காண்கிரும்.

இப்போது கிளி மொழியாள் மேலும் பணிவாகப் பேசுகிருள். 'எனக்கு என்ன, கொம்பா முளைத்திருக்கிறது அசாதாரணமாக? அதிசயம் ஒன்றும் உங்களுக்கு இல்லாதது என்னிடம் இல்லைதான்; தோழிகளே, உங்களோடு கூடுவதைக் காட்டிலும் எனக்கென்று ஒரு தனிக் காரியமும் உண்டோ? சரி, பெண்கள் எல்லாரும் வந்துவிட்டார்களா?' என்கிருள். எல்லாரும் தன் வீட்டு வாசலில் வந்து கூடி நிற்கும் அந்தக் கூட்டத்தின் காட்சியைக் காணவேண்டும், கண்ணுரக் காணவேண்டும் என்பதுதானே இவள் மனப்பான்மை? எனவே,

எல்லாரும் போந்தாரோ?

என்று முடிவாக ஒரு கேள்வி போடுகிருள்.

அதற்கு அவர்கள் 'போந்தார், போந்து எண்ணிக்கொள்' என்று பதில் சொல்லுகிருர்கள். 'பெண்கள் எல்லாரும் உன்னைக் காண்பதற்காக உன் வீட்டு வாசலில் வந்து காத்துக் கிடக்கிருர்களே!' என்று சொல்லிவிட்டு, 'உனக்கு ஏதாவது சந்தேகம் இருந்தால் நீயே வந்து எண்ணிப் பார்த்துக்கொள்' என்றும் சொல்லுகிருர்கள்.

முடிவில் எல்லோரும் கண்ணனது பிரதாபத்தைப் பாடத் தொடங்குகிருர்கள் ஒருமுகமாக.

## குரல் காட்டி உறங்குதியோ!

'எல்லே! இளங்கிளியே!
இன்னம் உறங்குதியோ?'
'சில்என்று அழையேன்மின்,
நங்கைமீர்! போதர்கின்றேன்.'

'வல்லை,உன் கட்டுரைகள்;
பண்டேஉன் வாய்அறிதும்!'
'வல்லீர்கள் நீங்களே!
நானேதான் ஆயிடுக!'
'ஒல்லைநீ போதாய்,
உனக்கென்ன வேறுஉடையை?'
'எல்லாரும் போந்தாரோ?'
'போந்நார்,போந்து எண்ணிக்கொள்.'
வல்ஆனை கொன்றானை;
மாற்றாரை மாற்றுஅழிக்க
வல்லானை மாயனைப்
பாடேலோர் எம்பாவாய்! (15)

### அரும்பதவுரை

எல்லே: என்னே; என்ன ஆச்சரியம். இளங்கிளியே: இளங்கிளி போன்றவளே. உறங்குதியோ: உறங்குகின்றாயோ. 'சில்' என்று அழையேன்மின்: சிலுசிலுவென்று கூப்பிடாதேயுங்கள். நங்கைமீர்: நங்கையார்களே. போதர்கின்றேன்: இதோ வருகிறேன். வல்லை உன் கட்டுரைகள்: இட்டுக்கட்டிப் பேசும் பேச்சில் நீ வல்லவளாய் இருப்பவள்தான். பண்டே: முன்னமே. அறிதும்: அறிவோம். வல்லீர்கள் நீங்களே: வல்லவர்கள் நீங்கள் தாம். நானேதான் ஆயிடுக: நானே வல்லவளாக இருந்தாலும் இருக்கட்டும். ஒல்லை நீ போதாய்: விரைவாக நீ எழுந்து வருவாய். உனக்கு என்ன வேறு உடையை: உனக்குமட்டும் தனியாக வேறு என்ன அதிசய உடைமை இருக்கிறது. போந்தாரோ: வந்துவிட்டார்களோ? போந்து எண்ணிக்கொள்: எழுந்து வந்து எண்ணிக்கொள். வல்ஆனை: வலிய யானை: குவலயா பீடம் என்ற யானை; இது கம்சனால் கண்ணனைக் கொல்லும்படி ஏவப்பட்டது. மாற்றாரை: பகைவரை. மாற்றழிக்க: மாறு அழிக்க; பகையை அழிக்க; எதிராக நின்று அழிக்க. வல்லானை: வல்லவனாகிய மாயக் கிருஷ்ணனை.

### விளக்கம்

'இளங்கிளியே!' என்று இவளை அழைப்பதற்குக் காரணம் இவளுடைய பேச்சினிமை என்பர். கிளிப்பிள்ளை போல் இனிய மழலை ததும்ப இவள் அவர்களிடம் உரையாடுவதுண்டு எனக் கருதலாம். உண்மையில் இவள் உறங்கிக்கொண் டிருக்கவில்லை; தன் குரலில்

இனிமை தோன்ற மெல்லப் பாடிக்கொண்டிருந்தாள் என்றும், இந்தக் குரலின் இனிமையை அனுபவித்தே வெளியில் இருப்பவர்கள் 'இளங்கிளியே!' என அழைத்தனரென்றும் கருதலாம்.

இப்பாட்டில் ரசமான சம்பாஷணையைக் கேட்கிறோம்.

# 16. நேச நிலைக் கதவம் நீக்குவாய்

பத்துப் பாடல்களால் பள்ளியெழுச்சி பாடித் தோழிமார்களைப் பெண்கள் எழுப்பிவருவதைக் கண்டோம். ஒன்பது பாட்டுக்களில் உரையாடல் வெளிப்படையாக அமைந்திருக்கவில்லை. பத்தாவது பாட்டில் மட்டும் பந்தை மாறி மாறி அடிப்பது போல் அமைந்திருக்கிறது உரையாடல். செய்யுளின் முதல் அடி எழுப்புகிறவர்களின் வாக்கு. இரண்டாம் அடி உள்ளே இருந்து வரும் பதில்—கிளிமொழியாளின் பதில். மூன்றும் அடி மறுபடியும் வெளியே இருந்து வரும் பதில்; இதற்குப் பதில் நான்காம் அடி. ஐந்தாம் அடியில் மேலும் துயில் எழுப்ப வந்திருப்பவர்களின் வார்த்தை; ஆறும் அடியின் முற்பகுதியில் உள்ளே இருப்பவளின் இறுதிக் கேள்வி. அப்பால் வெளியே இருப்பவர்கள் முடிவாகச் சொல்லும் பதில்.

எனவே 'திருப்பாவை ஆகிறது இப்பாட்டு' என்று கூறுவதும் உண்டு. 'நானேதான் ஆயிடுக!' என்று குற்றத்தை ஏற்றுக்கொள்ளும் நிலையில் கிளிமொழியாள் பேசுகிறாள் அல்லவா? இதில் வைணவ லட்சணம் குறிக்கப்படுகிறது எனக் கூறுவதுண்டு. குற்றம் சாட்டப்பட்டவன் பாகவதர்களை வணங்கி, 'பொறுத்தருள வேணும்; குற்றத்தை அடியேன் ஏற்றுக்கொள்கிறேன். நானேதான் குற்றவாளி என்று ஒப்புக்கொள்ளுகிறேன்' என்று கூறுவதே வைணவ லட்சணம் என்பர். 'நானேதான் ஆயிடுக!' என்ற சூத்திரத்தை வைணவன் மறந்துவிடலாகாது.

* * *

இனி எல்லாரும் திரண்டு நந்தகோபர் திருமாளிகைக்குப் போகிறார்கள். அங்கே கோயில் காப்பானையும் வாசல் காப்பானையும் நோக்கி, 'வாசல் திறக்கவேணும்' என்று வேண்டிக்கொள்ளுகிறார்கள் இந்தப் பதினாறாவது பாசுரத்திலே. இப்பாட்டில் கோயில் காப்பானையும் வாசல் காப்பானையும் துயில் உணர்த்துகிறார்கள். வெளிப்புறத்து வாசலைக் காப்பவன் கோயில் காப்பான் என்று கூறப்படுகிறான். உட்புறத்து வாசலைக் காப்பவன் வாசல் காப்பான் என்று கூறப்படுகிறான்.

தங்களைப் பெயர் சொல்லாமல் தங்கள் பணியைக் குறிப்பிட்டுப் பெண்கள் அழைத்ததும் இவர்கள் உள்ளம் குளிர்ந்து 'உள்ளே போங்கள்' என்று சம்மதம் தெரிவிக்கிறார்கள். வாயால் அல்ல; கண்ணால் என்பது குறிப்பு. கோயில் காப்பானும் வாயில் காப்பானும் ஒருவனே என்று பொருள் கொள்வதும் உண்டு.

'மணிக் கதவம் தாள் திறவாய்' என்று இப்பெண்கள் கூறும் போது அந்தக் கதவின் அழகிலே இவர்கள் உள்ளம் ஒருவாறு கவரப்பட்டிருக்க வேண்டும். ஆனால் 'அந்த அழகிலே எங்கள் கண்ணும் கருத்தும் ஈடுபடாதவாறு கதவைத் திறந்து எங்களை உள்ளே விட்டுவேணும்' என்று ஆத்திரப்படுவதையும் அதே வாக்கில் காணலாம்.

இவர்கள் கதவு திறக்கச் சொல்லும்போது, கண்ணன் நேற்றே பறை தருவதாக வாக்களித்தான் என்ற செய்தியையும் தெரிவிக் கிறார்கள். 'ஆயர் சிறுமியராகிய எங்களுக்குக் கருணைகூர்ந்து அப்படி வாக்களித்தான்' என்று கூற வந்தவர்கள் கண்ணனை மாயன் என்றும், மணிவண்ணன் என்றும் குறிப்பிடுகிறார்கள். கண்ணன் தங்களிடம் காட்டும் அன்பும் கருணையும் ஆச்சரிய மானவை என்ற குறிப்பை மாயன் என்ற சொல்லால் புலப்படுத்து கிறார்கள். 'மணிவண்ணன்' என்று குறிப்பிடும்போது, தங்களைக் 'கிடந்த இடத்தில் கிடக்கவொட்டாதே இப்படிப் படுத்துகிற வடி வழகு' என்ற குறிப்பைத் தங்களை அறியாமலே வெளியிடுகிறார்கள்.

'கண்ணன் துயிலுணர்ந்த பின் விண்ணப்பம் செய்து, நீங்கள் சந்திக்கும்படி ஏற்பாடு செய்து தருகிறேன். நில்லுங்கள்' என்று வாசல் காப்பான் சொல்லியிருக்கக் கூடுமல்லவா? அதற்காகத்தான், 'இன்று விண்ணப்பம் செய்ய வேண்டியதில்லை. நேற்றே பறை தருவதாக மாயன் மணிவண்ணன் வாக்களித்து விட்டான்' என்று தெரிவித்தார்கள்.

'அவன் வாக்களித்திருந்த போதிலும் நாங்கள் எங்கள் கடமை யைச் செய்யவேண்டாமா? வந்தவர்களின் நிலையை ஆராய்வது எங்கள் கடமை அல்லவா?' என்று வாசல் காப்பான் சொல்லக் கூடுமே; அதற்கு விடையாக இவர்கள்,

தூயோமாய் வந்தோம்,
துயில்எழப் பாடுவான்

என்கிறார்கள்.

இவர்களைப் பார்த்ததுமே வாசல் காப்பானுக்கு இவர்களது அகத்தூய்மை முகத்திலேயே தெரிந்துவிட்டது. இவர்கள் பேச்சின் இனிமையும் அவன் உள்ளத்தைக் கவர்ந்துவிட்டது. இந்தப் பேச்சை மேலும் செவியால் பருக விரும்புகிறான் அவன். எனவே, 'இந்த அகாலத்தில் நீங்கள் உள்ளே போகக்கூடாது' என்று மறுத் துக் கூறுவதுபோல் முகத் தோற்றத்தை அமைத்துக் கொண்டான். அதுகண்ட இப்பெண்கள்,

வாயால்முன் னம்முன்னம்
மாற்றாதே, அம்மா! நீ

என்று வேண்டிக்கொள்கிறார்கள்.

'முதல் முதல் உம்முடைய வாயால் மறுக்காமல் இருக்க வேணும்' என்று விநயமாகக் கூறுகிறார்கள். அவன் கருத்தை அறிந்தே இப்படி உசிதமாகப் பேசுகிறார்கள். 'வாயால் தீயைச் சொரிவதுபோல் மறுத்துப் பேசாமல் இருக்கவேணும் சாமி!' என்று பணிவாக வேண்டிக் கொள்ளுகிறார்கள்.

'நேயநிலைக் கதவம் நீக்கு'—அதாவது கண்ணனிடம் பரிவுற்றிருக்கும் நிலையுள்ள இக்கதவை நீயே நீக்கவேணும்—என்றதும், வாசல் காப்பான் கதவைத் திறந்து இவர்களை உள்ளே விடுகிறான்.

## வாசல் காப்பானே! தாள் திறவாய்

நாயக னாய்நின்ற
நந்தகோபன் உடைய
கோயில்காப் பானே!
கொடித்தோன்றும் தோரண
வாயில்காப் பானே!
மணிக்கதவம் தாள்திறவாய்,
ஆயர் சிறுமிய
ரோமுக்கு; அறைபறை
மாயன் மணிவண்ணன்
நென்னலே வாய்நேர்ந்தான்;
தூயோமாய் வந்தோம்,
துயில்எழப் பாடுவான்;
வாயால்முன் னம்முன்னம்
மாற்றாதே, அம்மா!நீ
நேய நிலைக்கதவம்
நீக்கேலோர் எம்பாவாய். (16)

### அரும்பதவுரை

நாயகன்: தலைவன். கோயில்: (இங்கே) அரண்மனை. கொடித்தோன்றும்: கொடிகள் தோன்றுகிற. தோரணவாயில்: தோரணங்களையுடைய வாசல். மணிக்கதவம்: மணிகள் கட்டிய கதவு; அழகிய கதவு. ஆயர் சிறுமியரோமுக்கு: ஆயர்குலச் சிறுமியரான எங்களுக்கு. அறைபறை: ஒலிக்கின்ற பறை. மணிவண்ணன்: நீலரத்தினம் போன்ற நிறமுள்ள கண்ணன். நென்னலே: நேற்றே. வாய்நேர்ந்தான்: வாக்கு அளித்திருக்கிறான். தூயோமாய்: கள்ளங்

கவடு இல்லாதவர்களாய். பாடுவான்: பாடும் பொருட்டு. முன்னம் முன்னம்: முதல் முதல். மாற்ருதே: தடுத்துவிடாதே; மறுத்து விடாதே. அம்மா: (இங்கே) சுவாமி. நேய நிலைக் கதவம்; நேசமாய் ஒன்ருெடொன்று இசைந்து பொருந்தியிருக்கும் கதவு. நீக்கு: திறப்பாயாக.

### விளக்கம்

முற்பட எழுந்து நீராடப் புறப்பட்டுப் பஜனை செய்துகொண்டு வந்த பெண்கள் பத்துப் பாட்டுக்களால் பத்துப் பெண்களைத் துயில் எழுப்பினுர்கள். ஆய்ப்பாடியிலுள்ள பெண்களை யெல்லாம் துயில் எழுப்பியதற்கு இதை அறிகுறியாகக் கொள்ளலாம். இனி இது முதல் ஏழு பாசுரங்களில் ஆயச் சிறுமியர்கள் தங்கள் சொற்களுக்கு வாய் ஊறி நின்ற கண்ணபிரானை எழுப்ப விரும்பி, அங்கே உள்ள வர்களையும் கண்ணனையும் துயில் எழுப்பப் போகிருர்கள்.

இந்தப் பாட்டினுல் இப் பெண்கள் நந்தகோபன் மாளிகைக்குப் போய், கோயில் காப்பானை எழுப்புகிருர்கள். பின்பு வாயில் காப்பானையும் எழுப்புகிருர்கள். பேரைச் சொல்லத் தெரியாததால் தொழிலை முன்னிட்டு அழைக்கிருர்கள். ஆயச் சிறுமிகளின் இத் தகைய 'ஆயாப் புன்சொற்க'ளுக்கு வாயூறி நிற்பவன் கண்ணன் என்பதில், கடவுளின் தனிப் பெருங் கருணை உணர்த்தப்படுகிறது.

# 17. தந்தையும் தாயும் அண்ணனும் தம்பியும்

வாசல் காப்போரின் அனுமதி பெற்று உள்ளே புகுந்த பெண்கள் கண்ணபிரானைத் துயிலுணர்த்துவதற்கு முன் நந்தகோபனைத் துயில் உணர்த்துகிருர்கள்; யசோதைப் பிராட்டியையும் துயில் உணர்த்துகிருர்கள். பிறகு கண்ணனையும் பலராமனையும் எழுப்புகிருர்கள்.

மாளிகையின் முதல் பகுதியில் நந்தகோபன் படுத்திருக்கிருன் என்றும், அடுத்த பகுதியில் யசோதை படுத்திருக்கிருள் என்றும், மூன்ரும் பகுதியில் கண்ணன் பள்ளிகொண்டிருக்கிருன் என்றும், நான்காம் பகுதியில் அண்ணனுகிய பலதேவன் பள்ளிகொண்டிருக்கிருன் என்றும் கருதலாம். இந்த முறையிலே ஆய்க்குலப் பெண்கள் துயில் உணர்த்திக்கொண்டே போவதைக் காணலாம்.

முதல் முதல் நந்தகோபனைத் துயில் உணர்த்தும்போது அவனைப் புகழ்ந்து பேசவேண்டு மல்லவா? அவனது கொடைப் புகழை இவர்கள் பேசுகிருர்கள். அவன் ஆடைகள் விரும்புவோருக்கு ஆடைகளைக் கொடுக்கிருனும். தாகமுள்ளவர்களுக்குத் தண்ணீரை உதவுகிருனும், பசித்தவர்களுக்குச் சோற்றுத் தருமம் (அன்ன

தானம்) செய்தவண்ணமாய் இருக்கிறுனும். புகழைப் பயனுகக் கருதாமல் கொடையையே பயனுகக் கருதிக் கொடுத்தவண்ணமாய் இருக்கிறுனும்.

ஒரு யாசகன் ஏதாவது பெற்றுக்கொள்ளாமல் போக விரும்ப மாட்டான். நந்தகோபனே கொடுக்காமல் வீடு திரும்புவதில்லை. இவன் ஆடைகளைத் தானம் செய்வதைப் பார்ப்பவர்கள் 'வஸ்திர தானமே செய்துகொண்டிருக்கிறுன் இவன்!' என்று நினைப்பார்களாம், பேசுவார்களாம். இவன் பருகும் நீரை வழங்கும்போது, தண்ணீர் கொடுப்பதே இவன் கொடை என்று தோன்றுமாம். சோறு கொடுக்கும்போது 'அன்னதானமே இவன் மேற்கொண்டிருக்கும் தருமம்' என்று தோன்றுமாம்.

நீதிபதி ரானடே ஒரு சமயம் கிறிஸ்து மதம் குறித்துப் பேசினுர். கேட்டவர்கள், இவர் கிறிஸ்தவர்தாம் அல்லது கிறிஸ்தவர் ஆகிவிடுவார் என்று பேசிக் கொண்டார்கள். மறு வாரத்திலோ, வேருெரு சமயத்திலோ நபிகள் நாயகத்தைப் பற்றிப் பேசினுர். இவரை முஸ்லிம் அறிஞர் என்றே நினைத்தார்கள் இந்தச் சொற்பொழிவைக் கேட்டவர்கள். பிறகு பௌத்த சமயம் குறித்துச் சொற்பொழிவு செய்தார். இந்தச் சொற்பொழிவு கேட்டவர்கள் இவரைப் பௌத்தர் என்றே கருதினுர்கள். கடைசியாகக் கண்ணபிரானின் கீதை குறித்துப் பேசினுர். இவரே உத்தம ஹிந்து என்று தீர்மானித்தார்கள் இந்தப் பேருரை கேட்டவர்கள். அப்படியே நந்தகோபனையும் வஸ்திரதானமே செய்பவன், அன்னதானமே செய்பவன், தண்ணீரே வழங்குபவன் என்றெல்லாம் பாராட்டிப் பேசிக் கொண்டார்களாம். இத்தகைய கொடைச் சிறப்பை எடுத்துரைத்துப் புகழ் மலர்கள் தூவி நந்தகோபனைத் துயில் உணர்த்தியவர்கள் அடுத்த படியாக,

கொம்பனுர்க்கு எல்லாம்
கொழுந்தே! குலவிளக்கே!

என்று யசோதைப் பிராட்டிக்குப் புகழுரை கூறி இவளையும் துயிலுணர்த்துகிருர்கள்.

எம்பெருமான் நந்தகோ-
பாலா! எழுந்திராய்

என்றவர்கள்

எம்பெரு மாட்டி
யசோதாய்! அறிவுறுய்

என்று கூறித் துயில் உணர்த்துகிருர்கள் யசோதையை.

இந்த ஆய்ச்சியருக்கோ 'உண்ணும் சோறு, பருகும் நீர், தின்னும் வெற்றிலை எல்லாம் கண்ணன்!' என்றே இருப்பதால்

'எங்களுக்கு அம்பரமும் (ஆடையும்), தண்ணீரும், சோறுமாய் உள்ள கண்ணனை எங்களுக்குத் தந்தருள வேணும்' என்ற பிரார்த்தனையை உள்ளத்தில் கொண்டுதான் 'நந்தகோபாலா! எழுந்திராய்' என்ருர்கள்.

செடிக்கோ மரத்திற்கோ வேரில் ஒரு தீங்கு நேர்ந்தாலும் கொழுந்திலேதான் முதலில் வாட்டம் காணப்படும். அப்படியே பெண்களில் தாழ்ந்த படியில் உள்ளவர்களுக்கு ஒரு கேடு வந்தாலும் யசோதை முகத்தில் வாட்டம் காணப்படுகிறதாம். இத்தகைய 'கொழுந்தே!.........யசோதாய்! அறிவுருய்' என்கிருர்கள். அறிவுருய் என்பதற்குத் துயில் உணர்ந்து எழுந்திராய் என்பது பொருள். எனினும், 'இவள் அறிய அமையும்; பின்பு தங்களுக்கு ஒரு குறை இல்லை என்று இருக்கிருர்கள்' என்பது குறிப்பு.

நந்தகோபனும் யசோதையும் இவர்கள் உள்ளே புகுவதற்கு இசையவே, இவர்கள் மாளிகையின் மூன்ரும் பகுதியில் புகுந்து கண்ணனைத் துயில் உணர்த்துகிருர்கள். கண்ணனை ஏற்கெனவே 'ஓங்கி உலகளந்த உத்தமன்' என்று குறிப்பிட்டவர்கள் இப்போது,

அம்பரம் ஊடுஅறுத்து
    ஓங்கிஉலகு அளந்த
உம்பர்கோ மானே!
    உறங்காது எழுந்திராய்

என்று பள்ளியெழுச்சி பாடுகிருர்கள்.

அப்பால் கண்ணனின் அண்ணனுகிய பலதேவனைச் 'செம் பொற் கழலடிச் செல்வா! பலதேவா!' என்று கூப்பிட்டு எழுப்பு கிருர்கள். கண்ணன் பின்னே பிறக்க முன்னே பிறந்த செல்வன் அல்லவா? லட்சுமணன் இராமனுக்குப் பின்னே பிறந்து கைங்கரியச் செல்வம் பெற்றுச் சீமானுகத் திகழ்ந்ததுபோல், பலதேவன் கண்ணனுக்கு முன்னே பிறந்து கைங்கரியச் செல்வம் பெற்ற சீமானுகப் பொலிந்தான்.

## நால்வரை எழுப்புதல்

அம்பரமே, தண்ணீரே,
    சோறே, அறம்செய்யும்
எம்பெருமான்! நந்தகோ
    பாலா! எழுந்திராய்;
கொம்பனுர்க்கு எல்லாம்
    கொழுந்தே! குலவிளக்கே!
எம்பெரு மாட்டி
    யசோதாய்! அறிவுருய்.

அம்பரம் ஊடுஅறுத்து
ஓங்கிஉலகு அளந்த
உம்பர்கோ மானே!
உறங்காது, எழுந்திராய்.
செம்பொற் கழல்அடிச்
செல்வா! பலதேவா!
உம்பியும் நீயும்
உறங்கேலோர் எம்பாவாய்! (17)

### அரும்பதவுரை

அம்பரமே: ஆடைகளையே. தண்ணீரே: தண்ணீரையே. சோறே: சோற்றையே. அறம் செய்யும் எம்பெருமான்: (திருப்தி அடையும் வரை) அறமாகக் கொடுக்கிற எங்கள் தலைவனே. நந்த கோபாலா: நந்தகோபனே. கொம்பனார்க்கு: பூங்கொம்பு போன்ற எங்களுக்கு. கொழுந்தே: கொழுந்துபோல் இருப்பவளே. குல விளக்கே: புகுந்த குலத்திற்கு மங்கள தீபம்போல் இருப்பவளே. எம்பெருமாட்டி: எமது தலைவியே. அறிவுறாய்: துயில் உணர் வாயாக. அம்பரம் ஊடறுத்து: வானவெளியெல்லாம் இடம் அற்றுப் போகச் செய்து. உம்பர் கோமானே: தேவர்களின் தலைவனே. செம்பொற் கழல் அடிச் செல்வா: செம்பொன்னால் செய்த வீரக்கழல் விளங்கும் அடிகளையுடைய செல்வனாகிய பலதேவனே. உம்பியும் நீயும் உறங்கேல்: உன் தம்பியாகிய கண்ணனும் அண்ணனாகிய நீயும் உறங்காமல் எழுந்திருக்க வேண்டும்.

### விளக்கம்

நந்தகோபனின் கொடைச் சிறப்பைக் கூறி, அத்தகைய வள்ளல் தங்கள் வேண்டுகோளையும் அளிக்க உதவி செய்வான் என்ற குறிப்புடன் பேசுகிறார்கள். பிறகு யசோதையை அழைக்கிறார்கள். பிறகு கண்ணனை அழைக்கிறார்கள். கடைசியாகப் பலதேவனைக் கூவி அழைத்து, அண்ணனும் தம்பியும் உறங்காமல் எழுந்திருந்து அருள் புரிய வேண்டும் என்கிறார்கள்.

'உறங்கேல் ஓர் எம்பாவாய்' என்று இருப்பது தவறு என்றே துணியலாம். 'ஏலோர் எம்பாவாய்' என்ற மகுடத்திற்குப் பொருள் கூறாது இதை அடி நிறைக்க வந்த சொற்றொடராகக் கருதி அல்லவா பாடல்களுக்கெல்லாம் பொருள் கூறி வருகிறோம்? அப்படி இந்தப் பாட்டுக்குப் பொருள் கூறும்போது 'உறங்கு' என்றல்லவா எடுத்துக் கொள்ள வேண்டும்? எனவே, 'உணர்ந்து' என்று இருக்கவேண்டும் என்பர் ஆராய்ச்சிப் பேரறிஞர் திரு. மு. இராகவையங்கார்.

# 18. இராமானுஜர் உகந்த பாசுரம்

இராமானுஜர் துறவி ஆனதால் பல இல்லங்களில் பிட்சை கொண்டு பசியை ஆற்றிக்கொள்வார். பெரியோர் பிட்சைக்குப் போகும்போது வடமொழிச் சுலோகங்களையோ, தமிழ்ப் பாசுரங்களையோ சொல்லிக்கொண்டு போவது வழக்கம். இராமானுஜர் திருப்பாவைப் பாசுரங்களை ஓதிக்கொண்டு பிட்சைக்காக எழுந்தருளுவதுண்டு.

ஒருநாள் பெரிய நம்பி திருமாளிகையை நோக்கிப் போய், திருப்பாவையைப் பாடிக்கொண்டு வாசலில் நின்றார். அப்போது மாளிகையின் கதவு திறந்திருக்கவில்லை. இராமானுஜர் பாசுரம் பாடிக் கொண்டே இருந்தார். அது கேட்டுப் பெரிய நம்பியின் அருமைத் திருமகளான அத்துழாய் உள்ளே யிருந்து வந்து கதவைத் திறந்தாள்.

அவளைக் கண்ட உடனே மூர்ச்சித்து விழுந்தார் இராமானுஜர். அத்துழாய் உள்ளே ஓடிப் போய்த் தந்தையிடம், 'ஐயா, கதவைத் திறந்து சென்றேன்; ஜீயர் என்னைக் கண்டவுடனே காலில் விழுந் தார்! நான் பயந்து உடனே விரைந்து உள்ளே வந்துவிட்டேன்' என்று செய்தி சொன்னாள். ஜீயர் என்று இராமானுஜரைக் குறிப்பது வழக்கம்.

பெரிய நம்பியின் உள்ளத்திலே ஒரு கலக்கமும் ஏற்படவில்லை. அவர் அகமகிழ்ந்து தம் அருமை மகளின் முகம் நோக்கி, 'ஓகோ! "உந்து மதகளிறு" ஓதப் பெற்றிருக்கவேணும்' என்றார். 'உந்து மதகளிறு' என்றதும், 'உந்து மதகளிற்றன்' என்று தொடங்கும் திருப்பாவைப் பாசுரத்தைத்தான் குறிப்பிடுகிறார் தந்தையார் என்பதை உடனே தெரிந்துகொண்டாள் அத்துழாய்.

'எனக்கு நீங்கள் சொல்வது விளங்கவில்லையே; அதற்கும் இதற்கும் என்ன தொடர்பு அப்பா!' என்று கேட்டாள். பெரிய நம்பி சிரித்துக் கொண்டே 'உனக்குத்தான் பாசுரம் முழுவதும் வருமே' என்றார். அத்துழாய் பதில் சொல்லாமல் திகைத்து நின்றாள்; சற்று ஆலோசனையில் ஆழ்ந்தாள். பெரிய நம்பியோ,

உந்து மதகளிற்றன்
ஓடாத தோள்வலியன்
நந்தகோ பாலன்
மருமகளே! நப்பின்னாய்!

என்று மெல்லப் பாடத் தொடங்கினார்.

பளிச்சென்று இருட்டைக் கிழித்துக்கொண்டு மின்னல் எழுந்தது போல் உண்மை புலனாகிவிட்டது அத்துழாயின் உள்ளத்திற்

குள்ளே. 'அப்பா! எனக்குத்தான் என்ன பேதைமை! கண்ணை மறைத்திருந்த திரை விலகிவிட்டது. ஜீயருடைய பக்தி உள்ளத்தைக் கண்ணாடியில் காண்பதுபோல் காண்கிறேன்' என்று சொன்னாள்.

பிறகு பெரிய நம்பியும் அத்துழாயும் இராமாநுஜரின் அரும் பெருங் குணாதிசயம் குறித்தும், திருப்பாவையின் அருமை பெருமைகள் குறித்தும் பேசத் தொடங்கினார்கள். அத்துழாய் தந்தையை நோக்கி,

செந்தா மரைக்கையால்
சீரார் வளையொலிப்ப
வந்து திறவாய்
மகிழ்ந்தேலோர் எம்பாவாய்

என்று, 'உந்து மதகளிற்றன்' பாசுரத்தின் இறுதிப் பகுதியைப் பாடிக் காட்டினாள். 'இதை அவர் பாடியதுதான் தாமதம், நான் பளிச் சென்று வளைகுலுங்கப் போய்க் கதவைத் திறந்துவிட்டேன்' என்று கூறி முடித்தாள்.

அதே சமயம் தம் குருவாகிய பெரிய நம்பியை வணங்குவதற்காக வந்து காத்திருந்த இராமாநுஜர் 'நப்பின்னையைச் சேவிக்கப் பெற்றேன்!' என்று சொல்லிக்கொண்டே வந்து பெரிய நம்பி திருவடிகளில் வணங்கி நின்றார்.

* * *

வாசல் காப்பானையும் நந்தகோபனையும் பலதேவனையும் பற்றுவது போதுமா? கன்னிகையின்றிக் கண்ணாலம் கோடிப்பதுண்டா? எனவே, ஆய்க்குலப் பெண்கள் நப்பின்னையைத் துயிலுணர்த்துகிறார்கள் இந்தப் பாசுரத்திலும். பெருமானைப் பிராட்டி முன்னாகப் பற்றவேண்டு மல்லவா—தாயைக் கொண்டு தந்தையை அறியும் பிள்ளை போல? கிருஷ்ணாவதாரத்தில் பிராட்டியின் நிலையில் இருப்பவள் நப்பின்னை. அவள் அருளால் அவன் தாள் வணங்க வேண்டுமென்று நப்பின்னையை உணர்த்துகிறார்கள் இவர்கள்.

கண்டிப்புள்ள தந்தையைக் கண்டு குழந்தை அஞ்சும்போது, 'அஞ்சவேண்டாம், அப்பாதானே!' என்று அணைத்துக் கொண்டு அபயம் அளிக்கிறது தாயின் கை. அந்த அன்புக் கையின் அணைப்பு ஒரு குழந்தைக்குப் பூவைத் தொடுவது போலத் தோன்றக்கூடு மல்லவா? எனவே தங்களுக்கு அபயமளிக்கும் நப்பின்னைப் பிராட்டியின் கையைச் 'செந்தாமரைக் கை' என்கிறார்கள். இவள் கை பார்த்திருக்கிறவர்களல்லவா இப்பெண்கள்?

'அம்மா! உன் கையில் வளைகுலுங்க, அந்த ஒலியைக் கேட்டு எங்கள் நெஞ்சு குளிரவேணும்' என்கிறார்கள். தாயின் கையைப்

போல் தாயின் கையிலுள்ள வளைகளும் அவற்றின் ஓசையும் குழந்தைக்கு இனிமையானவை தாம். 'உன் வளைக் கையால் நீயே எழுந்து வந்து கதவைத் திறக்கவேணும்' என்கிறார்கள்.

'இந்த வளைகளின் ஓசை கேட்டு, இவர்களுக்கும் திருப்தி ஏற்படும்; கண்ணனும் கண் விழித்துக் கொள்வான்' என்று எதிர் பார்க்கிறார்கள். 'கத்துகிறார்களே, கதவைத் திறப்போம்' என்று திறவாமல், திறந்த உள்ளத்துடன் மகிழ்ந்து திறக்கவேணும் என் கிறார்கள்.

## கைவளை குலுங்க வந்து கதவைத் திற

உந்து மதகளிற்றன்,
    ஓடாத தோள்வலியன்,
நந்தகோ பாலன்
    மருமகளே! நப்பின்னாய்!
கந்தம் கமழும்
    குழலீ! கடைதிறவாய்
வந்துஎங்கும் கோழி
    அழைத்தனகாண்; மாதவிப்
பந்தல்மேல் பல்கால்
    குயில்இனங்கள் கூவினகாண்;
பந்தார் விரலி!உன்
    மைத்துனன் பேர்பாட,
செந்தா மரைக்கையால்
    சீரார் வளைஒலிப்ப
வந்து, திறவாய்
    மகிழ்ந்தேலோர் எம்பாவாய். (18)

### அரும்பதவுரை

உந்து மதகளிற்றன், மதம் உந்து களிற்றன்; மதநீர் பெருகு கின்ற யானையை உடையவன்; அந்த யானை போலப் பலமுள்ள வன் என்றும் பொருள் கொள்ளலாம். ஓடாத: போரில் பின் வாங்காத. நப்பின்னாய்: நப்பின்னையே. கந்தம் கமழும் குழலீ: நல்ல வாசனை வீசுகிற கூந்தலை உடையவளே. கடைதிறவாய்: கதவைத் திறப்பாய். மாதவிப் பந்தல்: குருக்கத்திக் கொடிகளால் ஆகிய பந்தல்; மாதவியை ஒருவகைக் குருக்கத்தி என்பர். பல்கால்: பலமுறை. பந்து ஆர் விரலி: பந்து பொருந்திய கைவிரல்

களை யுடையவளே. மைத்துனன்: (இங்கே) கணவன். சீர்ஆர் வளை: சிறப்புப் பொருந்திய உன் கை வளைகள். ஒலிப்ப: குலுங்கி ஒலிக்கும்படி.

**விளக்கம்**

இந்தப் பாட்டில் கண்ணன் தேவியான நப்பின்னைப் பிராட்டியைத் துயில் எழுப்புகிறார்கள். பிராட்டியை முன்னிட்டு—அதாவது புருஷாகாரமாகக் கொண்டு—பகவானைச் சரணமடைய வேண்டும் என்பது வைணவர் கொள்கை. அம்மையின் அருள் பெற்று அப்பனைச் சரணடைய வேண்டும் என்று சிவநேசர்களும் சொல்வதுண்டு. எனவே, நப்பின்னைப் பிராட்டியைத் துயில் எழுப்பி இவளை முன்னிட்டுக் கண்ணனைச் சரணமடைய விரும்புகிறார்கள் இப் பெண்கள்.

அத்தை மகனை மைத்துனன் என்று கூறுவதுண்டு. மாமன் மகளைக் கலியாணம் செய்து கொள்ளும் முறைமை ஒன்று இருக்கிறதல்லவா? அந்த முறைமை பற்றி நப்பின்னைக்குக் கண்ணன் மைத்துனன் ஆவதாகக் கூறுகிறார்கள். தந்தைக்கு மகள் என்ற பெருமையைக் காட்டிலும் மாமனாருக்கு மருமகள் என்பதையே பெருமையாகக் கொள்ளும் நப்பின்னை, பிறந்தகத்தைக் காட்டிலும் புகுந்த அகத்தையே மதிக்கிறாள் என்பது குறிப்பு.

இது இராமாநுஜர் உகந்த பாசுரம்.

# 19. எளிய பாஷை, அரிய பொருள்

நப்பின்னையை முற்பட எழுந்திருக்கவொட்டாமல் கண்ணன் தடுக்கக்கூடும் என்று கருதும் பெண்கள் கண்ணனை மீண்டும் எழுப்ப முயல்கிறார்கள். நப்பின்னையோ கண்ணனிடம், 'கதவைத் திறக்கவேண்டாம்' என்றுமட்டும் சொல்லவில்லையாம்; 'வாய் திறவாதே' என்றும் சொல்லுகிறாளாம். 'எனவே, கண்ணன் வாய் திறவாமல் இருக்கிறான்' என்று கருதும் பெண்கள், கண்ணனை எழுப்புமாறு மீண்டும் நப்பின்னைப் பிராட்டியை எழுப்பப் பார்க்கிறார்கள்.

இப்படி மீண்டும் நப்பின்னைப் பிராட்டியை உணர்த்துவது கண்ணபிரானை உணர்த்துவதற்கேதான். பிராட்டியும் பெருமாளும் அன்பர்களுக்குக் கருணை புரிவதில் போட்டி யிடுகிறார்கள் என்பது கருத்து. 'இந்த ஆய்ச்சிகள் மிகவும் நொந்தனர் போலும்; இதோ போய்க் கதவைத் திறப்போம்; அல்லது திறப்பதாக ஒரு வார்த்தை சொல்லுவோம்' என்ற முயற்சியில் நப்பின்னைப் பிராட்டியும் கண்ணபிரானும் போட்டியிடுவதாகக் குறிப்பிடுவது, அம்மையப்பனாகிய இறைவன் நமக்கு இரங்கி அருள் புரியும் அதிசய வைபவத்தை வீட்டிலும் நாட்டிலுமுள்ள இல்லற அநுபவத்தைக்கொண்டு சுட்டிக் காட்ட முயல்வதுதான்.

'குத்துவிளக்கு எரிய' என்று தொடங்கும் இப்பாட்டில் லௌகிக அநுபவமும் சமய தத்துவமும் பரிமளிக்கின்றன.

குத்து விளக்குஎரிய,
கோட்டுக்கால் கட்டில்மேல்
மெத்தென்ற பஞ்ச
சயனத்தின் மேல்ஏறி,
கொத்தலர் பூங்குழல்
நப்பின்னை......

என்று வாசித்துக்கொண்டு வரும்போது, 'இதில் என்ன தத்துவத்தைக் காணப்போகிறோம்?' என்றுதான் தோன்றும். ஆனால் 'அம்மையப்பன்' (லட்சுமி நாராயணமூர்த்தி) என்ற கொள்கையின் அடிப்படைத் தத்துவம் இனிது புலனாகின்றது; சிந்திக்கச் சிந்திக்கத் தெவிட்டாத இனிமையுடன் அந்தத் தத்துவம் இங்கே புலனாகக் காண்கிறோம்,

'மலர் மார்பா! வாய் திறவாய்' என்ற சாதாரண வாக்கிலேதான் எத்தகைய பேருண்மையைக் காண்கிறோம்! 'வாய் திறந்து, தத்துவத்தை—இயற்கையின் மர்மமாகிய தனிப் பேருண்மையை—ஒரு வார்த்தை சொல்லி உணர்த்துவார் இல்லையே' என்று அந்தக் குரலை நாடி எத்தனை நல்லறிஞர்கள் அலைந்திருக்கிறார்கள்! வாய் திறந்து பேசவல்ல அந்த மெய்க் குரலைக் குரு மூலமாகவும் கேட்டிருக்கிறார்கள். காந்தியடிகளைப்போல் இறைவன் அந்தராத்மாவாக இருந்து பேசுவதாகவும் உணர்ந்திருக்கிறார்கள்.

பிராட்டி அழகால் இறைவனை வசீகரித்து மக்களிடம் கருணை புரியுமாறு தூண்டுகிறாள், தூண்டியவண்ணமாய் இருக்கிறாள் என்று கூறுவதுண்டு. இத்தகைய பிராட்டியின் பேரழகை இந்தப் பாசுரம்,

கொத்தலர் பூங்குழல்
நப்பின்னை

என்றும்,

மைத்தடங் கண்ணினாய்!

என்றும் குறிப்பிடுகிறது.

பிராட்டி கூந்தல் அழகுள்ளவள்; அந்தக் கூந்தலை மலர்கள் சூட்டி மேலும் அழகு செய்துகொண் டிருக்கிறாள். பிராட்டி மைத் தடங் கண்ணினாள்—அதாவது, மை தீட்டிய விசாலமான கண்களை உடையவள். ஸ்தூலமாகப் பார்க்கும்போது இதுதான் இங்கே பொருள். ஆனால் பிராட்டி நிலையிலுள்ள சூட்சுமமான தத்துவத்தை வேறு எப்படித்தான் உணர்த்திவிட முடியும்?

சாதாரணப் பெண் ஒருத்தியின் இயற்கை அழகையும் செயற்கை அழகையும் நினைவூட்டித்தான் 'பிராட்டி' என்ற தத்துவத்தின் அழ

கையும் சுட்டிக் காட்டவேண்டியிருக்கிறது. இயற்கையாகவே கூந்தலழகி, கண்ணழகி, தன்னைச் செயற்கையாகவும் (கூந்தலில் பூச் சூட்டிக்கொண்டும், கண்களில் மை தீட்டிக்கொண்டும்) அழகு செய்துகொள்வதைச் சாதாரணமாய் நாடெங்கும் பார்க்கிறோம். அன்னையாகிய மகாலட்சுமியும்—உலக அன்னையல்லவா?—தன்னை இயற்கையாகவும் செயற்கையாகவும் அழகு செய்துகொண்டு அப்பனை மோகிப்பித்து மக்களுக்கு அருள் புரிய முற்படுகிறாளாம்.

இவர்களிடையே உள்ள காதல்தான் படைப்பிற்கு அடிப்படை என்று துணிந்து கூறுகிறது இந்து சமயம். இக்கொள்கை வைணவத்திற்கும் சைவத்திற்கும் பொதுவானது.

மைத்தடங் கண்ணினாய்
நீஉன் மணாளனை
எத்தனை போதும்
துயில்எழ ஒட்டாய்காண் !
எத்தனை ஏலும்
பிரிவுஆற்ற கில்லாயால்

என்பதில் பெருமானுக்கும் பிராட்டிக்கும் உள்ள தெய்விகக் காதல் சாதாரண லௌகிக பாஷையில் சுட்டிக் காட்டப்படுகிறது.

'தத்துவம் அன்று தகவு' என்று ஒரு சூத்திரம் செய்து காட்டுவது போல் ஆய்ச்சியர் பேசி முடிக்கிறார்கள். உலக அன்னைக்கு உள்ள கிருபையே அவள் சுபாவம், தகவு. தந்தையின் அருளுக்கு மக்களை இலக்காக்குவது இவள் சொரூபம் அல்லது தத்துவம். இந்தப் பேருண்மை சாதாரண லௌகிக அநுபவம்போல் அமைந்திருக்கும் இப்பாட்டின் தத்துவ சிகரம்.

## கதவு திறக்காவிட்டாலும் வாய் திறக்கலாகாதா?

குத்து விளக்குஎரியக்
கோட்டுக்கால் கட்டில்மேல்
மெத்தென்ற பஞ்ச
சயனத்தின் மேல்ஏறி,
கொத்தலர் பூங்குழல்
நப்பின்னை கொங்கைமேல்
வைத்துக் கிடந்த
மலர்மார்பா! வாய்திறவாய்!

மைத்தடங் கண்ணினாய்!
நீஉன் மணாளனை
எத்தனை போதும்
துயில்எழ ஒட்டாய்காண்!
எத்தனை ஏலும்
பிரிவுஆற்ற கில்லாயால்;
தத்துவம் அன்று
தகவேலோர் எம்பாவாய். (19)

அரும்பதவுரை

கோட்டுக்கால்: 'கோடு' என்று சொல்லப்படும் யானைத் தந்தத்தால் செய்த கால்கள். பஞ்ச சயனம்: பஞ்சினால் ஆகிய மெத்தை; பஞ்சு மெத்தை; பஞ்சு, பட்டு, மென்மையான கம்பளம், மலர், தளிர் என்ற ஐந்து பொருள்களால் செய்த படுக்கை என்றும் கூறுவர். அழகு, குளிர்ச்சி, மென்மை, பரிமளம், வெண்மை என்ற ஐந்து அம்சங்களையுடைய படுக்கை என்றும் கூறுவதுண்டு. கொத்து அலர் பூங்குழல்: கொத்துக் கொத்தாக மலர்ந்திருக்கும் பூக்களை அணிந்துகொண்டிருக்கும் அழகிய கூந்தல். மலர் மார்பா: அகன்ற மார்பை உடையவனே. மைத்தடங் கண்ணினாய்: மை தீட்டிய விசாலமான கண்களை உடையவளே. எத்தனை போதும்: எவ்வளவு நாழிகை ஆனாலும். ஒட்டாய்காண்: சம்மதியாமல் இருக்கிறாய். எத்தனையேலும்: ஒரு கண நேரமும். பிரிவு ஆற்ற கில்லாய்: பிரிந்து இருப்பதைப் பொறுத்துக்கொள்ளும் வல்லமை அற்றவளாக இருக்கிறாய். தத்துவம் அன்று தகவு: உண்மையாக இது உனக்குத் தகுதியன்று. 'இது உண்மையாக இருந்தபோதிலும் நீ இப்படி இருப்பது 'உனக்குத் தகுதியன்று' என்றும் பொருள் கொள்ளலாம். அப்படியானால் 'தத்துவம்; அன்று தகவு' என்று இடையே குறியீடு அமைத்துக்கொள்ள வேண்டும்.

விளக்கம்

'தத்துவம் அன்று தகவு' என்பதற்கு, 'தத்துவம் அன்று, தகவு அன்று' என்றும் பொருள் கொள்ளலாம். 'இப்படிச் செய்வது உன் தத்துவத்திற்கும்—அதாவது உன் சொரூபத்திற்கும்—ஒத்ததில்லை; உன் தகவு, அல்லது சுபாவத்திற்கும், ஒத்ததில்லை' என்பது உத்தமமான பொருள். வாயைத் திறந்து எங்களுக்கு ஆறுதலாக ஒரு வார்த்தையாவது சொல்லவேண்டும் என்று பிரார்த்திக்கிறார்கள்.

# 20. இப்போதே அருள்புரிவாய்

மூந்திய பாட்டிலே, 'தத்துவம் அன்று தகவு' என்ற சூத்திரம் ஒரு தத்துவ சிகரத்தைச் சுட்டிக் காட்டியபோதிலும், ஆயர் மங்கையர் தங்கள் வருத்தம் தோன்றச் சொன்ன வார்த்தைதானே. எனவே நப்பின்னை பேசாமல் கிடக்கிறுளாம். ஆய்ச்சியர் வருந்தச் சொன்ன வார்த்தையால் நப்பின்னைக்கு வருத்தமோ கோபமோ ஏற்பட்டதாகக் கருதவேண்டியதில்லை. பெருமானுடைய திருவுள்ளம் அறிந்து ஆய்ச்சியர் குறைகளை விண்ணப்பித்துக்கொள்வோம் என்று நினைத்துப் பேசாமலே இருந்தாள் எனக் கருதலாம்.

ஆய்ச்சியரோ, 'பிராட்டிக்கும் சீற்றமோ?' என்று மயங்குகிறுர்கள். கண்ணபிரானும் கோபமாய் இருக்கக்கூடுமோ என்று கலங்குகிறுர்கள். இந்த நிலையை 'அதிசங்கை' என்று கூறுவதுண்டு.

இந்த நிலையில், கண்ணனையாவது எழுப்பிப் பார்ப்போம் என்று நினைக்கிறுர்கள். கண்ணனுடைய அருமை பெருமைகளை விரிவாகப் பேசிப் பார்ப்போம் எனத் துணிகிறுர்கள்.

முப்பத்து மூவர்
அமரர்க்கு முன்சென்று
கப்பம் தவிர்க்கும்
கலியே!

என்று கண்ணனை முதல் முதல் கூவி அழைக்கிறுர்கள். தேவர்களின் நடுக்கத்தைத் தீர்ப்பவன் அடியவர்களின் கலக்கத்தைத் தீர்க்க முற்பட வேண்டாமா என்பது குறிப்பு.

இப்படிப் புகழ்ந்தபின், 'செப்பம் உடையாய்' என்று அழைக்கிறுர்கள். முதலில் கண்ணனைக் கலி (மிடுக்கன்) என்று சொன்னவர்கள், 'நேர்மையுள்ளவன்' என்று இப்போது கூறுகிறுர்கள். மிடுக்கு நேர்மையான வழியில் போகாவிட்டால் துடுக்கு. இங்கே 'திறல் உடையாய்!' என்று மறுபடியும் கூறி அடியவரைக் காக்க வல்லமை உள்ளவன் கண்ணன் என்பதை வற்புறுத்துகிறுர்கள்.

அன்பர்களுக்கு இன்பம் கொடுக்கும் வல்லமை உள்ளவன் பகைவர்களுக்கு வெப்பம் கொடுப்பவனுகவும் இருக்கிறுனும். 'செற்ருர்க்கு வெப்பம் கொடுக்கும் விமலா!' என்கிறுர்கள். கடவுளுக்கும் பகைவர் உண்டா? அடியவர்களின் பகைவர்களே ஆண்டவனுக்குப் பகைவர். அடியவரோ ஒருவரையும் தங்கள் பகைவர் என்று நினைத்துப் பார்ப்பதில்லை; 'உலகைக் கெடுக்கிறுர்களே ஆண்டவன் பகைவர்கள்' என்றுதான் எண்ணுகிறுர்கள். குளிர்ந்த அருளையுடைய கடவுள் இத்தகைய பகைவர்களுக்கு வெப்பம் கொடுக்கிறுனும்.

உண்மையில், வெப்பம் இங்கே இல்லை, பகைவனது பகைமை யுள்ளத்திலிருந்து புகைந்தெழும் நெருப்பேதான்!

எனவே 'வெப்பம் கொடுக்கும் விமலா' என்று அழைக்கிறார்கள். பகைவர்கள் வெப்பத்தை அடைவதால் அன்புக் கடவுளுக்கு ஒரு குற்றமும் இல்லையாம். இத்தகைய கண்ணன் துயில் எழுந்து அருள் புரிய வேணும் என்கிறார்கள்.

விமலா! துயில்எழாய்

என்று கள்ளங் கவடற்ற நெஞ்சிலிருந்து வருகிறது வாக்கு.

இப்படியெல்லாம் புகழ்ந்து கண்ணனைத் துயில் எழுப்பியும் 'அவன் வாய்திறந்து ஒரு பேச்சுப் பேசவும் வல்லமையற்றுக் கிடக்கிறானே, இது என்ன அதிசயம்!' என்று எண்ண மிடுகிறார்கள் ஆய்ச்சியர். 'நப்பின்னையை நாம் வெறுத்துக் கூறவே அதற்காகக் கண்ணன் ஒருகால் ரோஷம் கொண்டு சும்மா கிடக்கிறானோ?' என்று ஐயுறுகின்றனர். இந்த நிலையில், 'பிராட்டியைப் புகழ்ந்து கோபம் தணிவித்து அவள் மூலமாகவே நம் இஷ்டத்தைப் பெறுவோம்' என்று தீர்மானிக்கிறார்கள்.

இந்தத் தீர்மானத்தின் விளைவாகப் பிராட்டியைத் துயில் எழுப்புவது இப் பாசுரத்தின் பிற்பகுதியாக அமைந்திருக்கிறது. பிராட்டியின் பேரழகை வருணிக்கிறார்கள். பெருமானிடம் 'சிபார்சு' செய்யக் கூடிய இவள் வாயைச் 'செவ்வாய்' (சிவந்த வாய்) என்று குறிப்பிடுகிறார்கள். அன்பர்களின் குறைகளை அப்பனிடம் விண்ணப்பம் செய்துகொள்ளத் துடித்துக் கொண்டிருக்கும் வாயல்லவா?

'பெண்களில் சிறந்தவள் நீயே; மகாலட்சுமியும் நீயே!' என்கிறார்கள் இந்த ஆய்ச்சியர், நப்பின்னையை நோக்கி.

நப்பின்னை நங்காய்!
திருவே! துயில்எழாய்

என்று பள்ளியெழுச்சி பாடுகிறார்கள்.

இப்போது நப்பின்னை சொல்லுகிறாளாம்: 'சிறுமியர்களே! நான் உறங்குகிறேனா, என்ன? கண்ணபிரானால் நீங்கள் அடையவேண்டிய பாக்கியத்தைக் குறித்தல்லவா நினைத்துக் கொண்டிருக்கிறேன்? நான் எழுந்து செய்ய வேண்டியது என்ன? உங்கள் வாயால் சொல்லுங்கள்.' இப்படி நப்பின்னை கேட்டதாக வைத்துக்கொண்டு சிறுமியர்கள், 'நோன்பிற்கு வேண்டிய உபகரணங்களையெல்லாம் தரவேணும்' என்கிறார்கள். விசிறி, கண்ணாடி முதலான நோன்பிற்கு உரிய கருவிகளை (சாதனங்களை)த் தந்தால்போதுமா? 'உன் மணாளனையும், எங்களையும் மார்கழி நீர் ஆட்டுவிக்க வேணும்' என்கிறார்கள்.

இப்போதே எம்மைநீர்
ஆட்டேலோர் எம்பாவாய்

என்று முடிகிறது பாட்டு.

'இப்போதே' என்று இவர்கள் கூறுவது கவனிக்கத் தக்கது. நன்றே செய்யவும் வேண்டும், அதுவும் இன்றே, இப்போதே. செய்யவும் வேண்டுமல்லவா?

## உன் தத்துவமும் தகவுமே எங்களுக்கு அரண்!

முப்பத்து மூவர்
அமரர்க்கு முன்சென்று,
கப்பம் தவிர்க்கும்
கலியே! துயில்எழாய்.
செப்பம் உடையாய்!
திறல்உடையாய்! செற்றார்க்கு
வெப்பம் கொடுக்கும்
விமலா! துயில்எழாய்.
செப்பன்ன மென்முலை,
செவ்வாய், சிறுமருங்குல்
நப்பின்னை நங்காய்!
திருவே! துயில்எழாய்
உக்கமும் தட்டொளியும்
தந்துஉன் மணாளனை
இப்போதே எம்மைநீர்
ஆட்டேலோர் எம்பாவாய். (20)

### அரும்பதவுரை

முப்பத்து மூவர் அமரர்: முப்பத்து மூன்று பேரை முக்கிய மானவராக உடைய தேவர்கள். கப்பம்: (இங்கே) நடுக்கம். கலியே: மிடுக்கு உடைய அண்ணலே. செப்பம் உடையாய்: செம்மை அல்லது நேர்மை உடையவனே. திறல் உடையாய்: திறமை உடையவனே. செற்றார்: பகைவர். வெப்பம்: அச்சமாகிய சுரநோய். விமலா: மலம் அல்லது குற்றம் இல்லாதவனே. சிறு மருங்குல்: நுண்ணிய இடை. திருவே: லட்சுமி போன்றவளே. உக்கம்: ஆலவட்டம்; விசிறி. தட்டொளி: கண்ணாடி.

### விளக்கம்

'தத்துவம் அன்று தகவு' என்று முந்திய பாட்டில் சற்றுக் கடுமை யாகக் கூறிவிட்டோமே என்று கருதியவர்களைப்போல், நின்று

கொண்டிருக்கும் சிறுமியர்கள் கண்ணனையே எழுப்பிப் பார்ப்போம் என்று தீர்மானிக்கிறார்கள். தாங்கள் தங்கள் வருத்தம் தோன்றப் பேசியது நப்பின்னைப் பிராட்டிக்கு வருத்தத்தைக் கொடுத்திருக்குமோ என்று நினைக்கிறார்கள். அதனால்தான் கதவைத் திறவாமலும் வாய் திறவாமலும் இருக்கிறார்கள் என்றுகூட எண்ணமிடுகிறார்கள்.

இந்த நினைப்புடன் கண்ணனை எழுப்பிப் பார்த்தும், அவனும் வாய் திறக்கவில்லை. நப்பின்னையைப் பற்றி இவர்கள் வருந்திக் கூறியது கண்ணனுக்கும் வருத்தம் கொடுத்திருக்கலாமோ என்று நினைக்கிறார்கள். எனவே மறுபடியும் நப்பின்னைப் பிராட்டியைப் புகழ்ந்து தோத்திரம் செய்கிறார்கள். இவள் அழகையும் ஆத்ம குணங்களையும் பாராட்டுகிறார்கள், 'அம்மா! நீயே எங்கள் விருப்பத்தை நிறைவேற்றியருள வேண்டும்' என்று வேண்டிக் கொள்கிறார்கள் இந்தப் பாசுரத்திலே.

# 21. தோற்றவர் பேறு!

நப்பின்னையைத் துயில் உணர்த்தியபின், அவள் எழுந்து வந்து 'தோழிகளே' என்று இவர்களைப் பேரன்புடன் அழைக்கிறாள். 'நானும் உங்களில் ஒருத்தி அன்றோ?' என்கிறாள். 'நீங்கள் கொஞ்சமும் வருந்தவேண்டாம்; நான் உங்களுக்கு உதவி செய்ய எப்போதும் சித்தமாகவே இருக்கிறேன்' என்கிறாள். கடைசியாக, 'நாம் எல்லாரும் கூடிக் கண்ணபிரானை வேண்டிக் கொள்வோம், வாருங்கள்' என்று சொல்லுகிறாள்.

பிறகு நப்பின்னைப் பிராட்டி உள்ளிட்ட அனைவரும் ஒரு முகமாய்க் கூடிக் கண்ணபிரானுடைய வீரம் பாடி அவனைத் துயில் உணர்த்துகிறார்கள் என்பது இப் பாசுரத்தின் அமைப்பு முறை.

கண்ணனுடைய வீரத்தைப் புகழ்வதற்கு முன் கண்ணன் தந்தையாகிய நந்தகோபனின் செல்வத்தைப் புகழ்கிறார்கள்.—பசுச் செல்வத்தைத்தான், பால் வளத்தைத்தான். ஏற்கெனவே நந்த கோபனின் அறப் பற்றைப் பாராட்டிவிட்டார்கள், தோள் வலியையும் பேசிவிட்டார்கள். இந்தப் பாசுரத்திலே அவனுடைய கறவைச் செல்வம்தான் எவ்வளவு வசீகரமாய் வருணிக்கப் படுகிறது பாருங்கள்:

ஏற்ற கலங்கள்
எதிர்பொங்கிமீது அளிப்ப,
மாற்றாதே பால்சொரியும்
வள்ளல் பெரும்பசுக்கள்
ஆற்றப் படைத்தான்.

கலம் இடுவார் குறையே அன்றி, பசுக்கள் இட்ட கலங்களை நிறைக்கத் தட்டில்லை என்கிறார்கள். சிறிய கலம் பெரிய கலம் என்ற வேற்றுமையின்றி எந்தக் கலத்தையும் நிறைத்து விடுகிறதாம் நந்த கோபனின் பசு. மாற்றாதே பால் சொரியும் பெரும் பசுக்கள் என் கிறார்கள். 'இட்ட கலங்கள் நிரம்பின; இனிக் கலம் இடுவார் இல்லை' என்பது குறிப்பு.

ஏற்கெனவே, 'வாங்கக் குடம் நிறைக்கும் வள்ளல் பெரும் பசுக்கள்' என்கிறார்கள். இப்போதோ, 'எதிர் பொங்கி மீதளிப்ப மாற்றாதே பால் சொரியும் வள்ளல் பெரும் பசுக்கள்' என்கிறார்கள். கலம் நிறைந்து எதிராகப் பொங்கி மேலே வழியும் படியாக இடை விடாமல் பாலைச் சொரிகின்ற பசு இங்கே நல்லாசிரியருக்கும் அறிகுறி. ஏற்ற கலங்கள் உபதேசத்திற்குப் பாத்திரமான உத்தம சீடர்களுக்கும் அறிகுறி ஏற்ற கலங்கள் நிறைந்து எதிர் பொங்குவது போல், சீடர்களும் நிறைந்த ஞானம் பெற்று ஆசாரியனுக்கும் யுக்தி-உபதேசம் செய்ய வல்லவர் ஆகிறார்களாம்.

பெரும் பசுக்களாகிய செல்வத்தைச் சிறப்பாகப் படைத்திருக்கும் நந்தகோபன் மகன் கண்ணன் என்பதை முதல் பெருமையாகக் குறிப்பிட்ட பின்பே இந்த மகனுடைய பெருமையைப் பேசுகிறார்கள்.

*மகனே! அறிவுறாய்*

என்று சொன்ன பின்பே அடியவரைக் காப்பதில் கண்ணனுக்கு உள்ள ஊற்றம் அல்லது சிரத்தையைப் பேசுகிறார்கள்.

*ஊற்றம் உடையாய்!*
*பெரியாய்!*

என்கிறார்கள். அன்பர்களைக் காக்க வல்ல ஆண்டவன் தானே உண்மையிற் பெரியவன்?

பிறகு கண்ணனை 'உலகினில் தோற்றமாய் நின்ற சுடரே!' என்று அழைக்கிறார்கள். 'இருள் தரு மாஞாலம்' என்று சொல்லப்படும் இந்த உலகத்திலே இறங்கி வந்திருக்கும் ஜோதி கண்ணன் என்பது குறிப்பு.

*தோற்றமாய் நின்ற*
*சுடரே! துயில்எழாய்*

என்று பள்ளியெழுச்சி பாடுகிறார்கள்.

கடைசியாக, தாங்கள் கண்ணபிரான் திருவடிகளைப் போற்ற வந்திருப்பதைத் தெரிவிக்கிறார்கள். எப்படி அடிபணிந்து போற்றி வந்திருக்கிறார்கள் என்பதையும் விரித்து உரைக்கிறார்கள். கதியற்ற வர்களாக வந்திருக்கிறோம் என்கிறார்கள். 'உன்னைத் தவிர வேறு கதி இல்லை எங்களுக்கு என்று சரணாகதி பண்ணிக் கிடக்க வந்திருக் கிறோம்' என்கிறார்கள்:

தங்கள் சரணுகதிக்கு இவர்கள் இப்போது காட்டும் உபமானம் இங்கே கூர்ந்து சிந்திக்கத் தக்கது.

மாற்ருர் உனக்கு
வலிதொலைந்து, உன் வர்சற்கண்
ஆற்ருது வந்துஉன்
அடிபணியு மாபோலே
போற்றி,யாம் வந்தோம்
புகழ்ந்து

என்கிருர்கள்.

பகைவர்கள் வலிமை ஒழிந்து—அதாவது, கண்ணனுக்குத் தோற்று—கதியற்றவர்களாய்க் கண்ணன் வாசலில் வந்து அடிபணிவதுபோல், இவர்களும் சரணுகதி செய்ய வந்திருக்கிருர்களாம். இராமனைக் காகாசுரன் சரணமடைந்த கதையை இங்கே நினைவூட்டிக் கொள்ளலாம். 'எத்திசையும் உழன்று ஓடி எங்கும் புகலற்று இளைத்து விழுந்த காகம்' என்று காகாசுரனைக் குறிப்பிடுவதுண்டு. 'அப்படி நாங்களும் சரணுகதி செய்ய வந்தோம்' என்கிருர்கள்.

மாற்ருர் தோற்று வந்தார்; இவர்களுக்கு என்ன தோல்வி? கண்ணனுடைய அழகிற்கும் அழகிய குணங்களுக்கும் தோற்றவர்களாய் ஆற்ருது வந்திருக்கிருர்களாம் இவர்கள்.

## ஆற்ருது அடிபணிய வந்தோம்

ஏற்ற கலங்கள்
எதிர்பொங்கி மீது அளிப்ப
மாற்ருதே பால்சொரியும்
வள்ளற் பெரும்பசுக்கள்
ஆற்றப் படைத்தான்
மகனே! அறிவுருய்.
ஊற்றம் உடையாய்!
பெரியாய்! உலகினில்
தோற்றமாய் நின்ற
சுடரே! துயில்எழாய்.
மாற்ருர் உனக்கு
வலிதொலைந்து,உன் வர்சற்கண்
ஆற்ருது வந்துஉன்
அடிபணியு மாபோலே,
போற்றி,யாம் வந்தோம்
புகழ்ந்தேலோர் எம்பர்வாய். (21)

### அரும்பதவுரை

ஏற்ற கலங்கள்: (கறந்த பாலை) ஏற்றுக்கொள்ளும் பாத்திரங்கள். மீது எதிர் பொங்கி: நிறைந்து மேலே எதிராகப் பொங்கி. அளிப்ப: மடுவுக்கே கொடுப்பதுபோல் பொங்கி எழ. மாற்றுதே: இடைவிடாமல். ஆற்றப் படைத்தான்: மிகுதியாக உடையவன்; (இங்கே) நந்தகோபன். அறிவுறாய்: துயில் உணர்ந்து எழுந்திருப்பாய். ஊற்றம்: அடியவர்களைக் காப்பதில் ஊன்றி நிற்கும் சிரத்தை அல்லது திண்மை. பெரியாய்: பெரியவனே. உலகினில் தோற்றமாய்: உலகிலே அவதரித்தவனாய். நின்ற சுடரே: நிலைபெற்றிருக்கும் சுடர்ச் சோதியே. வாசற்கண்: வாசலில். ஆற்றாது வந்து: கதியற்று வந்து. பணியுமாபோலே: பணியும் விதம் போல. போற்றி: உன்னைப் போற்றிய வண்ணம்.

### விளக்கம்

கண்ணனுடைய வலிமைக்குத் தோற்ற பகைவர்களும் உண்டு; குணங்களுக்குத் தோற்ற அன்பர்களும் உண்டு. வலிமைக்குத் தோற்றவர்கள் காலில் விழுவதுபோல் குணத்திற்குத் தோற்றவர்களும் காலில் விழுகிறார்கள்; சரணாகதி செய்கிறார்கள். எப்படியும் சரணாகதி செய்வது பாக்கியம்தான். குணத்திற்குத் தோற்றுச் சரணாகதி செய்வது பெரும் பேறு. இந்த நிலையில் வந்திருக்கிறார்கள் இப்பெண்கள்.

இப்பாட்டில் வரும் வள்ளற் பெரும் பசுக்கள் ஞானாசிரியனை நினைவூட்டுகின்றன. 'ஏற்ற கலங்கள் எதிர்பொங்கி மீதளிப்ப' என்பது உபதேசத்திற்குப் பாத்திரமாக வந்தவர்கள் குருவுக்கும் யுக்தி சொல்ல வல்லவர் ஆகிறார்கள் என்பதை நினைவூட்டி, மெய்யறிவின் தனிப் பெருஞ் சிறப்பை உணர்த்துகிறது.

'உலகினில் தோற்றமாய் நின்ற சுடர்' என்பதில் 'பல பிறப்பாய் ஒளிவரு முழுநலம்' கடவுளுக்கு உரியது என்ற பேருண்மையைக் காண்கிறோம்.

## 22. குறைகளுக்கு மூடிக் கூக்குரலுக்குத் திறவாய்!

'வேறு போக்கு இல்லாது வந்து சேர்ந்தோம்' என்று ஆய்ச்சியர் முந்திய பாட்டில் கூறினார்கள். கண்ணன் 'இன்னமும் இவர்களைச் சோதிப்போம்' என்று பேசாமல் கிடக்கிறான். அது கண்ட ஆய்ச்சியர், 'எம்பெருமானே! எங்களுக்கு நீ புகல் ஆகாது இருந்துவிட்டாலும் நாங்கள் வேறொரு புகலைத் தேடி ஓடப் போவதில்லை; அடிபணிந்த எங்களைக் கடாட்சிக்க வேணும்' என்று பிரார்த்திக்கிறார்கள் இப்பாசுரத்திலே.

நாம் சாதாரணமாக 'என் வீடு, என் பொருள், என் பூமி' என்றெல்லாம் அபிமானம் கொண்டு பேசுகிறோம். இத்தகைய அபிமானம் அரசர்களுக்கு அதிகமாகத்தானே இருக்கும்? 'என் இராச்சியம், என் பூமி' என்ற அகங்காரத்தால் பெரிய பெரிய போர்கள் எல்லாம் அரசர்களால் நடத்தப்பட்டிருக்கின்றன. பெருங் கொடை வள்ளலான மகாபலியும் 'வாமனன் மண் இது!' என்று தெரிந்து கொள்ளாமல் வாமனனுக்கே நிலத்தைத் தானம் கொடுப்பதாக நினைத்துவிட்டான் அல்லவா?

இத்தகைய அபிமானம் போய் அரசர்களுக்கு அபிமான பங்கம் (அகப்பற்று, புறப்பற்றுக்களின் நீக்கம்) வந்துவிட்டால் அவர்கள் எப்படி நடந்துகொள்ளக்கூடும்? 'ஒரு நாயகமாய் உலகை ஆண்டோம்!' என்று இருந்தவர்கள் நாடு காணப் பிச்சை எடுப்பதும் உண்டு என்றார் நம்மாழ்வார். அவர்களும் அபிமான பங்கம் ஆனவர்கள். அத்தகைய அரசர்கள் வைராக்கியம் உற்றுக் கடவுளையே சரணமாக அடையவும் கூடுமல்லவா?

வறுமையும் கஷ்டமும் செல்வ நஷ்டமும் தத்துவ ஞானம் தலையெடுப்பதற்குக் காரணமாகவும் கூடும்; 'ஆண்டவனே நமக்குப் புகல்; செல்வமல்ல, பதவி அல்ல, புகழ் அல்ல' என்று மனம் திருந்துவதற்கும் திரும்புவதற்கும் காரணமாவதையும் கண்டுகொள்ளலாம். இந்த நிலையை அடைந்த அரசர்கள் அபிமான பங்கமாகி வந்து, கண்ணன் ஏகாந்தமாக எழுந்தருளியிருக்கும் இடத்திலும் வந்து கிடப்பார்களாம். இதை ஆய்ச்சியர் கேள்விப்பட்டிருக்க வேண்டும்; பார்த்தும் இருக்கலாம்.

'எவ்வளவு அழகான், விஸ்தாரமான, பூமியை ஆண்டு கொண்டு வணங்காமுடியராக இருந்தார்கள்! அத்தகைய அரசர் அபிமான பங்கமாய் வந்து கண்ணன் பள்ளிகொண்டிருக்கிற கட்டிலண்டை உட்கார்ந்திருக்கிறார்களே; கீழே உட்கார்ந்திருக்கிறார்களே; திரள்திரளாக உட்கார்ந்திருக்கிறார்களே!' என்று கண்ணாரக் கண்டு அதிசயிப்பதுபோல் ஆய்ச்சியர்கள் பேசுகிறார்கள்:

அங்கண்மா ஞாலத்து
அரசர் அபிமான
பங்கமாய் வந்து, நின்
பள்ளிக்கட் டிற்கீழே
சங்கம் இருப்பார்போல்,
வந்து தலைப்பெய்தோம்.

'அந்த அரசர்களைப் போல் நாங்களும் தோற்று வந்தவர்கள்!' என்கிறார்கள். 'இராச்சியத்தையும் இழந்து வந்தவர்கள் நாங்கள்!' என்கிறார்கள். 'அவர்கள் எதிரிகளுக்குத் தோற்று வந்தார்கள்; நாங்களோ உன் குணங்களுக்கே தோற்று வந்தோம்; எங்களுடைய

அகங்கார இராச்சியத்தை இழந்து வந்தோம்!' என்கிறார்கள். 'இந்த நிலையில் நாங்களும் உன்னைக் கிட்டப் பெற்றோம்' என்கிறார்கள்.

அது கேட்ட கண்ணபிரான், 'பெண்களே! இனி ஒரு குறையும் இல்லையே?' என்று கேட்கக்கூடுமல்லவா? அதற்கும் இவர்கள் பதில் சொல்லுகிறார்கள். 'உன்னுடைய கடாட்சம் பெறவேண்டாமா? அதற்குத்தானே வந்திருக்கிறோம்' என்கிறார்கள்.

இந்தக் கடாட்சத்தைக் குறித்துப் பேசுவதுதான் இந்தப் பாசுரத்தின் பெரும் பகுதியும். கண்ணனுடைய கண்கள் உள்ளே இருக்கும் அன்பு தோன்றுமாறு சிறிது சிறிதாகத் தங்கள் மேல் விழித்துப் பார்க்கவேணும் என்கிறார்கள். இப்படி ஏன் பார்க்கவேணும்? பூரண கடாட்சம் வேண்டும் என்று உடனே தெரிவித்துக் கொள்ளாததற்குக் காரணம்தான் என்ன?

முதல் முதல் இருட்டிலிருந்து வந்தவன்முன்னே பேரொளியை வீசினால் கண்கூசிப் போகுமல்லவா? இப்பெண்களும், 'முதலிலேயே பூரண கடாட்சம் செய்துவிட்டால் தாங்கமுடியாதே!' என்கிறார்கள். நாங்கள் பொறுக்கப் பொறுக்கக் கடாட்சித்து அருளவேணும் என்கிறார்கள். 'சிறுச் சிறிதே' என்று இவர்கள் கூறுவது கூர்ந்து கவனிக்கத் தக்கது.

குற்றங் குறைகளை நினைத்துப் பாதி மூடியிருக்க வேணுமாம் கண்கள்; கூக்குரலைக் கேட்டுப் பாதி திறந்தும் இருக்க வேணுமாம்.

செங்கண் சிறுச்சிறிதே
எம்மேல் விழியாவோ?

என்கிறார்கள்.

இப்படிக் கடாட்சிக்க வேணும் என்பதற்கு ஓர் உபமானமும் காட்டுகிறார்கள். 'கிங்கிணிவாய்ச் செய்த தாமரைப் பூப்போல' என்பது இவர்கள் வாக்கு. வாய்ப்பக்கம் கொஞ்சம் திறந்த ஒரு வகைச் சதங்கை இங்கே கிங்கிணி என்று குறிக்கப்படுகிறது.

இரண்டு கண்களுக்கும் சந்திர சூரியர்களை உபமானமாகவும் காட்டுகிறார்கள். சூரியன் உதிக்கத் தாமரை மலரத் தொடங்குமல்லவா? சந்திரன் உதித்தால் மூடிக்கொள்ளுமல்லவா? ஏககாலத்தில் இரண்டும் உதித்தால் தாமரை மலர் பாதி மூடியும் பாதி திறந்தும் இருக்குமென்று கற்பனை செய்து கொள்கிறார்கள். அப்படி இரண்டு கண்களாலும் கண்ணன் கடாட்சிக்க வேணும் என்கிறார்கள்.

## அன்பிற்குத் தோற்று அன்பனுக்குப் பணி புரிவது

அங்கண்மா ஞாலத்து
அரசர், அபிமான
பங்கமாய் வந்து, நின்
பள்ளிக்கட் டிற்கீழே
சங்கம் இருப்பார்போல்,
வந்து தலைப்பெய்தோம்.
கிங்கிணி வாய்ச்செய்த
தாமரைப் பூப்போல,
செங்கண் சிறுச்சிறிதே
எம்மேல் விழியாவோ?
திங்களும் ஆதித்
தியனும் எழுந்தாற்போல்,
அங்கண் இரண்டும்கொண்டு
எங்கள்மேல் நோக்குதியேல்,
எங்கள்மேல் சாபம்
இழிந்தேலோர் எம்பாவாய். (22)

### அரும்பதவுரை

அங்கண்மா ஞாலத்து: அழகிய இடமுடைய பெரிய பூமியில் உள்ள. அபிமான பங்கமாய்: இந்த உலகம் நம்முடையது என்ற அபிமானம் நீங்கப் பெற்றவர்களாய். நின் பள்ளிக் கட்டிற் கீழே: நீ பள்ளிகொண்டிருக்கும் கட்டிலின்கீழ் அதற்கு அருகில். சங்கம் இருப்பார்போல்: கூட்டமாக இருப்பதுபோல். வந்து தலைப்பெய் தோம்: நாங்களும் உன் குணங்களில் ஈடுபட்டு எங்கள் சொந்த அபிமானம் நீங்கியவர்களாய் வந்து உன்னைக் கிட்டப் பெற்றோம். கிங்கிணிவாய்ச் செய்த: கிங்கிணியின் வாய்போல் சிறிதே மலர்ந்த. செங்கண் சிறுச் சிறிதே: உன்னுடைய செம்மையான கண்கள் சிறிது சிறிதாக. எம்மேல்: எங்கள் மேலே. விழியாவோ: விழித்தல் ஆகாதோ? திங்களும் ஆதித்தியனும்: சந்திரனும் சூரியனும். எழுந் தாற்போல்: ஒருசேர உதித்ததுபோல. அங்கண் இரண்டும்: அழகிய கண்கள் இரண்டையும். நோக்குதி: நோக்குவாயாக. நோக்குதியேல் என்பதற்கு, 'கடாட்சிப்பாயாகில்' என்றும் பொருள் கொள்வதுண்டு. எங்கள்மேல் சாபம்: எங்களிடத்தில் உள்ள பாபம். இழிந்து: கழிந்து.

விளக்கம்

எதிரிகளுக்குத் தோற்று 'இராச்சியம் நம்முடையது' என்ற புறப் பற்று நீங்கி இறைவனைச் சரணமாக அடையவும் கூடும்; 'அப்படியே நாங்களும் உன் அன்பு முதலான குணங்களுக்குத் தோற்று எங்கள் அபிமானம் தொலைந்து உன்னிடம் அந்தரங்கமாக வந்துவிட்டோம்' என்கிறார்கள். கண்ணனோடு எதிர்த்துத் தோற்ற எதிரிகளில் சரண மாக அடைந்தவர்களை இந்தப் பாட்டின் முற்பகுதி குறிப்பிடுகிறது என்றும் கருதலாம்.

அம்புக்குத் தோற்றவர்கள் வேறு போக்கு இல்லாமல் சரண மடைவதுபோல், அன்பிற்குத் தோற்றவர்கள் அன்பனுக்குப் பணி செய்யச் சித்தமாகிறார்கள்.

# 23. சிங்கப் பாட்டு

மழைக்காலம். மலைக் குகையிலே படுத்துக் கிடக்கிறது சிங்கம். உறங்கிக் கொண்டிருக்கிறது. சிங்கம் இருக்கும் குகை என்றால் எந்தப் பிராணிதான் அங்கே வரத் துணியும்? ஆனால் சிங்கமோ யானைகள் வந்து பிளிறினாலும் அந்த ஒலியையும் கேட்க இயலாத நிலையில் கிடந்து உறங்குகிறதாம். மழைக் காலமான தால் வழிகளும் சேருகி, திரிவதற்கும் வசதியாக இல்லை. அரசன் போர் புரிவதை விட்டு அரண்மனையில் கிடப்பதுபோல் சிங்கமும் தன் குகையில் பொருந்திக் கிடக்கிறதாம், பேடையும் தானுமாக.

மழை ஓய்ந்துவிட்டது. வழிகளெல்லாம் வெள்ளம் வடிந்து நடக்க இசைவாகி விட்டன. சிங்கம் உறக்கத்தை விட்டு எழுகின்றது. 'நம் எல்லைக்குள் புகுந்தவர் யார்?' என்று சீறி நோக்குவதுபோல் தீப்பொறி பறக்க நாலுபுறமும் நோக்குகிறது. பிடரி மயிர் சிலும்பும் படி அங்கும் இங்கும் உடம்பை அசைத்துக்கொடுக்கிறது. முடங்கிக் கிடந்த அவயவங்களை உதறுகிறது. பெருமை தோன்ற—தன் மாட்சி தோன்ற—சோம்பல் முறித்து நிமிர்ந்து நிற்கிறது. இடிபோல் கர்ச்சிக்கிறது. இப்படி நிமிர்ந்து முழங்கிக் கொண்டே தன் குகையை விட்டு வெளிப்படுகிறது.

இப்படிக் கண்ணபிரானும் கம்பீரமாகப் புறப்பட்டு வந்து சிங் காசனத்தில் ராஜசிங்கம் வீற்றிருப்பது போல எழுந்தருளிக் காட்சி தரவேண்டும் என்று பிரார்த்திக்கிறார்கள் ஆய்ச்சியர்கள். தங்கள் தலைவனின் காம்பீர்யம் நிறைந்த அழகு-மாட்சியைக் காண ஆசைப் படுகிறார்கள். அப்படி மாட்சியுடன் அமர்ந்து தாங்கள் வந்த காரியத்தை ஆலோசித்து முடிவு செய்யவேண்டும் என்கிறார்கள்.

* * *

'வேறு புகல் அற்று உன்னை நோக்கி வந்து விழுந்தோம்; சங்கம் இருப்பார்போல் வந்து தலைப்பெய்தோம்' என்று சொன்னவர்களை

நோக்கிக் கண்ணன், 'பெண்களே! உங்கள் இருப்பிடம் தேடி வந்து உங்களை நோக்குவதன்றோ என் கடமை? அதுதானே என் சொரூபம்?' என்கிருன். இப்படித் தன்னுடைய தத்துவத்தையும் தகவையும் (சொரூபத்தையும் சுபாவத்தையும்) கண்ணன் தெரிவித்து, 'இனி நான் உங்களுக்குச் செய்யவேண்டியது என்ன?' என்று கேட்பதாகக் கருதலாம். அதுகேட்ட ஆய்ச்சியர், 'இப்படி இரகசியமாக விண்ணப்பம் செய்யக்கூடியதன்று எங்கள் காரியம்' என்கிருர்கள். 'யசோதை இளஞ்சிங்கமாகிய நீ உறங்கும் இடத்தை விட்டு வரவேணும்; திருமேனி நிமிர்ந்து கம்பீரமாக விழித்துக் கொண்டு, "வந்தீர்களா?" என்று எங்களைக் கேட்டுக்கொண்டே புறப்பட்டு வரவேணும். அப்படி வந்து வீர சிங்காசனத்தில் மாட்சி பொருந்த வீற்றிருந்து நாங்கள் வந்த காரியத்தை ஆராய்ந்து பார்க்க வேணும்' என்கிருர்கள்.

இந்தப் பாசுரத்திலே முற்பகுதி சிங்கத்தை வருணிக்கிறது. எவ்வளவு கம்பீரமாக வருணிக்கிருர்கள் சிங்கத்தை இந்த ஆய்ச்சியர்கள்!

மாரி மலைமுழைஞ்சில்
  மன்னிக் கிடந்துஉறங்கும்
சீரிய சிங்கம்
  அறிவுற்றுத் தீவிழித்து
வேரி மயிர்பொங்க
  எப்பாடும் பேர்ந்துஉதறி
மூரி நிமிர்ந்து
  முழங்கிப் புறப்பட்டுப்
போதருமா போலெ

என்பதை உணர்ச்சியுடன் ஓத ஓதச் சொற்கள் மறைந்து, சிங்கமே அனல் பறக்கக் கண் திறந்து பிடரி ரோமம் சிலிர்க்க உதறிக் கொண்டு நிமிர்ந்து கர்ச்சித்துப் பாய்ந்து வருவது போன்ற உயிர்ச் சித்திரம் அப்படியே நம் அகக்கண்முன் தோன்றக் காண்கிறோம்.

இப்படி வரவேணுமாம் பூவைப் பூவண்ணனுகிய கண்ணனும். இவனது காயாம் பூமேனி சௌந்தரியத்திற்கு அறிகுறி. 'கண்ணா, உன் சக்தியை மறைத்திருக்கிறது சௌந்தரியம். நாங்கள் உன் சௌந்தரியத்தை மட்டுமா காதலிக்கிறோம்? நீறுபூத்த நெருப்பைப் போலிருக்கும் உன் சக்தியையும் காண ஆசைப்படுகிறோம்' என்கிருர்கள் ஆய்ச்சியர்கள்.

'பூவைப் பூவண்ணா, உன் கோயில் நின்று இங்ஙனே போந்தருளி'—அதாவது உன் இருப்பிடத்திலிருந்து நாங்கள் இருக்கிற இங்கே ராஜசிங்கம் போல் வந்தருளவேணும்- என்கிருர்கள். வேலைப்பாடுகள் அமைந்த சிறந்த சிங்காசனத்தில் வீற்றிருக்கவேணும் என்கிருர்கள்.

சிரிய சிங்கா
　　சனத்திருந்து யாம்வந்த
காரியம் ஆராய்ந்து
　　அருளேலோர் எம்பாவாய்

என்கிறார்கள்.

வந்த காரியம் இன்னதென்று இப்போதே இவர்கள் சொல்லி விட விரும்பவில்லை. 'கேட்கும் முறைப்படி சிங்காசனத்திலிருந்து கேள்; நாங்கள் விண்ணப்பம் செய்வோம்' என்கிறார்கள். இந்த விண்ணப்பத்தைத் திருப்பாவையின் இறுதிப் பாட்டிற்கு முந்திய பாட்டாகிய 29-ஆம் பாட்டில்தான் வெளியிடுகிறார்கள்.

இந்த விண்ணப்பத்தைக் கண்ணனும் பொறுத்திருந்து கேட்பான். நாமும் பொறுத்திருந்து தெரிந்துகொள்ள வேண்டியதுதான்.

## சிங்கமும் சிங்காசனமும்

*மாரி மலைமுழைஞ்சில்*
　　*மன்னிக் கிடந்துஉறங்கும்*
*சீரிய சிங்கம்*
　　*அறிவுற்றுத் தீவிழித்து,*
*வேரி மயிர்பொங்க*
　　*எப்பாடும் பேர்ந்துஉதறி,*
*மூரி நிமிர்ந்து,*
　　*முழங்கிப் புறப்பட்டுப்*
*போதருமா போல,நீ*
　　*பூவைப்பூ வண்ணா! உன்*
*கோயில்நின்று இங்ஙனே*
　　*போந்தருளி, கோப்புஉடைய*
*சீரிய சிங்கா*
　　*சனத்திருந்து, யாம்வந்த*
*காரியம் ஆராய்ந்து*
　　*அருளேலோர் எம்பாவாய்.* (23)

### அரும்பதவுரை

*மாரி:* மழைக் காலத்தில். *மலை முழைஞ்சில்:* மலைக் குகையில். *மன்னி:* பொருந்தி. *சீரிய சிங்கம்:* சிறப்புள்ள சிங்கம். *அறிவுற்று:* துயிலுணர்ந்து; உறக்கம் தெளிந்து. *தீ விழித்து:* தீப்பொறி பறக்

கக் கண்களை விழித்து. வேரி மயிர் பொங்க: மணமுள்ள உளை மயிர்கள் அல்லது பிடரி ரோமம் பொங்கும்படி. எப்பாடும் பேர்ந்து: எல்லாப் பக்கமும் புடை பெயர்ந்து திரும்பி. மூரி நிமிர்ந்து: சோம்பல் முறித்துப் பெருமை தோன்ற நிமிர்ந்து. போத ருமாபோல: வெளிவருவதுபோல. பூவைப் பூவண்ணா: காயாமலர் போன்ற நிறத்தை உடையவனே. கோயில் நின்று: மாளிகையி னின்றும். இங்ஙனே போந்தருளி: இந்த இடத்திற்கு எழுந்தருளி. கோப்புடைய: (வேலைப்பாடுகள்) பொருந்தி அமைந்திருக்கும். சீரிய சிங்காசனம்: சிறப்புள்ள சிங்காசனம்.

**விளக்கம்**

கண்ணன் பெண்களின் வேண்டுகோளைக் காதில் போட்டுக் கொண்டு, 'நீங்கள் என்னைத் துயிலுணர்த்துவது ஏன்?' என்று ஒரு கேள்வி கேட்டதாக வைத்துக்கொள்ளலாம். அதற்கு ஆய்க்குலச் சிறுமியர் சொல்லும் பதிலாக அமைந்திருக்கிறது இச்செய்யுள்.

சிங்கம் கம்பீரமாகப் புறப்பட்டு வருவதுபோல் யசோதை இளஞ் சிங்கமும் புறப்பட்டு வரவேண்டும் என்கிறார்கள். படுத்தபடியே 'ஏன் வந்தீர்கள்?' என்று கேட்டால் போதாது. ராஜ சிங்கமாக நிமிர்ந்து, வந்தீர்களா? வாருங்கள், வாருங்கள்' என்று வினவிக்கொண்டே புறப்பட்டு வரவேண்டும் என்கிறார்கள். அப்படி வந்து சிங்காசனத் தில் ஒரு சிங்கமாக வீற்றிருந்து வந்த காரியத்தை விசாரிக்க வேண்டுமாம்.

# 24. போற்றிப் பாட்டு

ஒருவரை ஒருவர் எழுப்பிக்கொண்டு பெண்கள் எல்லோரும் திரண்டு வந்தார்கள். வாசல் காப்பவனை எழுப்பி, நந்தகோபனை எழுப்பி, யசோதையை எழுப்பினார்கள். கண்ணனை எழுப்ப முயன்று அண்ணனையும் எழுப்பினார்கள். மீண்டும் கண்ணனை எழுப்பினார் கள். இப்போது கண்ணன் பெண்களின் பிரார்த்தனைக்கு இணங்கி, 'இதோ புறப்பட்டு வருகிறேன்' என்று சொல்லிப் பள்ளியறையி லிருந்து சிங்காசனம் இருக்குமிடத்திற்கு வரத் தொடங்குகிறான்.

கண்ணனது வடிவழகையும் நடையழகையும் கண்டதும் பெண்கள் தங்கள் மனோரதங்களையெல்லாம் மறந்துவிட்டதுபோல், 'இந்த அடிமலர்களைக் கொண்டா இவனை நாம் நடக்கச் சொல்லி விட்டோம்?'என்று பரிந்து வருந்தினார்களாம். பிறகு 'அந்த அடிமலர் களைக் கண்களில் ஒற்றிக்கொள்ளலாமா? முடிமேல் சூட்டிக்கொள்ள லாமா?' என்றெல்லாம் பித்தம் கொண்டதுபோல் எண்ணமிடு கிறார்கள். 'ஐயோ! இந்த அடிகளா உலகம் அளந்தன? இந்த அடி களா சகடம் உதைத்து அசுரனை அழித்தன?' என்று பரிந்து வருந்து கிறார்கள். இந்தத் திருவடிகளைப் போற்றி, 'இந்த அடிமலர்களுக்கு ஒரு தீங்கும் நேராதொழியவேணும்' என்று வாழ்த்துகிறார்கள்.

வாழ்வு பெற வந்தவர்களால் வாழ்த்தப் பெறுகின்ருன் கண்ணன். இந்த அதிசயத்தைச் சொல்லுகிறது இந்தப் போற்றிப் பாட்டு. 'மங்களம், மங்களம், ஜயமங்களம்' என்று கண்ணனுடைய திருவடிகளுக்கும் கைத்திறனுக்கும் கைவேலுக்கும் வீரத்திற்கும் மங்களம் பாடுகிறது இந்தப் பாசுரம்.

* * *

கண்ணனைக் கண்டு தங்களுக்கு மங்களங்களைப் பிரார்த்தித்துப் பெற்றுக்கொள்ள வந்தவர்கள் இவர்கள். இப்பொழுது வந்த காரியத்தை மறந்துவிட்டவர்கள்போல் 'போற்றி, போற்றி, பொன்னடிக்குப் போற்றி' என்றெல்லாம் கண்ணனுக்கே மங்களம் வழங்கத் தொடங்கிவிட்டார்களே, இது தகுமா? தங்கள் இரட்சகனையா இவர்கள் இரட்சிக்கப்போகிருர்கள்? இது கண்ணனது வடிவழகு படுத்தும் பாடு. சௌந்தரியத்திலே சக்தி மறைந்திருப்பதால், பக்தி பரவசமாக இருக்கும் இவர்கள் இந்தப் பாடு படுகிருர்கள்! இப்படிப் பொங்கும் பரிவை ஆண்டாள் தன் தந்தையான பெரியாழ்வாரிடத்திலே கண்டிருக்க வேண்டும்.

பெரியாழ்வார் தம் அன்புக் கடவுளைத் தரிசித்ததும், தாம் வாழ்வு பெற நினைக்கவில்லை; எம்பெருமான் தீங்கின்றி வாழவேணுமென்று வாழ்த்திப் பல்லாண்டு பாடினுர். இது சாதாரண பக்தியன்று; பரம பக்தி. இத்தகைய பரம பக்தியைத் தம் தந்தையாரிடம் புற உலகில் கண்டு கொண்டதுபோல், அக உலகிலும்—பாவனை முதிர்ச்சியால் தான் படைத்துக்கொண்ட ஆய்ப்பாடியிலும்—கண்டு கொண்டாள்.

இந்த ஆய்ச்சியர் கண்ணனைக் கண்டதும், அந்த நடையழகைப் பார்த்ததும்,

*அன்றுஇவ் உலகம்*
*அளந்தாய்! அடிபோற்றி*

என்று வாழ்த்துகிருர்கள். கண்ணனுடைய மென்மையான அழகினைப் பார்த்து 'இந்த அடிகளைக்கொண்டு எப்படித்தான் காடு மேடுகள் நிறைந்த மண்ணையும் விண்ணையும் அளந்தானே இவன்!' என்று இவர்கள் ஆச்சரியப்படவில்லை; வயிறு எரிந்து வேதனைப் பட்டு அந்தத் திருவடிகளை வாயார வாழ்த்துகிருர்கள்!

கண்ணனுடைய கையழகைக் கண்டதும் 'இந்தக் கைத்திறன் தானே ராட்சச பூமியாகிய இலங்கையை அழித்தது? எப்படித்தான் அழித்ததோ?' என்று பரிந்து, இந்தக் கைகளையும் வாழ்த்துகிருர்கள். அந்த ராட்சச பூமியில் நடந்துபோன அந்த அடிகளைமட்டும் வாழ்த்தியதுடன் திருப்தி அடையவில்லை:

*சென்றுஅங்குத் தென்இலங்கை*
*செற்ருய்! திறல்போற்றி.*

சகடாசுரனை உதைத்து வதைத்ததிருவடிக்குத்திருப்புகழ் பாடிய பின்பும், கண்ணனுடைய கைத்திறனைப் பாடுகிறார்கள். கம்சனால் ஏவப்பட்ட அசுரர்களில் ஒருவன் விளாமரத்தின் வடிவமாய்க் கண்ணன் வரும்போது மேலே விழுந்து கொல்ல விரும்பி நின்று கொண்டிருந்தான். வேறொரு அசுரன் கன்றின் வடிவம் கொண்டு குழந்தைக் கண்ணனை முட்டிக் கொல்லவந்தான். கண்ணன் கன்றால் விளாமரத்தை அடித்து வீழ்த்த, இரண்டு அசுரர்களும் மாண்டு ஒழிந்தனர். அப்படி முள்ளைக்கொண்டு முள்ளைக் களைவதுபோல் துஷ்ட நிக்கிரகம் செய்த கைத்திறனையும் ஆய்ச்சியர் போற்றினார்கள். அப்படிக் கன்றை எறி கருவியாக (குணிலாக) வீசும்போது அந்த இடத்திற்கு நடந்து சென்றான் அல்லவா? அந்த அடிகளை வாழ்த்தினார்கள் ஆய்ச்சியர் என்றும் கூறுவதுண்டு.

கன்று குணிலா
எறிந்தாய்! கழல்போற்றி

என்ற வாக்கின் போக்கிலே திருவடியைப் போற்றும் பொருள்தான் சிறப்பாகக் குறிக்கப்படுகிறது.

கண்ணனுடைய கைத்திறன் கோவர்த்தன கிரியைக் குடையாக எடுத்து உலகத்திற்கு அருள் புரிந்தது என்பதையும் அறிந்திருக்கிறார்கள் ஆய்ச்சியர்கள். குன்று குடையாக எடுத்த அந்தப் பெருங் குணத்தையும் போற்றுகிறார்கள்:

குன்று குடையா
எடுத்தாய்! குணம்போற்றி

என்கிறார்கள்.

வெற்றி தரும் கைவேலையும் போற்றுகிறார்கள். கண்ணன் கையில் வேல் பிடித்திருக்கும் அழகும் இவர்கள் உள்ளத்தைக் கொள்ளை கொள்கிறது. 'அடி போற்றி, திறல் போற்றி, புகழ் போற்றி, கழல் போற்றி, குணம் போற்றி, வேல் போற்றி' என்று இவர்கள் தங்கள் நாக்குக்கு அறுசுவை உண்டி அளித்து மகிழ்கிறார்கள்.

## வடிவழகும் நடை அழகும் கண்டு போற்றுவது

அன்று இவ் உலகம்
அளந்தாய்! அடிபோற்றி;
சென்று அங்குத் தென் இலங்கை
செற்றாய்! திறல்போற்றி;
பொன்றச் சகடம்
உதைத்தாய்! புகழ்போற்றி;

கன்று குணிலா
எறிந்தாய்! கழல்போற்றி;
குன்று குடையா
எடுத்தாய்! குணம் போற்றி;
வென்று பகைகெடுக்கும்
நின்கையில் வேல்போற்றி;
என்றுஎன்று உன் சேவகமே
ஏத்திப் பறைகொள்வான்
இன்றுயாம் வந்தோம்,
இரங்கேலோர் எம்பாவாய். (24)

## அரும்பதவுரை

அளந்தாய்: அளந்தவனே. செற்ருய்: அழித்தவனே. பொன்ற அழியும்படி. சகடம்: வண்டி வடிவில் வந்த சகடாசுரன். உதைத்தாய்: உதைத்தவனே. கன்று குணிலா: கன்றை எறி தடியாகக் கொண்டு; கன்று வடிவில் வந்த அசுரனை எறி தடியாகக் கொண்டு. குணில்: எறி தடி. எறிந்தாய்: எறிந்தவனே; விளங்கனி வடிவாகத் தொங்கிக் கண்ணனைக் கொல்லப் பார்த்த அசுரன்மேல் அசுரக் கன்றை வீசி எறிந்து இரண்டு அசுரர்களையும் ஒருங்கே கொன்றவனே. குடையா: குடையாக. சேவகமே: வீரச் செயலையே. ஏத்தி: துதித்து. பறை கொள்வான்: நோன்பிற்கு வேண்டிய பறையைப் பெற்றுக்கொள்வதற்காக. இரங்கு: இரங்குவாய்.

## விளக்கம்

இப்பெண்களின் வேண்டுகோளுக் கிணங்கிக் கண்ணபிரான் படுக்கையை விட்டு எழுந்து வெளிப்பட்டு வருகிறுன்; வெளி மண்டபத்திற்கு வந்துவிடுகிறுன். அந்த வடிவழகிற்கும் நடை அழகிற்கும் உள்ளத்தைப் பறி கொடுத்தவர்களால் வந்த காரியத்தைப் பளிச் சென்று விண்ணப்பம் செய்துகொள்ள முடியவில்லையாம். இந்த அழகிலே வந்த காரியத்தையும் சற்று மறந்து விடுகிறுர்களாம்.

நடந்துவந்த அந்த அடிமலர்களின் அழகைப் போற்றுகிறுர்கள். இலங்கையை வென்ற திறமையைப் போற்றுகிறுர்கள். குழந்தைக் கண்ணனின் லீலைகள் நினைவிற்கு வர, அந்த அற்புதச் செயல்களையும் போற்றுகிறுர்கள். அவற்றுல் ஏற்பட்ட புகழையும் அந்தச் செயல்களில் வெளிப்பட்ட குணத்தையும் போற்றுகிறுர்கள். வெற்றியையும் வீரத்தையும் இப்படியெல்லாம் போற்றியபின் கடைசியாக வந்த காரியத்தையும் நினைத்துக்கொள்கிறுர்கள்.

# 25. அன்பர் துயரத்திற்கும் நெருப்பு

முந்திய பாட்டில் தன்னை வாழ்த்தித் தனக்கு ஜயமங்களம் பாடிய பெண்ணை நோக்கிக் கண்ணன் 'பெண்களே! நம்முடைய வெற்றிக்குப் பல்லாண்டு பாடியது பொருத்தம்தான்; ஆனல் இதற்கா இந்தக் குளிரிலே வருந்தி வந்தீர்கள்?' என்று கேட்டதாக ஊகிக்கலாம். அந்தக் கேள்விக்குப் பதில் கூறுவதுபோல் அமைந்திருக்கிறது இந்த இருபத்தைந்தாவது பாசுரம்.

'எம்பெருமானே, எங்களுக்காவது, வருத்தமாவது! உன்னுடைய திருப்பெயர்களையும் குணங்களையும் பாடிக்கொண்டு வரும்போது குளிர் எங்கே? வருத்தம் எங்கே? கொஞ்சமும் சிரமம் என்ற உணர்ச்சி இல்லாமல் சுகமாகவே வந்து சேர்ந்தோம்' என்கிருர்கள். 'நாங்கள் பறை என்று சொல்லிக்கொண்டு ஒரு முக்கியமான வேண்டுகோளுடன் வந்திருக்கிறோம்' என்றும் விண்ணப்பம் செய்து கொள்கிருர்கள்.

தங்கள் வேண்டுகோளை விண்ணப்பம் செய்துகொள்வதற்குப் பொருத்தமாகக் கண்ணனை விளித்துப் பேச விரும்புகிருர்கள். செயற்கருஞ் செயல்களையும் எளிதாகச் செய்து முடித்தவன் கண்ணன் என்கிருர்கள். துளசி பரிமளத்துடன் தோன்றுவதுபோல் இத்தகைய ஆச்சரிய சக்தியுடன் பிறந்த மேதைக்குப் பெயர்தான் கண்ணன் என்கிருர்கள். இத்தகைய கண்ணனுக்குத் தங்கள் வேண்டுகோளை நிறைவேற்றிக் கொடுப்பது அரிதாகுமா என்கிருர்கள்.

ஒருத்தி மகனய்ப் பிறந்து ஒருத்தி மகனய் ஒளித்து வளர்ந்த அதிசயத்தைக் குறிப்பிடுகிருர்கள். தேவகி மகனய்ப் பிறந்து யசோதை மகனய் வளர்ந்துவரும் பிரசித்தமான கதைதான் இது.

ஒருத்தி மகனய்ப்
    பிறந்து, ஓர் இரவில்
ஒருத்தி மகனய்
    ஒளித்து வளர

என்று தொடங்குகிருர்கள்.

இப்படி ஒளித்து வளரும் கண்ணனைக் கம்சன் மறந்துவிடவில்லையாம். 'நம்முடைய கண் வட்டத்தில்தான் இல்லையே; நம்முடைய பலத்திற்கும் செல்வத்திற்கும் இப்போது ஒரு குறையும் இல்லையே; ஒளித்து வளரும் குழந்தை நம்மை என்ன செய்துவிடப் போகிறது?' என்று ஆறியிருக்கவில்லையாம் கம்சன். பொருமை இம்சிக்கிறது; பொறுக்க முடியவில்லை.

பொருமையில் என்ன என்ன செய்துவிட்டான் பாருங்கள்! வண்டி, கொக்கு, கழுதை, குதிரை, கன்று, மரம் என்று இப்படிப் பல

பொருள்களில் கம்ச கிங்கரர்களான அசுரர்கள் ஆவேசித்துக் கண்ணனைக் கொல்ல வந்தார்கள். பூதனை என்ற பேய் வந்தது; குவலயாபீடம் என்ற யானை வந்தது. இப்படியெல்லாம் கம்சன் கருதிய தீங்கிற்கு எல்லையுண்டோ? எப்படியாவது கண்ணனை ஒழித்துவிட வேண்டுமென்று கருதியிருந்தான். ஒழித்துவிட்டு, 'என் மருமகன் ஐயோ! செத்துப்போய்விட்டானே' என்று அலறியடித்துக்கொண்டு அழுது புலம்பித் துக்கம் கொண்டாடவேணும் என்று திட்டமிட்டிருந்தானும்.

ஆனால் நடந்த தென்ன? கம்சனுடைய கொடுங்கோன்மையும் சூழ்ச்சிகளும் ஆண்களோடு பெண்களுக்கும் ஒரே வயிற்றெரிச்சலை உண்டாக்கின அல்லவா? அந்த வயிற்று நெருப்பை யெல்லாம் கண்ணன் வாரிக் கம்சன் வயிற்றில் இட்டான் என்கிறார்கள்.

*தரிக்கிலான் ஆகி, தான்*
*தீங்கு நினைந்த*
*கருத்தைப் பிழைப்பித்துக்*
*கஞ்சன் வயிற்றில்*
*நெருப்பென்ன நின்ற*
*நெடு மாலே!*

என்று அழைக்கிறார்கள்.

இப்படி ஆய்ச்சியர் கண்ணனை அழைத்ததும், அவன் 'பெண்களே, அந்தக் கதையெல்லாம் இப்போது எதற்காக? உங்களுக்கு நான் செய்யவேண்டியது என்ன?' என்று கேட்கிறான். அதற்கு மறுமொழியாக இவர்கள், 'உன்னை அருத்தித்து வந்தோம்' என்று பதில் சொல்லுகிறார்கள். அதாவது 'உன்னை யாசித்து வந்திருக்கிறோம்' என்கிறார்கள்.

'என்னையா? ஏதோ பறை கேட்டு வந்ததாக அல்லவா நினைத்துக் கொண்டிருக்கிறேன்? அப்படியல்லவா நீங்கள் விரும்புவதாக ஞாபகம்?' என்கிறான் கண்ணன். அதற்கு இவர்கள் இப்போது முடிவாக ஒன்றும் பதில் சொல்லாமல் 'பறை தருதி ஆகில் அதனைப் பெற்றுக்கொள்வோம்' என்கிறார்கள். கண்ணனது செல்வத்தையும் சேவகத்தையும் பாடி வருத்தம் தீருவோம், மகிழ்ச்சி அடைவோம் என்கிறார்கள்.

*திருத்தக்க செல்வமும்*
*சேவகமும் யாம்பாடி*
*வருத்தமும் தீர்ந்து*
*மகிழ்ந்தேலோர் எம்பாவாய்*

என்று பாடுகிறார்கள்.

ஏற்கெனவே கண்ணன் பெயரையும் குணங்களையும் பாடிக் கொண்டு வந்தபோதே இவர்களுக்கு வருத்தம் ஒன்றும் தெரிய வில்லை. ஆகையால் இப்போது இவர்கள் வருத்தம் என்று வந்த சிரமத்தைக் குறிப்பிடவில்லை என்பது தெளிவு. அவனைப் பிரிந்து படுகிற துயரம் நீங்கி மகிழ்ச்சி அடைவோம் என்றுதான் சொல்லு கிறார்கள். 'திருத்தக்க செல்வம்' அல்லவா இவர்கள் இப்போது விரும்புவது? இதை மேலும் தெளிவுபடுத்துவது இறுதிப் பாட்டுக்கு முந்திய பாசுரத்தில்தான்.

## செல்வமும் சேவகமும்

ஒருத்தி மகனாய்ப்
 பிறந்து,ஓர் இரவில்
ஒருத்தி மகனாய்
 ஒளித்து வளர,
தரிக்கிலான் ஆகித்தான்
 தீங்கு நினைந்த
கருத்தைப் பிழைப்பித்துக்
 கஞ்சன் வயிற்றில்
நெருப்பென்ன நின்ற
 நெடுமாலே! உன்னை,
அருத்தித்து வந்தோம்;
 பறைதருதி ஆகில்
திருத்தக்க செல்வமும்
 சேவகமும் யாம்பாடி,
வருத்தமும் தீர்ந்து
 மகிழ்ந்தேலோர் எம்பாவாய். (25)

### அரும்பதவுரை

தரிக்கிலான் ஆகி: (சிறையிலே பிறந்து ஒளிந்து வளருவதைக் கேட்டு) பொறுக்க முடியாதவனாகி. பிழைப்பித்து: வீணாக்கி; தவறச் செய்து. கஞ்சன்: கம்சன். அருத்தித்து வந்தோம்: இரந்து வந்தோம். பறை: (இங்கே) வேண்டுகோள். திருத்தக்க செல்வமும்: மகாலட்சுமியும் ஆசைப்படத்தக்க உனது செல்வமும். சேவகமும்: வீர சம்பத்தும்.

### விளக்கம்

வடிவழகையும் நடையழகையும் குண அழகையும் அநுபவித்த பின்—அநுபவித்து வெறி தீர்ந்த பின்—வந்த காரியம் ஒன்று உண்டு

என்பதை நினைவூட்டிக் கொண்டார்கள். நோன்பிற்குப் பறை கொள்ளும் காரியம் அது என்று தெரிவித்து,- இரங்கவேண்டும் என்ருர்கள் முந்தின பாட்டிலே. இந்தப் பாட்டிலே 'கண்ணு, உன்னிடம் யாசித்து வந்தோம்' என்கிருர்கள். 'பறை' என்பதில் புதைபொருளான தங்கள் மனோரதம் ஒன்று உண்டு என்பதையும் குறிப்பாகப் புலப்படுத்துகிருர்கள்.

'திருத்தக்க செல்வமும் சேவகமும் யாம் பாடி' என்று கூறுவதில், கண்ணனிடம் ஒன்றைப் பெறுவதைக் காட்டிலும் கண்ணனைப் பெறுவதே தங்கள் அந்தரங்க நோக்கம் என்ற குறிப்பையும் ஒளித்துக் காட்டுகிருர்கள்.

பிராட்டியும் விரும்பத்தக்க செல்வத்தை இவர்களும் விரும்புகிருர்கள்; பிராட்டி காதலித்த வீரத்தை இவர்களும் காதலிக்கிருர்கள். 'உன்னை அடைவதற்குத் தடையாக இருப்பது எதுவோ அதையெல்லாம் போக்கி அருளவேணும்' என்கிருர்கள். 'நாங்கள் பிரிந்து படுகிற வருத்தமெல்லாம் தீர்ந்து மகிழ்ச்சியிலே நாங்கள் மலர்ச்சி பெறுமாறு நீ எங்களை அங்கீகரிக்க வேணும்' என்று பிரார்த்தித்துக் கொள்கிருர்கள்.

# 26. பண்டைத் தமிழ் நோன்பு

கண்ணன் சிங்காசனத்தில் வீற்றிருக்கின்ருன்—சிங்கத்தின் மேல் சிங்கம் வீற்றிருப்பது போல. 'நீங்கள் "பறை தருதியாகில்" என்று வேண்டுகிறீர்களே. அது எதற்காக? எந்த விரதத்தை எப்படி அனுஷ்டிக்கப் போகிறீர்கள்' என்று கேட்கிருன் பெண்களை நோக்கி. அதற்குப் பெண்கள் பதில் சொல்லும் பாசுரம் இது.

ஆய்ச்சியர் இப்பொழுது 'மாலே!' என்று கண்ணனை விளிக்கிருர்கள். இதுவரை அவனிடம் தங்களுக்குள்ள ஆசையைத்தான் பிரஸ்தாபித்தார்கள். இப்போது சிங்காசனத்திலே யசோதை இளஞ் சிங்கத்தைக் கண்டதும், தங்கள் மீது கண்ணன் கொண்டிருக்கும் காதலே ஒரு கடல் என்பதையும், கடல் குடத்திற்குள் அடங்கிக் கிடப்பது போல் அந்தக் காதல் வடிவுகொண்டு வீற்றிருப்பதையும் உணருகிருர்கள். 'நாம் வரும்வரை இவன் தன் ஆசையை எப்படித் தான் அடக்கிக் கொண்டிருந்தானே? அந்த ஆசைக்கு என்ன சமாதானம்தான் சொல்லி வந்தானே? என்ன நம்பிக்கை காட்டி வந்தானே?' என்றெல்லாம் எண்ணத் தொடங்குகிருர்கள்.

இவ்வளவு உணர்ச்சியையும் உள்ளத்திலே கொண்டுதான் 'மாலே!' என்கிருர்கள்; 'மணிவண்ணு!' என்றும் அழைக்கிருர்கள். இதற்குமுன் நாராயணன், பரமன், தேவாதிதேவன் என்றெல்லாம் அழைத்தார்கள். அந்தப் பெயர்கள் எல்லாம் பகவானுடைய பரத்துவம் என்ற மேலான நிலையைச் சுட்டிக்காட்டின. ஆனல் இப்

போது கண்ணனுடைய எளிமையும் காதலுமே இவர்களை மோகிக்கச் செய்கின்றன.

இவர்களது அழைப்பைப் பேரன்புடன் செவியில் போட்டுக் கொண்ட பெருமான் இவர்களை நோக்கி, "நான் என் தாய்க்கு மணி வண்ணன் தான்; 'என் மணிவண்ணன்' என்று யசோதை அம்மா என்னைப் பாராட்டுவது உண்டு. இப்போது உங்களுக்கும் இனிய மணிவண்ணனாகி விட்டேன்; நல்லது, இனி உங்கள் மணிவண்ண னிடம் வந்த காரியத்தைத் தாராளமாகச் சொல்லலாமே இப்போது" என்கிறான்.

உடனே இவர்கள் 'மார்கழி நீராடுவான்' என்று தொடங்கு கிறார்கள். கண்ணன் குறுக்கிட்டு, 'அது என்ன, மார்கழியாவது நீராட்டமாவது?' என்று கேட்கிறான்; இவர்கள் செய்ய விரும்பிய காரியத்திற்கு ஆதாரம் கேட்கிறான். பெண்கள்,

*மாலே! மணிவண்ணா!*
*மார்கழிநீர் ஆடுவான்,*
*மேலையார் செய்வனகள்*
*வேண்டுவன கேட்டியேல்*

என்று மேலே சொல்லுகிறார்கள்.

முதல் முதல் சங்குகள் வேண்டும் என்கிறார்கள்; பிறகு பறை வேண்டும் என்கிறார்கள். அப்பால் பல்லாண்டு பாடுவாரும் தேவை என்கிறார்கள். மேலும், விளக்கு கொடி விதானம் முதலியவை வேண்டும் என்று அடுக்கிக்கொண்டே போகிறார்கள். இவையெல் லாம் ஏன் தேவைப் படுகின்றன?

நல்ல சங்குகள் வேண்டும் என்கிறார்கள். நடுங்க ஒலி செய்யும் பாஞ்சசன்னியம் என்ற கண்ணன் சங்கை ஒத்த சங்குகள் வேண்டும் என்கிறார்கள்.

*ஞாலத்தை எல்லாம்*
*நடுங்க முரல்வன,*
*பால்அன்ன வண்ணத்துஉன்*
*பாஞ்ச சனியமே*
*போல்வன சங்கங்கள்*

தங்களுக்குத் தேவை என்று இவர்கள் சொன்ன போதிலும், பிறரை நடுங்கச் செய்வதற்காக இவர்கள் அத்தகைய சங்குகள் வேண்டுமென்று சொல்லவில்லை. உறங்குபவர்களை விழிக்கச் செய்யும் பள்ளியெழுச்சிச் சங்குகளே வேண்டும் என்கிறார்கள்.

ஏற்கெனவே பறையைத்தான் இந்த நோன்பிற்குச் சிறப்பான உபகரணமாகக் குறிப்பிட்டார்கள். அந்தப் பறைகளை இப்போது

பெரும் பறைகள், மிகவும் பெரிய பறைகள் என்று குறிப்பிடுகிருர்கள். பேரோசை உடைய பறைகள் வேண்டும் என்கிருர்கள். பள்ளி யெழுச்சிச் சங்குகள் வேண்டும் என்றவர்கள் புறப்பாட்டுப் பறை களும் வேண்டும் என்கிருர்கள். இந்தச் சங்குகளும் பறைகளும் அன்பர்களுக்கு—மார்கழி நீராட்டத்தில் விருப்பம் உள்ளவர் களுக்கு—ஊக்கமும் உற்சாகமும் கொடுப்பதுபோல், மார்கழி நீராட் டத்திற்கு எதிரிகளாய் இருப்பவர்களை ஒரு கலக்குக் கலக்கிவிடும் என்று இந்தச் சிறுமியர்கள் கருதுகிருர்கள் என்று கொள்வதும் தவருகாது.

பறைகளை முழக்கிக்கொண்டு புறப்படும்போது எதிரே நின்று பல்லாண்டு பாடுகிறவர்களும் வேண்டும்; அவர்களையும் அனுப்பி வைக்க வேணும் என்று கண்ணனைப் பிரார்த்தித்துக் கொள் கிருர்கள் இவர்கள்: எதிரே நின்று பல்லாண்டு பாடுகிறவர்கள் இந்த நோன்பு கொண்டாடுகிறவர்களுக்கு மங்களம் உண்டாகும்படி வாழ்த்துகிறவர்கள் ஆவர் என்பது குறிப்பு.

மங்கள தீபம் வேண்டும் என்கிருர்கள்; அதிகாலை இருட்டில் ஒருவர் முகம் ஒருவருக்குத் தெரிவதற்காகத்தான். கொடி வேண்டு மாம்: தூரத்திலே இருப்பவர்களுக்கும் இந்தப் பெண்கள் கூட்டம் வருவது தெரிய வேண்டுமல்லவா? விதானம் என்ற மேற்கட்டி வேண்டுமாம்: அதிகாலையில் புறப்பட்டுப் போகும்போது தலைமேல் பனி விழாமல் தடுப்பதற்குத் தான்.

இவற்றையெல்லாம் கண்ணன் அருள்கூர்ந்து தரவேணும் என்கிருர்கள்.

## நோன்பிற்கு வேண்டியவை

மாலே! மணிவண்ணா
    மார்கழிநீர் ஆடுவான்,
மேலையார் செய்வனகள்
    வேண்டுவன கேட்டியேல்;
ஞாலத்தை எல்லாம்
    நடுங்க முரல்வன,
பாலன்ன வண்ணத்துஉன்
    பாஞ்ச சன்னியமே
போல்வன சங்கங்கள்,
    போய்ப்பாடு உடையனவே
சாலப் பெரும்பறையே,
    பல்லாண்டு இசைப்பாரே,

கோல் விளக்கே,
கொடியே, விதானமே,
ஆலின் இலையாய்!
அருளேலோர் எம்பாவாய். (26)

### அரும்பதவுரை

மாலே: திருமாலே; அடியவர்களிடத்தில் ஆசைப் பெருக்கு உடையவனே. ஆடுவான்: ஆடுவதற்கு. மேலையார் செய்வனகள்: முன்னோர்களான பெரியோர் செய்தவை. வேண்டுவன கேட்டியேல்: வேண்டியவற்றைக் கேட்பாயானால். ஞாலத்தை எல்லாம்: (இங்கே) பகைவர் உலகத்தையெல்லாம்; எல்லாப் பகைவர்களையும். முரல்வன: (இங்கே) ஒலி செய்வன. போய்ப்பாடு உடையன: பேரொலி செய்வன. பாலன்ன வண்ணம்: பால்போன்ற நிறம். பாஞ்சசனியமே போல்வன சங்கங்கள்: பாஞ்சசன்னியம் என்ற கண்ணன் சங்கை ஒத்த சங்குகள். சாலப் பெரும்பறை: மிகவும் பெரிய பறைகள். பல்லாண்டு இசைப்பார்: பல்லாண்டு பாடுகிறவர்கள். கோல விளக்கு: அழகிய மங்கல விளக்குகள். கொடியே, விதானமே: கொடிகளும் மேற்கட்டிகளும்.

### விளக்கம்

கண்ணன் ராஜசிங்கம் போல் சிங்காசனத்தில் வீற்றிருந்து, 'பெண்களே, நீங்கள் பறை என்று சொல்லி வேறொன்றை வேண்டுகிறீர்களே, அதைத் தெளிவுபடுத்த வேண்டும்' என்று கேட்கிறான். அது குறித்து விவரிப்பதுதான் இந்தப் பாசுரம்.

கண்ணனுடைய கேள்வியிலிருந்தே அவனுக்கு அன்பர்கள் மீதுள்ள ஆசை புலனாகிறது என்பதை இப்பெண்கள் தெரிந்துகொள்கிறார்களாம். எனவே 'மாலே! மணிவண்ணா!' என்று அழைத்துப் பதில் சொல்லுகிறார்கள்.

முன்னோர்கள் அனுஷ்டித்த மார்கழி நோன்பு குறித்துப் பேசுகிறார்கள். மார்கழி நீராட்டத்தை முக்கிய அம்சமாக உடைய இது ஒரு வைதிக நோன்பு அல்ல, தமிழகத்தில் முன்னோர்கள் சிஷ்டாசாரமாக அனுஷ்டித்து வந்தது என்று கூறிப் பின் விவரிக்கிறார்கள்.

## 27. சர்க்கரைப் பொங்கல் பாட்டு

விரதத்திற்கு உரிய சங்கு பறை முதலியவற்றையும் பல்லாண்டு இசைப்பாரையும் அருளவேண்டும் என்று கேட்ட ஆய்ச்சியரை நோக்கிக் கண்ணன், 'பெண்களே! இவ்வளவுதானா உங்கள் தேவை?

தருகிறேன்' என்று சொன்னதாகக் கருதலாம். அதற்குப் பெண்கள் பதில் சொல்வதுபோல், விட்ட இடத்திலிருந்து தொடர்ந்து மேலும் தங்களுக்கு வேண்டியவற்றைக் குறிப்பிடுகிறார்கள்.

'எம்பெருமானே! மார்கழி நீராட்டத்தை ஒட்டி நோன்பு நோற்கத் தேவையான சாதனங்களை ஏற்கெனவே குறிப்பிட்டோம். நோன்பு நோற்று முடிந்த பின் நாங்கள் உன்னிடத்தில் பெறவேண்டிய சம்மானங்களும் உண்டு. அவற்றையும் நாங்கள் பெற்று மகிழும் படி அருள் புரியவேணும்' என்கிறார்கள் இந்தப் பாசுரத்திலே.

சம்மானத்தை வேண்டிக் கொள்ளும்போது, 'கூடாரை வெல்லும் சீர்க் கோவிந்தா!' என்று கூப்பிடுகிறார்கள் கண்ணபிரானை. அடிபணியாதவர்களை—பகைவர்களை—வெல்லும் சிறப்பை உடையவன் கண்ணன் என்பது பொருள். கூடாதவர்களை (பகைவர்களை) வெல்லுகிறவன், கூடும் அவர்களுக்கு—அன்பர்களுக்குத்—தோற்று நிற்கிறான் என்பது குறிப்பு.

தங்களுடைய அன்பையே, ஆசையையே, பேசி வந்தவர்கள் கண்ணனுக்குத் தங்கள் மீதுள்ள ஆசை தங்கள் ஆசையைக் காட்டிலும் எவ்வளவோ பெரிது என்று கண்டுபிடித்தார்கள் அல்லவா? அப்படியே இப்போதும் ஒரு புதுமையைக் கண்டு பிடிக்கிறார்கள். 'கண்ணனுடைய கலியாண குணங்களுக்கு நாங்கள் தோற்றோம், தோற்றோம்!' என்று இதுவரை நம்பி இருந்தார்கள்; சொல்லி வந்தார்கள். இப்போது 'கண்ணன் தோல்வி' என்ற ஒரு புதுமையைக் கண்டு பிடிக்கிறார்கள். அன்பர்கள் விஷயத்தில் கண்ணனுக்குத் தோல்வியே வெற்றி!—என்கிறார்கள், சிறுமியர்களாகிய தங்களுடைய மழலைச் சொற்களுக்குத் தோற்றுப் பறை முதலியவற்றையும் இவர்கள் வேண்டினபடியே தந்தருள இசைந்து விட்டானல்லவா?

கூடாரை (எதிரிகளை) சக்தியாலே வெல்லும் பெருமான் சௌந்தரியத்தாலே—ரூப சௌந்தரியத்தாலும் குண சௌந்தரியத்தாலும்—கூடும் அன்பர்களை வெல்லுகிறான் என்பது உண்மைதான். எனினும், அம்புக்குத் தோற்காத பெருமான் அன்பிற்குத் தோற்கிறானும்; இந்தத் 'தோல்வி'யைப் புலப்படுத்தி இறைவனது சீலத்தையும் எளிமையையும் வெளியிடுவது 'கோவிந்தன்' என்னும் பெயர்.

இவர்கள் சம்மானம் கேட்கிறார்கள். இப்போது யாசகம் கேட்பதுபோல் கேட்கவில்லை. தோற்றவனிடம் வென்றவன் கப்பம் கேட்பதுபோலச் சம்மானம் கேட்கிறார்கள். 'யாம் பெறு சம்மானம்' என்று கம்பீரமாய்க் கூறுவதைக் கேளுங்கள்.

'நாடு புகழும்படி நாங்கள் சம்மானம் பெறவேண்டும்' என்கிறார்கள். அணிமணிகள் துறந்து, கண் மை துறக்கக் கூந்தல் மலர் மறக்க, நோன்பு நோற்றார்கள் அல்லவா? 'நோன்பு முடிந்தபின் அணிமணிகளை யெல்லாம் நாங்கள் பெற்றுக் கொள்வோம்' என்கிறார்கள். 'அனைவரும் கொண்டாடும்படி நீ எங்களுக்கு அவற்றை யெல்லாம் சம்மானிக்க வேணும்' என்கிறார்கள்.

நகைகளின் பெயர்களை இவர்கள் 'பட்டியல்' செய்து பேசுவதே எவ்வளவு அழகாய் இருக்கிறது!

சூடகமே, தோள்வளையே,
தோடே, செவிப்பூவே,
பாடகமே, என்றுஅனைய
பல்கலனும் யாம்அணிவோம்

என்ற ஓசையின்பத்திலேயே இவர்களுடைய மகிழ்ச்சி இனிது புலனாகிறது.

இந்த நகைகளையும் வேறு நகைகளையும் கண்ணன் சம்மானித்தால் போதாது என்கிறார்கள். தலைவனும் இஷ்ட தெய்வமுமாகிய அவன் தன் கையால் தங்களுக்கு அணிய, தாங்கள் அணிந்து மகிழ வேணும் என்று ஆசைப்படுகிறார்கள். அப்படியே,

ஆடை உடுப்போம்

என்கிறார்கள்.

சம்மானங்களில் எல்லாவற்றுக்கும் மேலாகச் சர்க்கரைப் பொங்கலை எவ்வளவு ரசமாய்க் குறிப்பிடுகிறார்கள் பாருங்கள்! 'அதன் பின்னே பால்-சோறு மூட நெய் பெய்து முழங்கை வழிவார' வழங்கவேணும் என்கிறார்கள். 'நெய்யுண்ணோம், பாலுண்ணோம்' என்று விரதம் கிடந்தவர்கள் இப்போது ஆசை தீரச் சர்க்கரைப் பொங்கல் சாப்பிட வேணும் என்கிறார்கள்.

கூடியிருந்து சாப்பிட வேணும் என்கிறார்கள். கண்ணனும் தாங்களுமாகக் கூடியிருந்து சாப்பிட வேணுமாம். பசிதீரச் சாப்பிட வேணும் என்று சொல்லவில்லை; ஆசை தீரச் சாப்பிட வேணும் என்று சொல்லுகிறார்கள். ஆம்; கண்ணனைப் பிரிந்து இருந்ததால் அதிகரித்திருந்த ஆசைதீர உண்ண வேணுமாம்.

உண்பதுகூட முக்கியமில்லை, எல்லாரும் கூடிக் களிப்பதுதான் இந்த விருந்தில் முக்கியமான அம்சம் என்பதை வற்புறுத்தி, 'கூடியிருந்து குளிர்ந்து' என்கிறார்கள்.

'முழங்கை வழிவார' என்று சொல்லிப் பிறகு உண்பதைச் சொல்லாமல் 'கூடியிருந்து குளிர்ந்து' என்று முடிக்கிறார்கள். கண்ணனைக் கண்குளிரக் கண்டதுமே பசி தீர்ந்ததால் உண்ண வேண்டிய தேவைகூட இல்லை!

## உண்ணவும் மறந்தனரோ!

கூடாரை வெல்லும்சீர்க்
கோவிந்தா! உன்தன்னைப்
பாடிப் பறைகொண்டு
யாம்பெறு சம்மானம்:

நாடு புகழும்
　　பரிசினால் நன்றாகச்,
சூடகமே, தோள்வளையே,
　　தோடே, செவிப்பூவே,
பாடகமே, என்று அனைய
　　பல்கலனும் யாம்அணிவோம்;
ஆடை உடுப்போம்;
　　அதன்பின்னே பாற்சோறு
மூட, நெய்பெய்து,
　　முழங்கை வழிவார,
கூடி இருந்து
　　குளிர்ந்தேலோர் எம்பாவாய். (27)

## அரும்பதவுரை

கூடாரை: எதிரிகளை. சீர்க் கோவிந்தா: சிறப்பை உடைய கோவிந்தனே. பரிசினால்: தன்மையால். நாடு புகழும் பரிசினால்: நாடு புகழும்படியாக. சூடகம்: கையில் அணியும் ஒருவகை ஆபரணம். தோடு: காதணி. செவிப்பூ: கர்ணப்பூ என்ற ஆபரணம். பாடகம்: பாத கடகம் என்ற காலணி. என்று அனைய பல்கலனும்: என்று சொல்லப்பெறும் அவைபோன்ற வேறு பல ஆபரணங்களும். பாற்சோறு மூட: பால் சோற்றை மூடுமாறு. முழங்கை வழிவார: முழங்கை வழியாகப் பெருக.

## விளக்கம்

'நீங்கள் நோன்பிற்கு வேண்டியதைக் கேட்கிறீர்கள்; தருவோம்; நோற்ற பின்பு பெறும் பேறு யாது?' என்று கண்ணன் கேட்கிறான். அந்தக் கேள்விக்கு இவர்கள் சொல்லும் பதில் இந்தப் பாசுரம்.

நெய்யுண்ணாமலும், மலரிட்டு முடித்துக் கொள்ளாமலும், அணிகளால் அலங்காரம் செய்து கொள்ளாமலும், கண்ணுக்கு மைதீட்டிக் கொள்ளாமலும் இருந்து நோன்பு நோற்றார்கள். விடியும் முன்பே எழுந்திருந்து பனி தலையில் விழத் தெருவெல்லாம் நடந்து ஒருவரையொருவர் எழுப்பினார்கள்; கண்ணனையும் துயில் எழுப்பினார்கள். பனி நீராடி விரதம் கொண்டாடத் துணிந்தார்கள். அத்தகைய வருத்தங்கள் எல்லாம் தீரத் தாங்கள் பெறும் சம்மானம் கண்ணனும் நப்பின்னைப் பிராட்டியும் அலங்கரிக்க, ஆடை ஆபரணங்

களால் அலங்காரம் செய்து கொள்வதும், அவர்கள் உண்பிக்க உடன் இருந்து உண்பதுமே ஆகும் என்கிருர்கள். 'கூட இருந்து குளிர்ந்து' என்பதுதான் சம்மானத்தின் முக்கிய அம்சம்.

# 28. நீயே எங்கள் உபாயம்

நோன்பிற்கு உரிய உபகரணங்களையும், நோன்பு முடிந்தபின் சம்மானமாக ஆடை ஆபரணங்களையும், பால்-சோறு உண்ணக் கூடி இருப்பதையும் முந்திய இரண்டு பாடல்களிலும் பிரஸ்தாபித் தார்கள் ஆய்ச்சியர்கள். அது கேட்ட கண்ணன், 'பெண்களே, உங்கள் நிலைமை அறிந்து தருவதே பொருத்தமாகும். என்னிடம் நீங்கள் வேண்டியவற்றைப் பெற்றுக்கொள்வதற்காக நீங்கள் மேற் கொண்ட உபாயம் அல்லது சாதனம் ஏதாவது உண்டா?' என்று ஒரு கேள்வி போடுகிருன். அதற்குப் பதில் சொல்லுகிறது இந்தப் பாட்டு.

'கண்ணு, உன் கண்ணுல் எப்போதும் நீயே எங்கள் நிலைமை யைப் பார்த்துக்கொள்ளலாமே' என்கிருர்கள் ஆய்ச்சியர்கள்.

கறவைகள் பின்சென்று
கானம்சேர்ந்து உண்போம்

என்பதை 'நாங்கள் சொல்லியா நீ தெரிந்துகொள்ள வேணும்?' என் கிருர்கள்.

'அறிவொன்றும் இல்லாதவர்கள் நாங்கள்!' என்றும் தங்கள் அறியாமையை அறிவித்துக்கொள்கிருர்கள். எனவே இவர்கள் ஞானத்தைச் சாதனமாகத் தேடிக்கொள்ளவில்லை என்பது தெளிவு. 'பசுக்களின் பின்னே போய்த் திரிந்து வயிறு வளர்த்துக்கொண்டிருக் கும் எங்களிடம் நற்கருமமும் இல்லை, விவேக வைராக்கியங்களும் இல்லை' என்கிருர்கள்.

பிறகு, 'உன் தன்னைப் பிறவி பெறுந்தனை புண்ணியம் யாம் உடை யோம்' என்கிருர்கள். ஆய்க்குலத்தில் கண்ணன் தோன்றுவதற்குத் தக்க புண்ணியம் உடையவர்கள் தாங்கள் என்றும் சொல்லுகிருர் கள். இப்படிப் பிறந்திருக்கும் கண்ணனை,

குறைஒன்றும் இல்லாத
கோவிந்தா!

என்று அழைக்கிருர்கள். இதனுல் இவர்கள் இறைவனுடைய குண பூர்த்தியில் ஈடுபடுகிருர்கள் என்பது தெளிவு.

இப்படிக் கண்ணனுடைய குணங்களில் ஈடுபடுகிறவர்கள் அவ னுடைய உறவையும் நன்ருக உணர்ந்திருக்கிருர்கள். உறவு என்ருல், ஆய்க் குலத்தில் கண்ணன் பிறந்திருக்கும் அந்தச் சரீர உறவு

அல்ல; ஆத்ம சம்பந்தத்தையே, ஆன்ம உறவையே வற்புறுத்து கிருர்கள்.

தாங்கள் பிழைகள் செய்திருக்கக்கூடும், அதற்காக அவன் கோபித்துக்கொள்ள வேண்டாம் என்ற கருத்தை உள்ளிட்டு,

சிறிஅரு ளாதே

என்றும் விண்ணப்பித்துக் கொள்கிருர்கள்.

கடைசியாகத் தங்கள் நோக்கத்தைக் குறிப்பிடும்போது 'பறை' என்றுதான் இப்போதும் மறைமுகமாகவே பேசுகிருர்கள். தங்கள் உள்ளத்தைக் கண்ணன் உய்த்துணர்ந்து கொள்ளும்படி,

இறைவா! நீ தாராய்
பறையேலோர் எம்பாவாய்

என்றுதான் கூறி முடிக்கிருர்கள்.

அறிவொன்றும் இல்லாத இவர்கள் குருகுல வாசம் செய்து ஒரு வகை ஞானத்தையும் அடையவில்லையாம். நிழலுக்காகவும் பள்ளி யில் ஒதுங்கியதில்லை. கறவைகளின் பின்னேதான் இவர்கள் குருகுல வாசம்! மேய்ச்சல் காடுதான் இவர்கள் பாடசாலை! இப்படியெல்லாம் வாழ்க்கை நடத்தும் எங்களுக்குச் சாதனம் என்ற சம்பத்து ஏது? அந்தச் சம்பத்தைக்கொண்டு நாங்கள் உன் அருளைப் பெற்றுக் கொள்ளவும் விரும்பவில்லை என்கிருர்கள்.

இவர்கள் பசுபாலனம் செய்கிருர்கள் அல்லவா? அதைத் தர்ம மாகச் செய்யவில்லை. 'வயிற்றுப் பிழைப்பை முன்னிட்டுத்தான் செய் கிரும்' என்று ஒப்புக்கொள்கிருர்கள், காட்டிலே முனிவர்களும் இருப்பார்கள். வேடர்களும் இருப்பார்கள். 'நாங்கள் முனிவர்க ளுடன் பழகுவதில்லை; வேடர்களுடன்தான் பழகுகிருேம்' என்பதை யும் தைரியமாக ஒப்புக்கொள்கிருர்கள்.

'கானம் சேர்ந்து உண்போம்' என்று கூறுவதால், குளித்து உண் பதும் இல்லை என்ற குறிப்பையும் புலப்படுத்துகிருர்கள் எனலாம். 'உண்போம்' என்று கூறும் தோரணையிலிருந்து, அதிதி பூஜை என்ற முறையில் விருந்தினர்களை உபசரித்து அத்தகைய அற வழி யில் நின்றவர்களும் இல்லை இவர்கள் எனலாம்.

சுருங்கச் சொன்னுல், தங்களிடம் கர்மம் ஞானம் பக்தி ஆகிய வற்றுள் ஒரு சாதனமும் இல்லை என்று துணிந்து சொல்லுகிருர்கள். எனினும் கண்ணனைப் பெற்றெடுத்த குலத்திற் பிறந்து இவனுடன் ஆன்ம உறவு பெற்ற புண்ணியம் தங்கள் உடைமைதான் என்பதை மறுக்கத் துணியவில்லை. ஸாக்ஷாத் புண்ணியம் கண்ணன்தானே! வெண்ணெயும் பாலும் அன்பும் ஊட்டி அல்லவா இப் 'புண்ணிய'த்தை வளர்த்து வருகிருர்கள்?

இந்தப் 'புண்ணிய'த்திற்கும் தங்களுக்கும் உள்ள ஆன்ம உறவைக் குறிப்பிடும்போது,

உறவேல் நமக்குஇங்கு
ஒழிக்க ஒழியாது

என்று அழுத்தம் திருத்தமாகச் சொல்லுகிறார்கள். இந்த உறவை இறைவனாகிய கண்ணனாலும் ஒழிக்கமுடியாது என்கிறார்கள்.

## உறவேல் நமக்கு இங்கு ஒழிக்க ஒழியாது!

கறவைகள் பின்சென்று
கானம்சேர்ந்து உண்போம்;
அறிவொன்றும் இல்லாத
ஆய்க்குலத்து உன்தன்னைப்
பிறவி பெறுந்தனை
புண்ணியம் யாம்உடையோம்;
குறைவுஒன்றும் இல்லாத
கோவிந்தா! உன்தன்னோடு
உறவேல் நமக்குஇங்கு
ஒழிக்க ஒழியாது;
அறியாத பிள்ளைகளோம்,
அன்பினால் உன்தன்னைச்
சிறுபேர் அழைத்தனவும்
சீறிஅரு ளாதே;
இறைவா! நீ தாராய்
பறையேலோர் எம்பாவாய். (28)

### அரும்பதவுரை

கானம் சேர்ந்து: காடு சென்று. ஆய்க் குலத்து: ஆய்க் குலத்தில். உன்தன்னை: உன்னை. பிறவி பெறுந்தனை: பிறவியாகப் பிறக்கும் அளவு. உறவேல்: உறவோ என்றால். அறியாத பிள்ளைகளோம்: அறியாத சிறு பெண் பிள்ளைகளாய் இருக்கிற நாங்கள். சிறுபேர் அழைத்தனவும்: சிறு பெயரை இட்டு அழைத்தது பற்றியும். சீறி அருளாதே: அருள்கொண்டு சீறுமல் இரு.

விளக்கம்

இவர்கள் பிரார்த்தித்ததைக் கொடுப்பதற்கு இவர்கள் செய்த உபாயம்தான் என்ன? இப்படி ஒரு கேள்வியைக் கண்ணன் கேட்க, அதற்குப் பதிலாக வருகிறது இந்தப் பாசுரம். உபாயம் ஒன்றுமே நாங்கள் மேற்கொள்ளவில்லை என்றுதான் பதில் சொல்லுகிறார்கள்.

பசுபாலனம் செய்கிறார்கள் என்பது உண்மைதான்; ஆனால் அது தருமம் என்று அப்படிச் செய்யவில்லையாம். கறவைகளை மேய்த்தால் வயிற்றுக்குச் சோறு கிடைக்கும் என்றுதான் அப்படிச் செய்கிறார்களாம். இப்படிப்பட்டவர்களுக்குக் கர்மானுஷ்டானம் முதலான நியமங்கள் எப்படிச் சித்திக்கும்?

அறிவொன்றும் இல்லாத இவர்களுக்குக் கிருஷ்ண பக்தி செய்ய வேண்டுமென்ற ஒரே அறிவு இருக்கத்தான் செய்கிறது! 'எல்லாரும் இன்புற்றிருக்க நினைப்பதுவே அல்லாமல் வேறொன்று அறியேன் பராபரமே!' என்று சொன்ன தாயுமானவரும் தமக்கு ஒரே அறிவு இருந்தால் போதும் என்றுதானே சொல்லுகிறார்?

## 29. உயிர்நிலைப் பாட்டு

தங்கள் தனிப்பெரு நோக்கத்தைப் 'பறை பறை' என்று மறைத்துப் பேசி வந்த ஆய்ச்சியர் இந்தப் பாசுரத்திலே அதன் புதை பொருள் இதுதான் என்று கண்ணனிடம் தெளிவாகச் சொல்லி விடுகிறார்கள். இதில் திருப்பாவையின் பரம தாத்பரியம் தெளிவாக்கப்படுகிறது.

'சிற்றஞ்சிறு காலை' என்று தொடங்குகிறது இந்தப் பாசுரம். 'சிறு பிள்ளைகளாகிய நாங்கள் காலையில் வரவில்லை, சிறு காலையிலும் வரவில்லை; சிற்றஞ் சிறுகாலை என்று சொல்லத்தக்க அதிகாலை வேளையிலேயே எழுந்து பனியைப் பாராமல், குளிரைப் பாராமல் வந்திருக்கிறோம். இதிலிருந்தே எங்கள் மனநிலையை நீ தெரிந்துகொள்ளலாம்' என்பது குறிப்பு.

'மாடு மேய்த்துப் பிழைக்கும் குலத்தில் பிறந்திருக்கிறாய் நீ. எங்களுடைய கைங்கரியத்தைப் பெற்றுக்கொண்டால்தானே உன்னுடைய இந்தப் பிறவி பயன் பெறுவதாகும்?' என்கிறார்கள்:

> பெற்றம்மேய்த்து உண்ணும்
> குலத்தில் பிறந்து நீ
> குற்றேவல் எங்களைக்
> கொள்ளாமற் போகாது!

ராஜாதி ராஜனும் தேவாதி தேவனுமாகிய பரம்பொருள் மாடு மேய்க்கும் குலத்தில் பிறந்திருக்கிறான் என்றால், அதன் பயன் தன்

எளிமையைப் புலப்படுத்தும் முறையில் தங்களை ஆட்கொள்வது தான் என்கிருர்கள். இறைவன் பிறப்பிலி—அதாவது, பிறப்பு இல்லாதவன். அவன் பிறக்கிருன். தாழ்ந்தார்க்கும் முகம் காட்டவே பிறக்கிருன். இந்த நோக்கம் நிறைவேறுவதற்காகத் தங்களைப் பணி கொள்ள வேண்டியது மிகவும் அவசியமானது என்கிருர்கள்.

'உலகம் கோன் இல்லாத மந்தை அல்ல!' என்பது பரம ஞானிகள் கண்ட உண்மை. இந்தக் கோனைப் 'பேராயன்' என் கிருர் ஆழ்வார்களில் ஒருவர். பேராயன் 'சிற்ருயர் சிங்க'மாகத் தோன்றி யிருக்கிருன் இப்போது, 'பொன்னுடை புழுதி படிய லாகாதே!' என்று பரமபதத்திலேயே தங்கிவிடவில்லையாம். இந்த உலகிலும் மறைகள் ஓதிக் காணுத நிலையில் மாடு மேய்ப்பவர் காணும்படி வந்திருக்கிருனும். அப்படியிருக்க, 'குற்றேவல் எங்களைக் கொள்ளாமற் போகாது' என்கிருர்கள். 'போகாது' என்ருல் போக லாகாது என்று பொருள்படும்.

இப்படி வேண்டிக்கொண்ட ஆய்ச்சியரை நோக்கி, 'பெண் களே! அது இருக்கட்டும்; நீங்கள் மார்கழி நீராட்டத்திற்கும் நோன் பிற்கும் உபகரணமாய்க் கேட்டவற்றைத் தருகிறேன்; பறை முதலி யன தருகிறேன்' என்கிருன் கண்ணன். அதுகேட்ட ஆய்ச்சியர்கள் தாங்கள் 'பறை' என்று சொன்னதன் உட்கருத்து வேறு என் கிருர்கள். 'பறை பறையல்ல!' என்கிருர்கள்.

*இற்றைப் பறைகொள்வான்*
*அன்றுகாண், கோவிந்தா!*

என்கிருர்கள்.

'அப்படியாளுல் நீங்கள் விரும்பும் பறைதான் எது?' என்று கண்ணன் கேட்கக் கூடுமல்லவா? அதற்குப் பதில் சொல்லு கிருர்கள் ஆய்ச்சியர்கள். 'உன்னிடம் நாங்கள் யாசிப்பது உன்னைத் தான்!' என்கிருர்கள். 'நாங்கள் விரும்புகிற பறை உனக்கு நாங்கள் ஆட்செய்ய வேண்டும் என்பதுதான்' என்கிருர்கள்.

*உனக்கே நாம் ஆட்செய்வோம்*

என்று ஐயந்திரிபு இல்லாமல் பேசுகிருர்கள்.

'உன் தன்னேடு உற்ருேமே ஆவோம்!' என்று அந்த உறவை உறுதிப்படுத்திக் கொள்கிருர்கள்.

*உற்ருேமே ஆவோம்;*
*உனக்கே நாம் ஆட்செய்வோம்*

என்று தங்கள் இதய ஏட்டிலே எழுதா மறையாக எழுதிக் கொண் டிருந்ததை அப்படியே படித்துக் காட்டுகிருர்கள்.

இந்த இப்பிறவிக்குத்தானு இவர்கள் உறவுகொள்ள விரும்பு கிருர்கள், குற்றேவல் புரிய விரும்புகிருர்கள்?

எற்றைக்கும் ஏழ்ஏழ்
பிறவிக்கும் உன்தன்னோடு
உற்றோமே ஆவோம்
உனக்கேநாம் ஆட்செய்வோம்!

என்று பிரார்த்தனை செய்து கொள்ளுகிறார்கள்.

'இந்தக் "காமம்" தவிர வேறு காமங்களை இறைவா! நீ மாற்றி அருள வேணும்' என்று முடிவாகப் பிரார்த்தித்துக் கொள்கிறார்கள். 'இதுதான் எங்கள் அந்தரங்க விருப்பம்; பறை என்பதும் நோன்பு என்பதும் வியாஜம்தான்!' என்கிறார்கள்.

இந்த உத்தேசத்தைத் தெளிவுபடுத்திக் காட்டுவதற்குப் பீடிகையாகத்தான்,

பொற்றாமரைஅடியே
போற்றும் பொருள்கேளாய்

என்கிறார்கள்.

மற்றைப்படி 'ஒரு பிரயோஜனம் கொண்டுபோக வந்தோம் அல்லோம்' என்று சொல்லுகிறார்கள். 'எல்லா உறவும் நீயே! நீ உகந்தபடியே பணி செய்து கொண்டிருப்போம்' என்று திருப்பாவையின் தனிப்பெருங் கொள்கையை முடிவாக வெளியிடுகிறார்கள் இப் பாசுரத்திலே.

## உற்றோமே ஆவோம்; உனக்கே நாம் ஆட்செய்வோம்

சிற்றஞ் சிறுகாலே
வந்துஉன்னைச் சேவித்து,உன்
பொற்றாமரைஅடியே
போற்றும் பொருள்கேளாய்;
பெற்றம்மேய்த்து உண்ணும்
குலத்தில் பிறந்துநீ
குற்றேவல் எங்களைக்
கொள்ளாமற் போகாது;
இற்றைப் பறைகொள்வான்
அன்றுகாண், கோவிந்தா!
எற்றைக்கும் ஏழ்ஏழ்
பிறவிக்கும் உன்தன்னோடு

உற்றோமே ஆவோம்;
உனக்கேநாம் ஆட்செய்வோம்;
மற்றைநம் காமங்கள்
மாற்றேலோர் எம்பாவாய். (29)

அரும்பதவுரை

சிற்றஞ்சிறுகாலே: மிக்க விடியற் காலத்திலே. போற்றும் பொருள் கேளாய்: நாங்கள் போற்றுவதன் பொருளையும் பயனையும் நீ கேட்பாய். பெற்றம்: மாடுகள். குற்றேவல் எங்களைக் கொள்ளாமற் போகாது: எங்களைக் குற்றேவல் கொள்ளாமல் கைவிடுவது உனக்குத் தகாது. இற்றை: இன்று; இப்போது. பறை: கொடுக்கப்படுகிற பறையை. கொள்வான் அன்றுகாண்: கொள்ளும் பொருட்டாக அன்று. எற்றைக்கும்: எப்போதும். ஏழ்ஏழ் பிறவிக்கும்: உன்னுடைய எல்லா அவதாரங்களிலும். உன்தன்னோடு: உன்னோடு. உற்றோமே ஆவோம்: (இப்போது இருப்பதுபோல்) உன்னோடு உறவு உடையவர்களாகப் பொருந்தியிருக்க வேணும். உனக்கே நாம் ஆட்செய்வோம்: உனக்கே நாங்கள் அடிமை செய்பவர்களாகவும் இருக்கவேணும். மற்றை நம் காமங்கள்: வேறுபட்ட எங்கள் விருப்பங்களை. மாற்று: நீ மாற்றி அருளவேணும்.

விளக்கம்

'பறை, பறை' என்று சொல்லிக்கொண்டு வந்தவர்கள், அந்தப் பறை வியாஜம்தான் என்பதைத் தெளிவாக முடிவுகட்டிப் பேசுகிறார்கள் இப்போது. 'பறை' என்று நோன்பு நோற்பதைக் குறிப்பிட்டார்கள். நோன்பிற்கு வேண்டிய பறை முதலியவற்றைக் கண்ணன் தரவேண்டும் என்றார்கள். இப்போது கண்ணன் அன்பே தாங்கள் கருதிய பொருள் என்று உறுதி கூறுகிறார்கள். அன்பிலே மலரும் பணிதான் தங்களுடைய வேண்டுகோளின் உயிர்நிலை என்கிறார்கள்.

திருப்பாவையின் தனிப்பெரு நோக்கம் இந்த உயிர்நிலைப் பாட்டில் வெளியிடப்படுகிறது.

# 30. பாசுரம் கற்பவர் அடையும் பயன்

மூந்திய பாட்டுடன் திருப்பாவை முற்றுப் பெற்றது என்றே சொல்லலாம். பாவனை முதிர்ச்சியால் நோன்பு நோற்றவள்தானே ஆண்டாள்? எனவே இந்தப் பாசுரங்களைக் கற்பவர்களும் தங்கள் மனோபாவத்தின் விளைவாக நோன்பு நோற்றவர்களைப் போல் பயன் பெறுவார்கள் என்று இந்த முப்பதாவது ப்ாசுரம் தெரிவிக்கிறது.

நோன்பு நோற்றவர்களின் அடிப்படைக் கருத்து இறைவனேடு உறவு கொண்டு அவனுக்கே பணி செய்வதுதான்; என்றென்றும் பணி செய்வது; மற்றைக் காமங்களை யெல்லாம் இறைவன் அருளால் ஒரே காமமாக மாற்றிக்கொண்டு ஒரு முகமாய்ப் பணி புரிவது. இந்தப் பாசுரங்களை ஓதி ஓதி இன்புறுவோர் உள்ளங்களிலும் இந்தப் பாவைப் பாட்டின் பரம தாத்பரியம்—உயிர்நிலைக் கொள்கை—ஊறிக் கிடக்கும் என்பதில் ஐயமில்லை. எனவே, இந்தப் பிரபந்தம் கற்பவர்கள் எல்லாம்—அவர்கள் எக் குலத்தினராயினும் எந்த நாட்டினராயினும்—எங்கும் எப்போதும் திருவருள் பெற்றவர்களாய் நல்லின்ப வாழ்க்கை வாழ்வார்கள் என்று பலன் சொல்லுகிறது இந்தப் பாசுரம்.

கண்ணனைக் கோபியர்கள் சென்று இறைஞ்சி அவர்கள் விரும்பிய பறை—அதாவது கைங்கரியச் செல்வத்தை—கொண்டார்கள் என்று முதல் மூன்று அடிகளில் தெரிவிக்கிறது இப் பாசுரம். கண்ணனை 'வங்கக் கடல் கடைந்த மாதவன்' என்றும், 'கேசவன்' என்றும் தெரிவிக்கிறது. தேவர்களுக்குத் தன் திருமேனி நோகப் பாடுபட்டு, காரியசித்தி விளைத்தவன் கண்ணன் என்பது கருத்து. அவர்கள், கடைந்த அமுதத்தை விரும்பினர்கள். கடலில் கிடந்த அமுதமாகிய பெருமானை விரும்பவில்லை. எனினும் விரும்புவார் விரும்புவனவற்றை யெல்லாம் கொடுக்கும் கற்பகம்போல் விண்ணவர் விரும்பிய அந்தப் பயனையும் அவர்களுக்குக் கொடுத்தான் ஆண்டவன். இந்தக் கோபியரோ 'நாங்கள் விரும்பும் அமுதம் கண்ணன் தான்' என்ற மன நிலையுடன் நோன்பு நோற்க விரும்பிய பாக்கிய சாலிகள். விண்ணவர்களின் தன்னலத்தை முடித்துக் கொடுத்தவன் இவர்களுடைய கைங்கரிய விருப்பத்தை முடித்துக் கொடுத்தில் அதிசயம் ஒன்றும் இல்லை என்பதை இப் பாசுரத்தின் முதல் அடியே சுட்டிக் காட்டுகிறது.

கண்ணனைப் பாடி வரும் பெண்களை இப் பாசுரத்தின் இரண்டாவது அடி 'திங்கள் திருமுகத்துச் சேயிழையார்' என்று குறிப்பிடுகிறது. குளிர்ந்த அழகிய முகத்தை உடையவர்கள் என்பதால் இவர்களுடைய இயற்கையழகு சோபிக்கும் விதம் குறிக்கப்படுகிறது. அழகனைப் பாடும் அழகியர் அல்லவா? கண்ணனைப் பார்த்துப் பார்த்துக் கண்ணழகு பெற்ற யசோதைபோல் அவனை நினைத்து நினைத்துச் சித்தத்தின் அழகு பெற்றுக் கொண்டவர்கள் இவர்கள். அந்த அகத்தின் அழகு முகத்திலே வீசுகிறது சந்திரிகை போல; இத்தகைய, அழகைத் தங்களுக்கு இசைந்த ஆபரணங்களாலும் அதிகரிக்கச் செய்து கொண்டவர்கள் இந்தப் பெண்கள் என்பது தோன்ற இவர்களை,

*திங்கள் திருமுகத்துச்*
*சேயிழையார்*

என்கிறது பாசுரம்.

இந்தப் பாசுரத்திலே பிரஸ்தாபிக்கப்படும் ஆபரணங்கள் இவர்கள் விரும்பியவாறு கண்ணனும் நப்பின்னைப் பிராட்டியும் கூட இருந்து பூட்டியவை என்பது குறிப்பு. அதனால் இவர்களுக்கு ஏற்பட்டிருக்கும் மகிழ்ச்சியும் இவர்களது 'திங்கள் திருமுகத்'திலே ஜொலிக்கக் காணலாம். மேனியழகும் உள்ளத்தின் அழகும் போட்டியிடச் சென்று இவர்கள் கண்ணனை இறைஞ்சுகிறார்கள்; நப்பின்னையை முன்னிட்டு வணங்குகிறார்கள்.

இவர்கள் விரும்பியதைப் பெற்றார்கள் என்பதை 'அங்கு அப் பறை கொண்ட ஆறு' என்ற சொற்றொடர் வெளியிடுகிறது. 'அங்கு' என்றால், கிருஷ்ண சந்நிதியில்—ஆய்ப்பாடியில் நந்தகோபன் மாளிகையில், சிங்காசனத்தில் யசோதை இளஞ்சிங்கம் கம்பீரமாக இருந்த இருப்பிலே, ஊராருக்காகச் சொன்ன வார்த்தைதான் பறை என்பது. வாய் 'பறை' என்று சொல்ல, உள்ளம் 'உனக்கே நாம் ஆட்செய்வோம்' என்று பாடிக்கொண்டே இருந்தது. 'இது இவர்கள் பறை கொண்ட விதம்!' என்கிறது இப்பாசுரம்.

இப்படிப் பாவைப் பிரபந்தம் பிறந்த கதையைச் சுருங்க உணர்த்திவிட்டு, இன்னார் செய்தது இந்தப் பிரபந்தம் என்பதைத் தெரிவிக்கிறது இப்பாட்டு. கோதை தன்னை இன்னார் மகள் என்று தெரிவித்துக் கொள்ளுகிறாள். 'என் தந்தை பட்டர்பிரான்' என்கிறாள். தாமரை மாலை அணிந்திருக்கும் பட்டர்பிரான் என்கிறாள். அழகிய ஸ்ரீவில்லிபுத்தூர்ப் பட்டர்பிரான் என்கிறாள். தன்னைப் 'பட்டர்பிரான் கோதை' என்று அறிமுகப்படுத்திக் கொள்கிறாள்.

இந்தப் 'பட்டர்பிரான் கோதை' கோபியர் கண்ணனை அடைந்து பேறுபெற்ற கதையைத்தானா சொல்லுகிறாள்? அந்தத் 'திருமுகத்துச் சேயிழையார்' கூட்டத்தில் தானும் ஒருத்தியாகக் கலந்துகொண்டு கைங்கரியப் பிரார்த்தனை செய்த கதையைத்தான் இந்தப் பிரபந்தத்தில் சொல்லுகிறாள். கோபிமாருடைய அவஸ்தையை இவள் அடைந்து பாடும் கதைதான் இது. கோதை தான் அடைந்த பாட்டைப் பாடும் பாட்டு இது.

இந்தப் பிரபந்தத்தைச் 'சங்கத் தமிழ்மாலை' என்று குறிப்பிடுகிறது இப்பாசுரம். சங்ககாலம் தொட்டு வளர்ந்து வந்த தமிழிலே செய்த பாமாலை என்று சாதாரணமாகப் பொருள் சொல்லத் தோன்றும். இந்தப் பொருள் தவறன்று எனினும், இங்கே சங்கமாகக் கூடி—அதாவது கூட்டமாயிருந்து—அன்பர்கள் பாடிப் பேறு பெற வேண்டிய பிரபந்தம் இது என்று பொருள் கொள்வதுதான் சிறப்பாகும். கோபியர்கள் திரள் திரளாக அநுபவித்த பக்தி அநுபவத்தைச் சொல்லும் பாசுரங்களை ஓதுவோரும் கூட்டமாகக் கூடி அநுபவிப்பதே முறையாகும். கூடிப் பாடி ஆடிப் பரவசமாய் அநுபவிக்க வேண்டிய பிரபந்தம்.

இப்பிரபந்தத்தின் முப்பது பாட்டில் ஒரு பாட்டையும் நழுவ விடாமல் அநுபவிக்க வேண்டும் என்ற கருத்தைச் சுட்டிக் காட்டுகிறது 'முப்பதும் தப்பாமே' என்ற சொற்றொடர்.

'எங்கும் திருவருள் பெற்று இன்புற'ச் செய்வது இது என்கிருள். சயாம் முதலான வெளிநாடுகளுக்குச் சென்ற தமிழர்களும் இதை அங்கும் பாடி அநுபவித்தனர் என்பது உண்மைதானே.

## எங்கும் திருவருள் பெற்று இன்புறுவர்

வங்கக் கடல்கடைந்த
  மாதவனை, கேசவனை,
திங்கள் திருமுகத்துச்
  சேயிழையார் சென்றுஇறைஞ்சி,
அங்குஅப் பறைகொண்ட
  ஆற்றை, அணிபுதுவைப்
பைங்கமலத் தண்தெரியல்
  பட்டர்பிரான் கோதைசொன்ன
சங்கத் தமிழ்மாலை
  முப்பதும் தப்பாமே,
இங்குஇப் பரிசுஉரைப்பார்,
  ஈர்இரண்டு மால்வரைத்தோள்
செங்கண் திருமுகத்துச்
  செல்வத் திருமாலால்,
எங்கும் திருவருள்பெற்று
  இன்புறுவர், எம்பாவாய். (30)

### அரும்பதவுரை

வங்கக் கடல்: கப்பல்களையுடைய கடல்; (இங்கே) திருப்பாற்கடல். 'கடல்' என்றதும் கப்பல்கள் ஓடுகிற நினைவும் சேர்ந்து வருவதால் பாற்கடலையும் வங்கக் கடல் என்கிருள் ஆண்டாள். திங்கள் திருமுகத்துச் சேயிழையார்: சந்திரபிம்பம் போன்ற அழகிய முகத்தை உடையவர்களும், அழகிய அணிகளை அணிந்திருப்பவர்களுமான சிறுமியர். இறைஞ்சி: வணங்கி. அங்கு: அங்கே; கண்ணன் திருமுன்பே. அப்பறை: பறை என்பதை வியாஜமாகக் கொண்டு இவர்கள் பெற்ற புருஷார்த்தமாகிய பெரும்பேறு. ஆற்றை: அந்த விதத்தை; அந்தச் செய்தியை. அணி புதுவை: அழகிய ஸ்ரீவில்லிப்புத்தூர். பைங்கமலத் தண்தெரியல் பட்டர்பிரான்: பசுமை பொருந்திய தாமரை மலர்களால் ஆன குளிர்ந்த மாலையையுடைய பெரியாழ்வார். பட்டர்பிரான் கோதை:

பெரியாழ்வாரின் அருமை மகளான ஆண்டாள். சங்கத் தமிழ் மாலை: கூட்டம் கூட்டமாக அநுபவிக்க வேண்டிய தமிழ்ப் பாமாலை; சங்கத் தமிழின் விளைவாகத் தோன்றிய பாமாலை என்றும் பொருள் கூறலாம். தப்பாமே: குறையாமல்; தப்பாமல். இங்கு: இவ்வுலகில்; இக்காலத்தில். இப்பரிசு: இவ்வண்ணமாக. ஈர் இரண்டு மால்வரைத்தோள்: நான்கு பெரிய மலை போன்ற தோள்கள்.

விளக்கம்

இப் பிரபந்தம் கற்பவர் பிராட்டியாலும் எம்பெருமானாலும் எங்கும் எப்போதும் அருள் செய்யப்பெற்று மகிழ்ந்து இருப்பர் என்று இப்பாசுரம் பயனைத் தெரிவிக்கிறது. இதைப் 'பலச்ருதி' என்பர். ஆண்டாள் செய்தது இப்பிரபந்தம் என்பதைத் தெரிவிப்பதால் இதைத் திருநாமப் பாட்டு என்றும் கூறுவர்.

## முப்பது மலர்களால் ஒரு பாமாலை

முதலாவது பாட்டு 'விருப்பம் உள்ளவர்கள் எல்லாம் வந்து சேருங்கள்!' என்று கூவியழைக்கிறது. 'சேர வாரும் செகத்தீரே!' என்ற முறையில் வரம்பு இன்றி அனைவரும் கிருஷ்ண பக்திச் செல்வத்தைப் பொதுவாக அநுபவிக்கலாம் என்பது உட்பொருள்.

இரண்டாவது பாசுரத்தில் நோன்பிற்கு உறுப்பான நியமங்கள் பிரஸ்தாபிக்கப்படுகின்றன. நியமம் இல்லாமல் எந்தப் பெரிய காரியத்தைத்தான் சாதிக்கமுடியும்?

நாம் வாழ, நாடு வாழவேணும் என்ற குறிப்பைப் புலப்படுத்துகிறது மூன்றும் பாசுரம். நாடு செழிக்க மழை பெய்யவேணும் என்கிறது நாலாம் பாசுரம். நமது நாகரிகம் ஆற்றங்கரை நாகரிகம் தானே, விவசாய நாகரிகம்தானே? வானம் பார்த்து வாழ்வு நடத்துகிறோம்—சரீர வாழ்வும்தான். ஆன்ம வாழ்வும்தான். பக்தி வாழ்விலே கிடைக்கும் சக்தி இயற்கைச் சக்திகளையும் ஏவிக் கூவிப் பணி கொள்ளும் பேராற்றல் வாய்ந்தது என்பது உட்பொருள்.

எந்தப் பெருங் காரியத்திற்கும் இடையூறு வருமே என்றால், இடையூற்றுக்கு இடையூறாக உதவுகிறது பகவந் நாம சங்கீர்த்தனம் என்ற கருத்தை வெளியிடுகிறது ஐந்தாம் பாட்டு.

ஆறும் பாசுரம் முதல் பதினைந்தாம் பாசுரம் வரை ஒருவரை ஒருவர் எழுப்பிக்கொண்டு எல்லாரும் திரண்டு நந்தகோபன் மாளிகையை நோக்கிப் போவதைக் காண்கிறோம். இப்பாசுரங்களில், பக்தியால் ஒன்றுபட்டவர்கள் பல்வேறு மனநிலைகளும் குணாதிசயங்களும் உடையவராக நம் கண்முன் வருகிறார்கள்.

பதினாறும் பாசுரத்தில் கோயில் காப்பானையும் தோரண வாசல் காப்பானையும் உணர்த்துகிறார்கள்; அனுமதி பெற்று உள்ளே போகி

ளர்கள். பதினேழாம் பாசுரத்தில் நந்தகோப தம்பதியையும் சகோதரர்களான கிருஷ்ண பலராமர்களையும் துயில் உணர்த்துகிறார்கள். அடுத்த பாசுரத்தில் நப்பின்னையை முன்னிட்டுக் காரியசித்தி பெற வேணுமென்று இப்பிராட்டியைத் துயில் உணர்த்துகிறார்கள்.

பத்தொன்பதாம் பாட்டிலும் இதற்கு அடுத்த பாட்டிலும் 'நான் முன்னே! நான் முன்னே!' என்று போட்டியிட்டு இவர்களுக்கு அருள் புரிய முற்படும் நப்பின்னைப் பிராட்டியும் கண்ணபிரானும் துயில் உணர்த்தப் பெறுகின்றனர். இருபத்தொன்றும் பாசுரமும் இருபத்திரண்டாம் பாசுரமும் இவர்கள் கண்ணனின் குணங்களுக்குத் தோற்று வந்ததையும், அபிமான துரபிமானங்கள் குலைந்து கடாட்சமே குறிக்கோளாகக் கொண்டு வந்ததையும் குறிப்பிடுகின்றன. இருபத்து மூன்றும் பாட்டில் வீர சிங்காசனத்தில் வீற்றிருந்து வந்த காரியத்தைக் கண்ணன் ஆராயவேணும் என்கிறார்கள். அடுத்த பாட்டிலே பல்லாண்டு பாடுகிறார்கள். பிறகு யாசித்து வந்ததாகச் சொல்லி அப்பால் நோன்பின் உபகரணங்களை அபேட்சிக்கிறார்கள். இருபத்தேழில் சம்மானம் வேண்டுகிறார்கள். கடைசியாக உறவு சொல்லி, உள்ளத்தைத் திறந்து காட்டுகிறார்கள். முடிவில் வருகிறது பலச்ருதி.

கோதை பிறந்தவூர், கோவிந்தன் வாழும்வூர்,
சோதி மணிமாடம் தோன்றும்வூர்—நீதியால்
நல்லபத்தர் வாழும்வூர், நான்மறைகள் ஓதும்வூர்,
வில்லிபுத்தூர் வேதக்கோன் ஊர்.

பாதங்கள் தீர்க்கும், பரமன் அடிகாட்டும்,
வேதம் அனைத்துக்கும் வித்தாகும்—கோதைதமிழ்
ஐயைந்தும் ஐந்தும் அறியாத மானிடரை
வையம் சுமப்பதும் வம்பு.

திருவாடிப் பூரத்துச் செகத்துதித்தாள் வாழியே,
திருப்பாவை முப்பதும் செப்பினாள் வாழியே,
பெரியாழ்வார் பெற்றெடுத்த பெண்பிள்ளை வாழியே,
பெரும்பூதூர் மாமுனிக்குப் பின்னானாள் வாழியே,
ஒருநூற்று நாற்பத்து மூன்றுஉரைத்தாள் வாழியே,
உயர் அரங்கற் கேகன்னி உகந்தளித்தாள் வாழியே,
மருவாரும் திருமல்லி வளநாடி வாழியே,
வன்புதுவை நகர்க்கோதை மலர்ப்பதங்கள் வாழியே.

ஆண்டாள் திருவடிகளே சரணம்